# சாக்லேட்

• ஆவரேஜ்

காதலியின் பாதக் கொலுசிலிருந்து தெறித்து விழுந்த சதங்கை மணிகளைக் கழுத்தில் அணியும் அளவுக்கு நெக்குருகி நேசிக்கும் பிரசாந்த், அதே காதலியை வேறொரு மாப்பிள்ளைக்கு மணம் முடித்துக் கொடுக்க வேண்டிய இக்கட்டில் சிக்கிக் கொள்ளும் எவர்கிரீன் காதல் கதை.

கல்லூரித் துள்ளல் பின்னணியில், கொட்டாவிக்கு வாய்ப்புத் தராமல் படமாக்கியிருக்கும் விதத்தைப் பாராட்டலாம். என்றாலும் கதாநாயகியில் ஆரம்பிக்கும் காஸ்ட்யூம் கஞ்சத்தனம், 'டபுளு ஆக்ட்டு' கொடுத்து 'கலைச்சேவை' புரிந்திருக்கும் மும்தாஜில் தொடர்ந்து, படம் முழுக்க திகிலாய் நம்மைச் சங்கடப்படுத்துவதை எப்படிச் சகித்துக் கொள்வது?

நேர்மையான முரட்டுத்தனத்துடன் கலக்கல் கல்லூரி மாணவராக அறிமுகமாகும் பிரசாந்த், காதல் வயப்பட்ட பின்பு இயல்பாய் உருகி, காதலை மறுக்க வேண்டிய சூழ் நிலையில் மௌனமாய் மருகி, அசத்துகிறார்.

கவர்ச்சியை நம்பி களமிறங்கியிருக்கும் அறிமுக நாயகி ஜெயாரே, தனது துரு துரு கண்களில் இன்னும் கொஞ்சம் உணர்ச்சிகளைக் கொட்டியிருந்தால், 'இன்னொரு ஜோதிகா' என்று பட்டம் கொடுத்திருக்கலாம்.

படத்தில் செஞ்சுரி அடித்திருப்பவர் சுஹாசினி. நடிப்பில் பிரகாஷ் ராஜின் பாணியைப் பிரதிபலித்தாலும், கள்ளென்று கத்திரி வெயில் கணக்காய் 'ஆன்டி' ரோலில் அதிர வைக்கிறார்.

ஆபாசம் மீது பட்டுக்கோட்டை பிரபாகருக்கு அப்படியென்ன பாசமோ, இரட்டை அர்த்த வசனங்களை இஷ்டத்திற்குப் பிரயோகித்திருக்கிறது இவரது பலவீன பேனா.

பாடல்கள் ஒவ்வொன்றும் எம்டீவி இடிகளாய், டெவில் டெசிபல்களில் டியூன்களைப் படுகொலை செய்து விடுகின்றன. ஆனாலும் 'மலமல மருதமல' மட்டும் அனுராதா ஸ்ரீராம், ஹைனா வெல்வெட் குரல்களால் தப்பித்து விடுகிறது.

விபத்தில் சிக்கி போஸ்ட் மார்டம் வரை போய்விடும் பிரசாந்த், திக்திக் திருப்பமாய்த் திரும்பி வரும் க்ளைமாக்ஸ் லாஜிக் ஓகே.!

நேர்த்தியான பாத்திரப் படைப்பும், பக்குவமான இயக்கமும் கை கொடுத்திருக்கும் நல்ல கதைக்கு, சதையின் சப்போர்ட் எதற்கு என்பது புரியாத நிலையில், சாக்லேட், குடும்பத்தோடு சுவைக்க முடியாத கவர்ச்சி டாட் காம்.

— விஷுவல்தாசன்



● பி.எம்.மாதவன், லால்புரம்

*? பிரதமர் தங்கள் இலாகாக்களை மாற்றி அமைத்துள்ளதால் சில மத்திய அமைச்சர்கள் அதிருப்தி அடைந்துள்ளது குறித்து..?*

! அமைச்சரவை உருவாக்குவதும் இலாகாக்களை மாற்றி அமைப்பதும் பிரதமர் - முதல்வர் ஆகியோருக்கு உள்ள தனி உரிமை. மனம் என ஒன்று இருக்கும்போது அதிருப்தியும் இருக்கவே செய்யும். ஆனால் அதை வாய்ப்பான நேரத்தில் பிரதமரிடம் தனிமையில் பேசித் தீர்த்துக் கொள்வதே நல்லது. பலரும் அறிய வெளிப்படுத்துவது அநாகரிகம் என்பதுடன் ஜனநாயக மரபுகளை மதிக்காத போக்கும் ஆகும்.

● அ. ராஜா ரஹ்மான், கம்பம்

*? இருபது ஆண்டுகள் பணிபுரிந்த பத்திரிகையாளர்கள் மறைந்தால் அவர்கள் குடும்பத்துக்கு இரண்டு லட்சம் ரூபாய் குடும்ப நிதியாக வழங்க வேண்டும் என்று செய்தித்துறை அமைச்சர் திருநாவுக்கரசு அறிவித்துள்ளது பற்றி..?*

! பத்திரிகையாளர்கள், தங்கள் பணியிடத்தில் வழங்கப்படும் ஊதியம் தவிர வேறு எவரிடமும் எவ்வித சலுகையோ வெகுமதியோ எதிர்பார்ப்பது நல்லதல்ல. அரசு வழங்கும் எச்சலுகையும் ஒரு தனிப் பிரிவினருக்கு மட்டுமின்றி அனைவருக்கும் பொதுவானதாக இருப்பதே முறை.

● கு. கணேசன், பனங்கோட்டூர்

*? 'அ.தி.மு.க., தி.மு.க. இரண்டையும் எதிர்த்துப் போட்டியிடுகின்ற உறுதி ம.தி.மு.க.வுக்கு மட்டுமே உண்டு' என்கிறாரே வைகோ?*

! அரசியல் உறுதி மட்டும் போதாது. நாட்டு நலன் குறித்த பரந்துபட்ட சிந்தனையுடன் சாணக்கியமும் தேவை.

● கே. கணேசன், சென்னை - 16

*? 'ஒரிஸ்ஸா மாநிலத்தில் பட்டினிச் சாவுகள் இல்லவே இல்லை. விஷ உணவை அருந்தியதால்தான் மக்கள் இறந்து போனார்கள்' என்று ஒரிஸ்ஸா முதல்வர் நவீன் பட்நாயக் சொல்கிறாரே?*

! அவர்கள் சாப்பிட்ட மாங்கொட்டை விஷமல்ல; அதில் படிந்திருந்த கொடிய பூஞ்சாளமே மரணத்துக்குக் காரணம். அப்படி பூஞ்சாளம் படிந்த உணவைச் சாப்பிடும்படியான நிர்ப்பந்தம் ஏன் ஏற்பட்டது? பட்டினியால்தானே? இதை ஏன் முதல்வரும் அதிகாரிகளும் மறைக்கிறார்கள்? தவறை ஒப்புக் கொள்ளும் துணிவும் கண்ணியமும் இல்லாததுதான் காரணம்.

# ம.தி.மு.க.வுக்கு மட்டும்தான் மன உறுதியாமே?...



• பெரிய தப்பு



• சாணக்கியமும்...

● எம். அசோக் ராஜா, அரவக்குறிச்சிப்பட்டி

*? 'மக்களின் நம்பிக்கையைக் காப்பாற்றும் விதத்தில் செயல்படுவேன்' என்கிறாரே கோவிந்தவாசன்?*

! மக்களின் 'நம்பிக்கை' என்பதைவிட எதிர்பார்ப்பு என்று சொல்லலாம். எதிர்பார்ப்புகளைச் சரியாகப் பூர்த்தி செய்வதால் மக்களின் நம்பிக்கையை த.மா.கா. தன்னால் பெற்றுவிடலாம்.

● சச்சின் சக்திவேல், மயிலாடுதுறை

*? அன்னையர் தினத்தில் முதல்வரான இந்நாள் ஜெ, குழந்தைகள் தினத்தில் முன்னாள் முதலமைச்சராவாரா?*

! உயர்நீதி மன்றமும் உச்ச நீதி மன்றமும் கூற வேண்டிய பதிலை என்னிடம் எதிர்பார்க்கலாமா மிஸ்டர் சச்சின்?

● வி. சிவா, மதுரை - 16

*? அது என்ன விஞ்ஞானபூர்வ ஊழல்..? நீங்களா*

❑ ரூ.100 பரிசு பெறுபவர் :
அ. சங்கர்,
17, ராகவேந்திரா எக்ஸ்டன்ஷன்,
ராமமூர்த்தி நகர்,
பெங்களூர் - 560 016.

★ ரூ. 50 பரிசு பெறுபவர் :
பி. வெங்கடாசலம்,
மூன்றாவது பிளாக்,
ஜெ ஜெ நகர் கிழக்கு,
பாடி, சென்னை - 600 050

வது விளக்குங்களேன்?

! சட்டத்துக்கு உட்பட்டே செயல்படுவதாகக் காட்டிக் கொண்டு, கண்டுபிடிக்க முடியாதபடி ஊழல் நடத்திப் பணம் குவிப்பது விஞ்ஞானபூர்வ ஊழல் எனலாம். எனவே தான் 'சட்டம் ஒரு கழுதை' என்று கூறுவது. அது பொதி சுமக்கவும் செய்யும்; உதைக்கவும் செய்யும். ஆட்சியில் உள்ளோர் நீதியை நிலைநாட்ட, சட்டத்தைப் பிரயோகிக்க வேண்டும். அநீதியை நிலை நிறுத்த அல்ல. இதற்கு அவர்களுக்குத் தேவை தார்மிக உள்ளம்.

அதிருப்தி அரசாட்சி



• இருந்தாலும் இல்லாவிட்டாலும்





• எதிர்பார்ப்புகள்



• கூடாரத்துக்குள் தலை

● எஸ்.எம். பரீதா பேகம், திண்டுக்கல்

? 'முட்டைக்குப் பதிலாக சத்துணவுடன் உருளைக் கிழங்கு, கொண்டைக் கடலை, பாசிப்பயறு ஆகியவற்றைப் போடுவோம்' என்கிறார்களே..?

! முட்டை விரும்பாதோருக்கு இந்த யோசனை பிடிக்கும். ஆனால் முட்டை பழகியவர்களுக்கு அதை மறுப்பது அதிருப்தியையே உண்டாக்கும் அரசாங்கம் ஆள்வதை விட்டு விட்டு, 'குடும்பம்' நடத்தினால் இப்படித்தான் பிரச்னைகள் எழும். அரசாட்சி என்பது மக்களின் தேவைகளைப் பூர்த்தி செய்வது அல்ல. மக்கள் தங்கள் தேவைகளைத் தாங்களே பூர்த்தி செய்து கொள்ளும் வகையில் தொழில், பொருளாதாரத்தை நிர்வகிப்பதாகும்.

● பி.ஜெயப்பிரகாஷ், சர்க்கார்பதி

? 'டான்சி வழக்கில் தடை வாங்கிய வக்கீல் வெங்கடபதி ஒரு பொய்யர்' என்று சென்னை வக்கீல்கள் உச்சநீதிமன்றத்துக்கு தந்தி அனுப்பியது சரியா...?

! அது தப்பு! அதைவிடப் பெரிய தப்பு, அத்தகைய தந்திகள் அனுப்பப்படுவதற்கு ஓர் அமைச்சரே காரணமாயிருந்ததுதான். இச் செய்தியை அவர் மறுத்துள்ள போதும் அச் செய்திக்குப் பின்னால் சாட்சியம் இருப்பதாகவும் கூறப்படுகிறது.

● அ. சங்கர், பெங்களூர் ❑

? 'பவானிசாகர் அணையிலிருந்து குறுவை சாகுபடிக்குத் தண்ணீர் திறந்து விடக் கூடாது' என்று அப்பகுதி விவசாயிகளே ஆட்சேபிக்கும்போது கர்நாடகா மட்டும் தண்ணீர்த் தர வேண்டும் என்று கேட்பது என்ன நியாயம்?

! கர்நாடகம் கொடுக்க வேண்டிய நீரைக் கொடுத்துவிட்டால், கீழ் பவானி மக்கள் தஞ்சைப் பகுதிக்குத் தண்ணீர் வழங்குவதை ஏன் ஆட்சேபிக்கப் போகிறார்கள்! பிரச்னை பவானி சாகரில் இல்லை; கிருஷ்ணாராஜ சாகரில்தான்!

## நீங்கள் கேட்டவை - தராசு

● ராதை எஸ். கந்தவேல், சென்னை

? மறப்போம் மன்னிப்போம் என்ற அண்ணாவின் கொள்கையினைப் பின் பற்றுவதாகச் சொல்லிக் கொள்ளும் தி.மு.க. தலைமை, பா.ம.க.வை ஏற்க மறுப்பது ஏன்?

! ஒட்டகம் மறுபடி கூடாரத்துக்குள் தலையை நுழைத்துவிட்டதே. இன்னும் கழுத்தும் உடலும்தான் பாக்கி.

● பி. வெங்கடாசலம், சென்னை-50 ★

? 'தமிழகத்தின் நிலைப்பாடு என்ன..? தற்போதைய அமைச்சரவை என்ன ஆகும்?' என்பன போன்ற கேள்விகளை நீதிபதிகள் ஏன் கேட்க வேண்டும்! ஜெ. பதவி வகிப்பது செல்லுமா செல்லாதா என்பதைத்தானே தீர்ப்பு கூற வேண்டும்?

! ஜெ முதல்வராக இல்லாவிட்டாலும் அ.தி.மு.க. ஆட்சிதான் நடக்கும் என்பது ஜனநாயக மரபுக்கு உட்பட்ட நிலை. ஆனால் மத்திய அரசிடம் வேறு சில அதிகாரங்கள் குவிந்திருப்பதால், அதன் நிலைப்பாடு குறித்து உச்சநீதிமன்றம் தெரிந்து கொள்ள விரும்புவதும் நியாயமே. பெஞ்ச் தீர்ப்பு, ஜனநாயக மரபை மீறுவதாகவும் அநீதிக்குத் துணை போவதாகவும் ஆகிவிடக்கூடாது அல்லவா!

**'பெண்ணே நீ' என்ற மாத இதழைத் துவங்கி அதற்கு ஆசிரியராகி இருக்கிறார் பா.ம.க. நிறுவனர் டாக்டர் ராமதாஸ் மகள் கவிதா. கவிதாவைச் சந்தித்தபோது...**

"மூன்றாம் வகுப்பு முதல் நான் படித்தது ஏற்காடு புனித இருதய பெண்கள் பள்ளியில்தான். ஹாஸ்டல் வாசம். அப்போதெல்லாம் அப்பா அரசியலில் முழு மூச்சாக குதிக்காத நேரம். மாதத்திற்கொருமுறை என்னையும், பக்கத்துப் பள்ளியில் படித்துக் கொண்டிருந்த என் சகோதரரையும் பார்க்க வருவார். பின்னர் அரசியலில் பிஸியாகி விட்டபோது அப்பாவிடமிருந்து நீண்ட கடிதங்கள் வரும். அரசியலில் ஈடுபட்டதால் அப்பாவுக்குக் குடும்பத்தைக் கவனிக்க நேரம் இல்லை. இது

## - ராமதாஸின் மகள் பேட்டி



சம்பந்தமாக பள்ளியில் படிக்கும்போதே "எங்களையும் கொஞ்சம் கவனியுங்களேன்" என்று அவருடன் சண்டை போடுவேன். வீட்டில் கடைக்குட்டி. ஆதலால் கொஞ்சம் செல்லம் அதிகம்தான். ஆனால் என்னை உட்கார வைத்து பொது வாழ்க்கையில் தாம் இருப்பதற்கான காரணங்களை விளக்குவார். அரசியலில் இறங்கினால் ஜெயிலுக்குப் போக வேண்டி இருக்கும் என்பதெல்லாம் அப்போது எனக்குத் தெரியாது.

ஒருமுறை அப்பா ஜெயிலிலிருந்து கடிதம் போட்டபோது கொஞ்சம் அதிர்ச்சியாக இருந்தது. சில வருடங்களுக்கு முன்னால் பிரபல பத்திரிகையின் நிருபர் ஒருவர் அப்பா எனக்கு எழுதிய கடிதங்களைப் பிரசுரம் செய்வதாகக் கூறி வாங்கிச் சென்றார். பிரசுரமானதாகத் தெரியவில்லை; திருப்பியும் கொடுக்கவில்லை. (கவிதா ரொம்ப ஃபீல் பண்ணறாங்க... ஐயா பத்திரிகை நிருபரே... திருப்பிக் கொடுத்து விடுங்கள்.)

**"அது சரி... கவிதா... உங்கள் குடும்பத்தில் அப்பா – அண்ணன் அரசியல்வாதிகள். மற்றபடி பெரும்பாலும் டாக்டர்கள். அப்படியிருக்க நீங்கள் பத்திரிகைத் துறையில் குதித்தது ஏன்?"**

"எத்திராஜ் கல்லூரியில் ஆங்கில இலக்கியம் முடித்தேன். ஐ.ஏ.எஸ் ஆசை மனத்தில் ஊசலாடிக் கொண்டிருந்தது. வருடத்துக்கொருமுறை எங்கள் குடும்பத்தினர் அனைவரும்



பொங்கலின்போது ஒன்றாகக் கூடுவோம். ரொம்பவும் ஜாலியாக இருக்கும். அப்பா சிறிசுகளுக்கும் பெரிசுகளுக்கும் தனித் தனியே பல போட்டிகளை நடத்தி, பரிசுகள் கொடுப்பார். குறிப்பாக கட்டுரைப் போட்டியில் நான் வெளுத்துக் கட்டுவேன். "ரொம்ப நல்லா எழுதற நீ... உனக்கு எழுத்தாளர்...



# "அப்பாவுக்கு எதிர்க்கட்சி நாங்க!"

பத்திரிகையாளர் வேலைதான் சரி.." என்று உறவினர்கள் சொல்வார்கள். அவர்கள் கொடுத்த ஊக்கத்தில் சென்னை பல்கலைக் கழகத்தில் இதழியல் படிப்பில் சேர்ந்து விட்டேன். ஆனால் படிப்பை முடித்த இரண்டு மாதத்தில் திருமணம் நடந்துவிட்டது. குழந்தைகள் பிறந்து அவர்களை ஓரளவு தயார் செய்த பின் யோசிப்பதற்கும் நிறைய நேரம் இருந்தது. அம்மா வேறு 'படிச்ச படிப்பு வீணாகப் போகக் கூடாது, ஏதாவது செய்...' என்று சொல்லிக் கொண்டிருப்பார். என் கணவர் டாக்டர் ஜெய்கணேஷ் என் முயற்சிகளுக்குப் பக்க பலம். என் அப்பாவுக்கு என் மேல் நிறைய நம்பிக்கை உண்டு. எனவே குதித்துவிட்டேன் பத்திரிகைத் துறையில் (பத்திரிகையின் பெயர் அப்பாவின் தேர்வாம்!)

முக்கிய விஷயத்தைச் சொல்லாமல் விட்டேனே... டாக்டர் படிப்புக்கு 'நோ' ஏன் தெரியுமா? 'ரத்தத்தைப் பார்த்தாலே எனக்கு பயம்!"

**"உங்களுக்குப் பிடித்த எழுத்தாளர்கள்?"**

"இன்னமும் ஸீரியஸா நிறைய படிக்கணும். சிவசங்கரி, ரமணி சந்திரன் பிடிக்கும்."

**"அரசியலில் அப்பா தடாலடியாக எடுக்கும் சில முடிவுகள் பற்றி மக்கள் விமர்சிப்பதை நீங்கள் கேட்டிருக்கிறீர்களா?"**

"தேர்தல் காலங்களில் பொதுவான இடங்களில் பா.ம.க பற்றிய மக்கள் கருத்துக்களைக் கேட்டிருக்கிறேன். அரசியல் பணி என்பது ஒரு தாங்க்லெஸ் ஜாப். முதுகில் குத்துவதை ஒரு கலையாகவே வளர்த்திருக்கிறார்கள். எனவே ஓர் அரசியல்வாதி, சூழ்நிலைகளை அனுசரித்து பல முடிவுகளை எடுக்க வேண்டியிருக்கிறது. அப்பா எடுக்கும் அரசியல் முடிவுகளை, குடும்பத்தில் நாங்கள் விமர்சிப்போம். இன்ஃபாக்ட் எதிர்க்கட்சி போன்று அப்பாவிடம் கேள்விகள் கேட்போம். அவரும் தக்க பதிலைக் கொடுப்பார். அப்பாவுக்கு வாதப்-பிரதிவாதங்கள் பிடிக்கும். அவருக்குப் பிடித்த மற்றொரு விஷயம் தமிழ்... 'எங்கும் தமிழ்... எதிலும் தமிழ்' என்று பிடிவாதமாக இருப்பார். குழந்தைகளுக்குத் தமிழ்ப் பெயர் வைக்க வேண்டுமென்று சொல்லுவார். யாராவது ஆங்கிலத்தில் மட்டும் கல்யாணப் பத்திரிகை அச்சடித்தால் அவர்களைக் கண்டிப்பார். கடவுள் விஷயத்தில் அவர் பெரியார் தொண்டராக இருந்தாலும், எங்கள் மீது தமது கொள்கைகளைத் திணிக்க மாட்டார்.

1987ல் நடந்த இட ஒதுக்கீட்டுப் போராட்டத்தில், மரங்கள் வெட்டப்பட்டன. அதனால் அவர் மிகுந்த விமர்சனத்துக்குள்ளானார். ஆனால் இன்று, என் சகோதரர் தலைமையில் இருக்கும் 'பசுமைத் தாயகம்' அமைப்பு மூலம் லட்சக்கணக்கான மரங்களைத் தமிழகம் முழுவதும் நட ஏற்பாடு செய்தவர் அவர். அரசாங்கம் கூட அத்தனை மரங்களை நட்டிருக்குமா என்பது சந்தேகமே!"

**க**விதாவை இப்போது போட்டு குடைந்து கொண்டிருப்பது இந்த ஈவ் டீஸிங் பிரச்னைதான். "நமது சினிமாக்கள் இளைய தலைமுறைக்கு மிகத் தவறான பாதையைக் காட்டு கின்றன. கிண்டல் செய்தவனையும் கற்பழித்தவனையும் தேடிப்பிடித்துக் கல்யாணம் செய்து கொள்ளும் பெண்ணை, தமிழ்த் திரைப்படங்களில் மட்டும் காணலாம். ஈவ் டீஸிங் குற்றத்துக்கு ஆயுள் தண்டனையே கொடுக்கலாம்."

**"பெண்கள் பிரச்னையில் தெருவில் இறங்கிப் போராடத் தயாரா?"**

"இப்பொழுது அது போன்ற எண்ணமெல்லாம் கிடையாது. கருத்துகளுக்கு வடிகாலாகத்தான் பத்திரிகை இருக்கிறதே!"

**"பத்திரிகையாளர்கள் தாக்கப்படும் கால கட்டத்தில் தைரியமாக குதித்திருக்கிறீர்களே... கங்கிராட்ஸ்...!**

"என்ன ஸார் பயமுறுத்தறீங்களா. ஸ்பாட்ல போய்...கவர் செய்யறவங்களுக்குத்தானே பிரச்னை. எடிட்டருக்கு ஒன்றும் இல்லையே... (சிரிக்கிறார்) ஜனநாயகம் உயிரோட்டமாக இருக்கணும்னா பத்திரிகைத் துறை சுதந்திரமா இருக்கணும்... இது சம்பந்தப்பட்டவங்களுக்குப் புரிஞ்சா சரி."

சந்திப்பு: **ஸ்ரீநிவாசன்**

அட்டைப்படம், படங்கள்: **ராஜன்**

# நடுத்தர வருவாய் உள்ள அன்பர்களுக்கும் இல்லத்தரசிகளுக்கும் ஓர் அரிய வரப்பிரசாதம்

## SWETHA walker HEALTH FITNESS MACHINE





இந்த நவீன கம்ப்யூட்டர் காலத்தில் உடற்பயிற்சி செய்வதற்கு சிறிதும் நேரம் கிடைப்பதில்லை. அலுவலகம் செல்லும் சகோதர, சகோதரிகள் தினமும் 8 மணி நேரமும் நாற்காலியில் உட்கார்ந்து வேலை செய்வதால் உடல் தசைகளுக்கு வேலை இல்லாமல் எடை கூடவோ, பருமனாகவோ வாய்ப்புகள் அதிகம். நிறைய பேருக்கு காலையில் walking போக நேரம் கிடைப்பதில்லை. அப்படியே நேரம் கிடைத்தாலும் சென்னை போன்ற பெரு நகரங்களில் எந்தவித இடையூறும் இல்லாமல் நடந்து போகக் கூட சாலைகளில் இடமில்லை. எனவே இதை நாங்கள் மனதில் கொண்டு உங்களுடைய வீட்டில், தோட்டத்தில், முக்கியமாக அடுக்கு மாடி குடியிருப்புகளில், மாடியில் எங்கு வேண்டுமானாலும் ரிலாக்ஸ்டாக எந்த தொந்தரவும் இல்லாமல் ஹாயாக நடப்பதற்கு ஒரு புதிய இயந்திரத்தைச் சாதாரண நடுத்தர மக்கள் வாங்கும் விலையில் உருவாக்கியுள்ளோம். இதில் காலை (அ) மாலை சுமார் 10 நிமிடம் பயிற்சி செய்தால் சுமார் 3 கிலோ மீட்டர் தூரம் நடந்த பலன் கிடைக்கும். தினம் தொடர்ந்து செய்து வந்தால் உடல் எடை நிச்சயம் குறையும். இதை உபயோகிப்பது மிகவும் சுலபம். பயிற்சி முடிந்த பின் இயந்திரத்தை மடித்து வீட்டில் எங்கும் வைத்துக் கொள்ளலாம். இந்த இயந்திரத்தை நாங்கள் தயாரிப்பு விலைக்கே கொடுப்பதோடு ஒரு வருடம் உத்தரவாதம் தருகிறோம்.

நடுத்தர மக்களின் வசதிக்கேற்ப இந்த இயந்திரம் ரூ. 1900 (Economy model) மற்றும் ரூ 2700/- ஆகிய விலைகளில் கிடைக்கும். (வரிகள் உட்பட).

சென்னை நகருக்குள் இலவச டெலிவரி. தொடர்பு கொள்ள தொலைபேசி 4847701

(காலை 9 மணி முதல் மாலை 6 மணி வரை)

CONTACT **ASIAN ENTERPRISES**

**Mfrs of: Health Fitness Machine & Office Filing Systems**

**# 25 (Old, #16), Perumal Koil South 1st Cross Lane, Vadapalani, Chennai - 600 026. Ph: 484 7701**

## நியூஜெர்சியிலிருந்து சித்ரா


• பின்லேடன்

# கொதிப்பில்

அர்னால்டு ஸ்வாஸ்நேகர் நடித்த ஓர் ஆங்கில படத்தில் இப்படி நடந்திருந்தால் 'டேபிள் டாப்பா, கிராபிக்ஸா?' என்று தான் கேட்டிருப்பார்கள். ஆனால் கண்ணெதிரே நடந்த இந்தப் பயங்கரத்திலிருந்து இன்னும் மீளவில்லை அமெரிக்காவின் மான்ஹாட்டன் மக்கள்.

கனவில் நிகழ்ந்த மாதிரிதான் இருக்கிறது. வானுயர்ந்த கம்பீரமான அந்த நூற்றுப்பத்து மாடி உலக வர்த்தக மைய கட்டடத்தில் தீப்புகையைப் பார்த்த சில நிமிடங்களிலேயே இன்னொரு விமானம் பறந்து வந்து அதன் ஒரு தளத்துக்குள் புகுந்து குண்டு வெடிக்கச் செய்ய... அப்பளமாய் நொறுங்குகிறது அந்தக் கம்பீரச் சின்னம்!

நெஞ்சைக் கீறிய அதிர்ச்சியில் உலகமே உறைந்து போய்க் கிடக்கிறது.

கடந்த பதினொன்றாம் தேதி அதிகாலை, அமெரிக்கா இப்படியொரு கோரத்தைச் சந்திக்குமென்று யாரும் எதிர்பார்த்திருக்க மாட்டார்கள்.

இரண்டாவது விமானம் தாக்கியதும் எழுந்த தீப்புகைக்கு மேலிருந்த தளங்களிலிருந்தவர்கள் கண்ணாடிகளை உடைத்து, 'காப்பாற்றுங்கள்?' என்று அபயக் குரல் எழுப்பியதை எல்லோராலும் வேடிக்கைதான் பார்க்க முடிந்தது.

இன்னும் சிலர் கீழே விழுந்தால் 'பிழைத்துவிட மாட்டோமா?' என்று எண்பது, தொண்ணூறாவது மாடிகளிலிருந்து விழுந்தது பரிதாபத்தின் உச்சம்!

கட்டடத்தின் மேலே பயங்கர சப்தம் கேட்டதும், விழுந்த துகள்களைக் கண்டு ஏதோ அசம்பாவிதம் என தெரிந்து கொண்ட சிலர் அறுபதாவது மாடியிலிருந்து உயிரைக் கையில் பிடித்துக் கொண்டு வியர்க்க விறுவிறுக்க ஓடி வந்து பிழைத்திருக்கிறார்கள்.

''நான் அந்தக் கட்டடத்தின் வாசலில் வந்து மூச்சு விடுவதற்குள் ஏதோ சப்தம் கேட்க, ஓடினேன். வெளியில் வந்த அடுத்த நொடி என்


• போருக்குத் தயார்!



பின்னாலேயே கட்டடம் விழுந்து புகையும் புழுதியும் விரட்டிக் கொண்டு வந்தது. பிழைத்தது கடவுள் செயல்" என்றார் ஓர் இளைஞர் கண்ணீர் காயாத கண்களைத் துடைத்துக் கொண்டு.

நொறுங்கி விழுந்த கட்டடத்தின் உள்ளிருந்து செல்ஃபோன் மூலம் 'காப்பாற்றுங்கள்' என்று வந்த அலறலை அடுத்து மீட்புப் படையினர் கட்டட இடிபாடுகளில் பிணங்களுடன் உயிருள்ள மனிதர்களையும் சேர்த்தே மீட்கின்றனர். மீட்கப்பட்ட சிலரில் ஒருவர் கர்ப்பிணி!

"அப்பளமாய் நொறுங்கிய நூற்றுப் பத்து மாடிக் கட்டடத்தைப் பார்த்ததும் என் மகனை இழந்தது போல் உணர்ந்தேன்" என்று வால்டர் கோஸ்னிக் என்ற எழுபது வயது மனிதர் சொல்லிவிட்டு, கண்களில் அருவியைச் சுரக்கிறார்! இவர் கண்ணீர் விடுவதில் நியாயமிருக்கிறது. ஆமாம், இவர் தான் அந்த உலக வர்த்தக மையக் கட்டடத்தின் ப்ராஜக்ட் கன்சல்டன்ட்!


• தாக்குதலுக்கு முன் கம்பீரச் சின்னமாய்!

அடுத்த கொடுமை, ஓர் ஈ, காக்கை கூட நுழைய முடியாத அமெரிக்க பாதுகாப்புத் துறையான பென்டகனில் நடந்தேறியிருக்கிறது. வெள்ளை மாளிகையை நோக்கி வைத்த குறியில் விமானம் தவறுதலாக பென்டகனில் மோதி குண்டு வெடிக்கச் செய்ததாகச் சொல்கிறார்கள். "உலகைக் கண்காணிப்பவன் கண்களிலேயே குத்தி விட்டார்கள்" என்கிறார் ஓர் அதிகாரி!

'பெர்ல் ஹார்பர்' சம்பவத்துக்குப் பிறகு கொடூரமான சம்பவமாக இதை வர்ணிக்கின்றனர் அமெரிக்கர்கள். அவர்களின் கண்களில் இப்போதும் கோபக் கனல். டெக்ஸாஸிலும், பிலடெல்பியாவிலும் சிலர் ஆத்திரத்தில் முஸ்லிம்களைத் தாக்க, அது மதக் கலவரமாக வெடிக்கும் சூழ்நிலையில் "இதுபோன்ற செயல்களைக் கைவிடுங்கள்" என்றிருக்கிறார் அதிபர் புஷ். ஆனாலும் இங்கே இடித்த இடி நைஜீரியாவில் தாக்கியிருக்கிறது மதக் கலவரமாக!

மான்ஹாட்டனில் பெரும்பாலான குழந்தைகள் தாய் தந்தையை இழந்து தவிக்கின்றனர். அவர்களின் ஏக்கம் தீர்க்க முடியாததாய் இருக்கிறது. நேற்று வரை பணக்காரர்களாய் இருந்தவர்கள் இன்று கையைப் பிசைந்துக் கொண்டு தெருவில் நிற்கிறார்கள். இவர்களுக்காக பல இடங்களில் கவுன்சலிங் சென்டர்கள் திறக்கப்பட்டுள்ளன.

"சம்பவம் நடந்துவிட்டது. ஆனால் இதனால் ஏற்பட்ட பாதிப்பு, மன ரீதியாக அதிகரித்திருக்கிறது. இது வெளியில் தெரியாததாக இருக்கிறது" என்றார் இந்த கவுன்சிலிங்கில் இருந்த மனநல மருத்துவர்.

சம்பவம் நடந்து சில நாட்களாகிவிட்டாலும் 'இது நமக்கு விடப்பட்ட சவால்' என்றே அமெரிக்கர்கள் பேசி வருகின்றனர். சி.என்.என். நடத்திய கருத்துக் கணிப்பில், எண்பது சதவிகித அமெரிக்கர்கள் "இது போருக்கு ஒப்பானதுதான். இதற்குப் போர் தான் சரியான தீர்வு" என்று கூறியுள்ளனர்.

இந்நிலையில் விமான கடத்தல் தொடர்பாக பாஸ்டனிலும், புளோரிடாவிலும் சில குடும்பங்களைப் போலீசார் கைது செய்திருக்கின்றனர். இதில் அரசு அதிகாரிகள் சிலரும் உடந்தையாயிருக்கலாம் என்றும் கூறப்படுகிறது.

"அமெரிக்காவைத் தாக்கிவிட்டார்கள் என்றதும் அலறுகிறோம். இவ்வளவு வன்மத்துடனும் வெறியுடனும் தீவிரவாதிகள் இயங்கியிருக்கிறார்கள் என்றால் அமெரிக்கா அவர்களை எந்த விதத்தில் பாதித்திருக்கும் என்பதையும் பார்க்க வேண்டும்" என்கிறார் இந்தியாவைப் பிறப்பிடமாகக் கொண்ட அமெரிக்காவில் வாழும் ஒருவர்.

இப்படியொரு சதிதிட்டத்தைத் தீட்ட பல ஆண்டுகளாக திட்டமிட்டு அதற்கான முயற்சியில் தீவிரவாதிகள் இறங்கியிருக்க வேண்டும். அவர்களுக்கு உள் ஒற்றர்களும் உதவியிருக்காவிட்டால், இந்தக் கொடூரத்தை அவர்களால் அரங்கேற்றியிருக்க முடியாது என்ற பேச்சும் அமெரிக்காவில் நிலவுகிறது.

விழுந்துபோன பொருளாதாரம், பங்குச் சந்தை உள்ளிட்டவற்றைத் தூக்கி நிறுத்தும் விதமாக அமெரிக்கா அடுத்தக் கட்ட நடவடிக்கையில் இறங்கிவிட்டாலும் இதுபோன்ற தீவிரவாத தாக்குதல்களுக்கு முடிவுதான் என்ன என்பதே கேள்வியாய் இருக்கிறது. ○






2001 செப்டெம்பர் 23
விஷு புரட்டாசி 7
மலர் : 60
இதழ் : 8

கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



# குரூரத்தின் உச்சம்!

'தீவிரவாதிகளின் தாக்குதல் நடவடிக்கைகளுக்குப் பழி வாங்குவோம்' என்று அமெரிக்க அரசு இப்போது முழங்குவது தும்பை விட்டுவிட்டு வாலைப் பிடிக்கிற கதைதான்.

'அறிவிக்கப்பட்ட போர்' என்கிற நேருக்கு நேர் யுத்தமே இன்றைய அணு ஆயுத யுகத்தில் கோர கிருத்யமாகத்தான் முடியும். சராசரி மக்களின் உயிரைப் பறிக்கும், வாழ்வை நாசமாக்கும் திட்டமிட்ட கொரில்லா தாக்குதல்கள் குறித்தோ கேட்கவே வேண்டாம்! எத்தகைய சேதத்தை அது விளைவிக்கக்கூடும் என்பதைத்தான் நாம் அமெரிக்காவில் இன்று காண்கிறோம். கண்மூடித்தனமான இந்த பயங்கரவாதம், நாம் கேள்விப்பட்டுள்ள எத்தனையோ குரூர அசுரத்தனங்களையெல்லாம் ஒன்றுமில்லை என்று ஆக்கிவிட்டது.

கம்ஸனும் ராவணனும்கூட ஓரளவு நேர்மையைக் கடைபிடித்தனர் - தங்கள் வாழ்விலும் யுத்தத்திலும், கண்மூடித்தனமான வெறியுடன் இயங்கிவரும் ஓஸாமா பின் லேடனிடம் அதை நிச்சயம் எதிர்பார்க்க முடியாது.

தலைமறைவாக இருந்துகொண்டு, தலிபன் போன்ற வெறியர் இயக்கங்களுடன் தொடர்பு வைத்துக்கொண்டு, மனித குலத்தை நாசமாக்கவல்ல அறிவற்ற அடிப்படைவாதத்தில் ஈடுபட்டு வரும் பின் லேடன்தான் நடந்த நிகழ்வுகளுக்குப் பொறுப்பு




என அமெரிக்கா குற்றம் சாட்டியிருக்கிறது. பின் லேடன் தரப்பிலிருந்து இதற்கு மறுப்பு வந்திருப்பது ஆச்சர்யமல்ல; ஆனால் இத்தகைய துணிகரத் தாக்குதல்களைத் தாம் முற்றிலும் ஆதரிப்பதாக அவர் அறிவித்திருப்பது அவருடைய குரூர புத்தியின் அடையாளம்.

என்னதான் உலக இஸ்லாமிய தலைவர்கள் ரத்த தானம் செய்தும் தங்கள் ஆதரவைத் தெரிவித்தும் அமெரிக்க மனங்களுக்குக் களிம்பு தடவ முயன்றாலும் இந்தத் தாக்குதலின் அதிர்ச்சியும் அது விளைவித்துள்ள கசப்பும் இலேசில் ஆறப்போவதில்லை.

திடீர்த் தாக்குதல்கள் மூலம் மற்றொரு நாட்டில் சேதங்களை ஏற்படுத்தி, அப்பாவி உயிர்களைக் கொன்று, தமது கரத்தைப் பலப்படுத்திக் கொள்ளலாம் என நினைக்கின்ற எந்தவொரு இயக்கமும் ஆதரவு பெற்றுத் தழைக்க முடியாது.

இத்தகைய இயக்கங்களும் தீவிரவாத அமைப்புகளும் உலகை நரகமாக்கி மனித மனத்தின் குரூர எல்லைகளுக்குச் சாட்சியாக விளங்குவதோடு சரி.

பின் லேடன் தன் கை வரிசையைக் காட்டுவது இன்று நேற்று அல்ல. ஏற்கெனவே அமெரிக்க தூதரங்களில் தாக்குதல்கள் நிகழ்த்தி, உலகை அதிர்ச்சியில் ஆழ்த்தியிருக்கிறது அவரது வெறியர் கூட்டம்.

அமெரிக்காவில் ஒரே நேரத்தில் நான்கு விமானங்களைக் கடத்திப் போய், உலக வர்த்தக மையத்தை அந்த விமானங்களைக் கொண்டே தாக்கி வீழ்த்தி, ‘பென்டகன்’ என்ற ராணுவ அலுவலக கட்டடத்தையும் தகர்ப்பது என்பது எளிதல்ல. பல நாட்கள் திட்டமிட்டு, படிப்படியாக பாதுகாப்பு அமைப்புகளில் ஊடுருவி, அவற்றுள் சதிகாரர்களை நட்டு வைத்து, அமெரிக்க விசுவாசிகளையும் விலைக்கு வாங்கித்தான் இத்தனையும் செய்ய முடியும்.

இவ்வளவும் நடந்த நேரத்தில் அமெரிக்க உளவுத்துறை சளைத்து அசந்துவிட்டது




என்கிற முடிவுக்குத்தான் வர வேண்டியிருக்கிறது.

**Counter espionage** எனப்படும் மாற்று ஒற்றாடல் கலை இன்றையச் சூழலில் மிக அதிக முக்கியத்துவம் பெற்றுள்ளது. எதிரியின் ஒற்றாடலை முந்திக்கொண்டு கண்காணித்து, அவர்களுடைய அசைவுகளை எதிர்பார்த்துச் செயல்பட வேண்டும். நேரடி யுத்தம் செய்யாமல், சதியால் அழிக்கும் கூட்டங்களைக் கண்காணிக்க வேறு வழியே கிடையாது.

பாஸ்டனிலிருந்து புறப்பட்ட விமானம், விமான நிலையத்துடன் நீண்ட நேரம் தொடர்பிழந்து பறந்திருக்கிறது என்பதும் ஹைஜாக் செய்யப்பட்ட இதர மூன்று விமானங்களும் தரைக்கட்டுப்பாடுடன் பல மணி நேரம் தொடர்பு இழந்துள்ளன என்பதும் வெளிச்சமாகியிருக்கிறது.

அடுத்த கட்டமாக ஏவுகணைகளைத் தயாரித்து, சாடிலைட் தகவல் தொடர்புகளைக் குறி வைத்துத் தாக்கவும் தீவிரவாதிகள் எதிர்காலத்தில் முற்படலாம்.

நவீன தொழில் நுட்பத்தின் முதுகெலும்பான தகவல் தொடர்பே தீவிரவாதிகளின் முதல் குறியாக இருக்கும்; அவற்றைத் துண்டிப்பதன் மூலம் பொருளாதாரச் சேதம் விளைவிக்கவும் உயிர்களைப் பலி கொள்வதன் மூலம் 'பராக்கிரமத்'தை நிரூபிக்கவும் அவர்கள் முற்படுவார்கள்.

இந்தச் சூழ்நிலையில், 'பழிவாங்குவோம்' என்ற அமெரிக்காவின் சூளுரை மட்டுமே போதுமானதல்ல. ஒற்றாடல் பிரிவைப் பல வகையிலும் அதிநவீனப்படுத்தி, சிறப்பாக இயங்கச் செய்து, சதிகாரர்களைக் கண்காணிக்க வேண்டும்; பயங்கரவாதத்தின் மையக் கேந்திரங்களைத் தவறின்றித் துல்லியமாய்க் கண்டறிய வேண்டும்.

அவர்கள் கையாள்கிற கொரில்லா போர் முறையை அரசும் கையாண்டு, பயங்கரவாதத்தின் மையக் கேந்திரங்களைத் தாக்கி அழிக்கவும் வேண்டும். இன்றைய புதிய அதர்மப் போர் முறையில், வருமுன் காப்பது ஒன்றே வழி! ○

# சிஷ்ய கோடி போர்க்கொடி!

# ஸ்ரீ ஜெயேந்திரர் சீனா

**கா**ஞ்சி ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகள் சீனப் பயணம் மேற்கொள்ள தயாராகி வரும் நிலையில் "இந்தப் பயணத்தை அவர் மேற்கொள்ளக் கூடாது" என்று எதிர்ப்புக் குரல் எழுந்துள்ளது. அந்தக் குரலுக்குச் சொந்தக்காரர் காஞ்சிபுரத்தைச் சேர்ந்த சங்கரராமன். இவரது தந்தை அனந்த கிருஷ்ண சர்மா மகா பெரியவரின் அன்புக்குப் பாத்திரமாக இருந்து செயல்பட்டவர். "சிஷ்ய குடும்பத்தைச் சேர்ந்தவன் நான்" என்று உரிமையுடன் சொல்லும் சங்கரராமனைச் சந்தித்தோம்.

"வெளிநாடுகளுக்குச் செல்வதும் கடல் கடந்து யாத்திரை செய்வதும் ஹிந்து சாஸ்திரங்களுக்கு விரோதமானது' என்பதை நமக்கு உபதேசிக்கும் நிலையில் உள்ள காஞ்சிப் பெரிய்வர் இப்படியொரு பயணம் மேற்கொள்ளவிருப்பது பெரிய அதிர்ச்சியை ஏற்படுத்தியிருக்கிறது. சைவ நாயன்மார்களில் ஒருவரான திருஞானசம்பந்தர், இலங்கையில் இருக்கும் கேத்தீஸ்வரம், திரிகோணமலை ஆகியத் தலங்களை ராமேஸ்வரத்திலிருந்தே பாடினார். க்ஷத்திரிய குலத்தில் தோன்றிய ராமன் கூட சீதையை மீட்க, கடல் கடந்து செல்லாமல் பாலம் கட்டி தரை வழி சென்றதாக நமது இதிகாசங்கள் சொல்கின்றன. மகா பெரியவர், இந்து நாகரிகம் பற்றிய ஆராய்ச்சியில் ஈடுபட்டிருந்த சமயம் ஜாவா நாட்டு கலாசார தூதுக் குழுவின் தலைவர் ஆராய்ச்சி சம்பந்தமாக ஜாவா நாட்டுக்கு வரும்படி மகா பெரியவருக்கு அழைப்பு விடுத்தார். டிராவல் நிறுவனமான தாமஸ்குக் எல்லா ஏற்பாடுகளையும் செய்து கொடுக்க முன்வந்தது. ஆனால் மகா பெரியவர் நெறிமுறைகள், அனுஷ்டானங்களுக்கு மாறாக கடல் கடந்து பயணம் செய்ய விரும்பவில்லை. இவ்வளவு ஏன்? சங்கீத மேதை செம்மங்குடி ஸ்ரீநிவாசய்யர் ஒரு தொலைக்காட்சிப் பேட்டியில் "என் தோப்பனார் விதேசம் போகாதே; ஆசாரம் குறைவு என்றார். அதன் காரணமாக நான் வெளிநாடுகளுக்குப் போவதில்லை'' என்று சொன்னார். எனவே தர்ம அனுஷ்டானங்களுக்கு முக்கியத்துவம் கொடுத்து, மற்றவர்களுக்கு முன்னுதாரணமாக விளங்கும் பீடாதிபதி ஒருவர், தர்ம சாஸ்த்திர நெறிகளை ஒதுக்கித் தள்ளி வெளிநாடு சென்று வந்தால், பாஷண்ட மதங்களை வேரறுத்து வேத வேதாந்த நெறிகளில் அறுவகை சமயம் கண்ட, ஸ்ரீ சங்கரரின் வழித்தோன்றல் என்று சொல்லிக் கொள்வது கேலிக்கூத்தாகிவிடும்.

• சங்கரராமன்

"இது தவிர, காஞ்சி பீடாதிபதியின் இந்தப் பயணம், தவறான மற்றொரு உதாரணத்தையும் ஏற்படுத்திவிடும். தற்போது தமிழ்நாட்டுக் கோயில் அர்ச்சகர்கள் பலர் சம்பாதிக்கும் ஆசையில் வெளிநாடு செல்லத் துடிக்கின்றனர். ஆனால் வெளிநாடு சென்று வந்தால் உள்ளூரில் தங்கள் பதவி பறி போகும் என்ற காரணத்தால் அந்த ஆசையை ஓரளவு கட்டுப்படுத்திக் கொண்டுள்ளனர். ஜெயேந்திரர் வேண்டுமானால் தனிச் சமையல்காரர், புதுக் கிணறு, அரிசி



உணவு என்று வசதிப்படுத்திக் கொள்ள முடியும். ஆனால் பணம் சம்பாதிக்கச் செல்பவர்கள் கிடைத்ததைத் தின்று கண்டதை அனுபவித்து நெறி இழக்கும் சூழல் உருவாகும். இதனால் ஆலய வழிபாடு சீர்கெடும். காஞ்சி பீடாதிபதியைத் தொடர்ந்து அர்ச்சகர்கள் பிழைப்புக்காக வெளிநாட்டிற்குச் செல்லத் துவங்கி விட்டால் பூசைக்கு ஆளின்றி தமிழ்நாட்டுக் கோயில்களை மூட வேண்டி வரும்."

ஜெயேந்திரர் போன்ற மதப் பெரியவர்கள் வெளிநாடுகளுக்குப் போவதால் இந்து சமயத்தின் பெருமையும், பாரம்பரியமும் இன்னமும் பலருக்குத் தெரிய வருமே!

"ஜெயேந்திரர் பயணத்தின் நோக்கம் கலாசார பரிவர்த்தனை என்றால் அதற்கு வேறு வழிகள் இருக்கின்றன. மகா பெரியவர் காலத்தில் ஆகம, சில்ப, கலாசதஸ் நடத்தி வெளிநாட்டுக்காரர்களை வரவழைத்து நம்நாட்டுக் கலைஞர்களோடு, தொடர்பு ஏற்படுத்தினார். அது போன்று இவர் செய்யலாமே! அதை விட்டுவிட்டு பெருமைகளைக் குலைக்கும் வண்ணம் ஏன் வெளிநாடு செல்ல வேண்டும்?"

# செல்லக் கூடாது!"

இந்த விஷயத்தில் எதிர்ப்புக்குரல் கொடுக்க உங்களுக்கென்ன உரிமை இருக்கிறது?

மடாதிபதி பாதை மாறும்போது தட்டிக் கேட்க இந்து சமயத்தைச் சார்ந்தவர்களுக்கு உரிமை உண்டு.

ஸ்ரீ ஜெயேந்திரர் சீனப் பயணம் மேற்கொண்டால் அந்நிகழ்வு தமிழ்நாடு இந்து சமய அறநிலையத் துறை சட்டம் 22ன் கீழ் நடவடிக்கைக்கு உரியதாக அமைந்து விடும்" என்று சொல்லும் சங்கரராமன், "இது சம்பந்தமாக நீதிமன்றக் கதவுகளையும் தட்டத் தயங்க மாட்டேன்" என்கிறார்.

— ப்ரியன்

படம்: ராஜன்

# தேன் கூடு!

ஒரு லட்சம் ரோஜா மலர்களை உபயோகித்துப் பன்னிரண்டு கிராம் எடையுள்ள அத்தர் தயாரிக்கப்படுகிறது!

- எஸ்.சந்திரா, திருச்சி

மும்பை 'அரபான் கண் வங்கி' ஒரு புதிய உத்தியைக் கையாண்டு வருகிறது.

கண்களை அன்பளிப்பாகத் தருவதாக எழுதிக் கொடுத்தால் தானம் தந்தவர்கள் இறந்த பிறகு அவர்களுடைய இறுதிச் சடங்குகளை இலவசமாக நிறைவேற்றுகிறது.

- தேனி முருகேசன்





செண்ட் அதிகம் பயன்படுத்தினால் தலைவலி, சலிப்புணர்வு போன்றவை பெண்களுக்கு ஏற்படுவதாக 'லண்டன் நியூ சயன்ஸ்' இதழ் ஆய்வு தெரிவிக்கிறது.

- கோவி.இராஜேந்திரன், மதுரை.

இமாசலப் பிரதேசத்தில் பழைய நியூஸ் பேப்பர்களுக்கு எக்கச்சக்கமான டிமாண்ட். ஒவ்வொரு ஆண்டும் ஒன்பது கோடி ரூபாய் பெறுமானமுள்ள பழைய செய்தித் தாள்களை, அங்குள்ள ஆப்பிள் தோட்டச் சொந்தக்காரர்கள் டெல்லிக்குப் போய் வாங்கு கிறார்களாம்.

ஆப்பிளை பேக் செய்து அனுப்புவதற்காகத்தான் இவ்வளவு காகிதம் தேவைப்படுகிறது. ஓர் ஆப்பிள் பெட்டியில் இரண்டு கிலோ பேப்பர் சுருட்டி அடைக்கிறார்கள்!

- ஆர்.ஆர். பூபதி, திண்டுக்கல்



'கல்லினன்' என்னும் வைரமே உலகில் மிகப் பெரிய வைரமாகும். இவ்வைரம் 25.1.1906ல் தென்னாப்பிரிக்காவில் தோண்டி எடுக்கப்பட்டது. இதன் எடை 3106 காரட்டுகள். அதன் பின்னர் கிடைத்த வைரம் கோல்டன் ஜுப்லி. இதன் எடை சுமார் 546 கேரட். இதன் மதிப்பு அவ்வப் போது ஏறிக் கொண்டே போகிறது. இதுவும் 1906 வாக்கில் தென்னாப்பிரிக்காவில் உள்ள பிரிமியர் சுரங்கத்தில் தோண்டி எடுக்கப்பட்டது. இந்த வைரத்தை, தாய்லாந்து மன்னர் பூமிபால் அதுல்யதேஜ் பதவியேற்று 50 ஆண்டுகள் நிறைவதை ஒட்டி பொது மக்கள் பரிசாக வழங்கினார்கள்.

- அ. ராஜா ரஹ்மான், கம்பம்

'மட சாம்பிராணி' என்று நாம் பேச்சு வாக்கில் சொல்கிறோம். முன்காலத்தில் மடங்களில் மூட்டை மூட்டையாய் சாம்பிராணி வாங்கிப் போடுவார்கள். நாளடைவில் மக்கிவிடும். பிறகு அதை புகைத்தால் வாசனையே வராது. அதனால் மடச் சாம்பிராணி என்று பெயர் வந்தது.

- கி. மஞ்சுளா, தூத்துக்குடி



அஞ்சல் வழியில் படிப்பதை அறிவோம். ஆனால் ஆடு மாடு வளர்ப்புகூட அஞ்சல் வழியில் பயிற்றுவிக்கப்படுவதை அறிவீர்களா? சென்னை கால்நடை மருத்துவக் கல்லூரியில் வெள்ளாடு வளர்ப்பு (3 மாதம்), கறவை மாடு வளர்ப்பு (6 மாதம்) தமிழ் வழி அஞ்சல் முறையில் பயிற்சியளிக்கப்படுகிறது. இதற்குத் தகுதிகளாக 18 வயதுக்கு மேற்பட்டவர்களாக இருப்பதும் பத்தாவது படித்திருப்பதும் நிர்ணயிக்கப்பட்டுள்ளது.

- இ. பரமேசுவரி, சென்னை

## தத்தித்தத்தி – த வரிசை

'தேன்கூடு' பகுதியில் பொள்ளாச்சி கமலாவின் சவாலுக்கு கோவை கமலா பதில்தான் மேலே சொன்ன தலைப்பு. அதே 'பாணி'யில் ஒரு தத்துவார்த்தமான வாக்கியம் இதோ :

"தாதிதூரதோ தீது, தத்தை தூரதோ தாது."

நல்லாயிருக்குங்களா?

- கமலா மாரியப்பன்



# ‘நலம் தரும் கருவேலி’

கருவேலி என்கிற ஸர்குணேசுவர புரத்தில் அமைந்திருக்கும் அருள்மிகு ஸர்வாங்க சுந்தரி சமேத ‘ஸர்குணேசுவரர் கோயில்’ பற்றிய தொகுப்பு கட்டுரைகள் “நலம் தரும் கருவேலி” என்ற தலைப்பில் புத்தக வடிவில் வெளியிடப்படுகிறது.



வெளியீட்டு தினம் - **சனிக்கிழமை 22.09.2001**

புத்தகத்தை
வெளியிடுபவர் - **திரு. கே. எஸ். பக்தவத்ஸலம்**
ஓய்வு பெற்ற உயர்நீதிமன்ற நீதிபதி

முதல் பிரதி பெறுபவர் - **பிரம்மஸ்ரீ B. சுந்தர்குமார்**

புத்தக வெளியீட்டினை தொடர்ந்து **பிரம்மஸ்ரீ சுந்தர்குமார்**
அவர்களின் கதா காலட்சேபம்

இடம் : **ஆஸ்திக சமாஜம்**
**வீனஸ் காலனி,**
ஆழ்வார்பேட்டை, சென்னை – 600 018.

தேதி : **22.09. 2001 சனிக்கிழமை**

நேரம் மாலை : **6 மணி**

ஆஸ்திக அன்பர்கள் அனைவரும் அன்புடன் வரவேற்கப் படுகிறார்கள்.

• சுமித்ராவின் இறைவணக்கம்



• விருது பெறுகிறார்

"மன்னிக்கணும். உள்ளே உட்கார இடமில்லை. அரங்கம் நிரம்பி விட்டது!"

"பரவாயில்லை! நாங்கள் நின்று கொண்டே நிகழ்ச்சியைப் பார்க்கிறோம்..."

– சென்னை பாரதீய வித்யா பவன் அரங்க வாசலில்தான் இந்த உரையாடல். 9.9.01 – அமரர் கல்கி பிறந்த நாள். இளம் இசைக் கலைஞர் டி.எம். கிருஷ்ணாவுக்கு, கல்கி கிருஷ்ணமூர்த்தி நினைவு விருதும் பரிசும் அளிக்கும் நிகழ்ச்சி. தொடர்ந்து கிருஷ்ண கானம் வேறு!

"இந்த சாக்லேட்டை விட இனிமையாக இன்றைய நிகழ்ச்சி அமையும்" என்று வரவேற்புக் குழுவினர் நீட்டிய சாக்லேட்டை வாயில் போட்டபடி, விறுவிறுவென்று ஆறு மணி ஆவதற்குள் அரங்கை நிரப்பி விட்டனர் ரசிகர்கள். 6.01 மணிக்கு வந்த சங்கீதா கூட சண்டை பிடித்து உள்ளே போய் இருக்கை தேடி அமர வேண்டியிருந்தது.

சங்கீதா...?

டி.எம். கிருஷ்ணாவின் மனைவி. முதல் ரசிகராக சங்கீதாவும் மினி ரசிகராக ஒன்றரை வயது மகன் ஆர்யாவும் முன் வரிசையில் அமர்ந்திருக்க, அன்று டி.எம். கிருஷ்ணா வழங்கிய இசை நிகழ்ச்சி திரண்டிருந்த அத்தனை ரசிகர்கள் உள்ளத்தையும் மகிழ்ச்சி வெள்ளத்தால் நிரப்பியது.

'பைரவி இவருக்கு உற்ற தோழன் என்று சொன்னால் சஹானா சண்டைக்கு வரும்; கல்யாணி கூட கோபித்துக் கொள்

## செவிகளில்

ளும்... ராகங்களுக்குள் சண்டை எதற்கு...? எல்லாமே கைவந்தவை இவருக்கு' என்று கிருஷ்ணாவுக்களித்த விருதுப் பத்திரத்தில் சில வரிகள் இடம்பெற்றிருந்தன.

அவற்றை மெய்ப்பிப்பது போல் சஹானா வர்ணத்துடன் ஆரம்பித்த

# ரீங்கரிக்கும் செந்தமிழ் அஞ்சலி!

கிருஷ்ணா, கல்யாணியை திச்ர நடையில் தட்டிக் கொடுத்து பக்கத்திலிருந்த கற்பகாம்பிகை கோவிலுக்கு ஓட விட்டார். தேவகாந்தாரியை பொன்னம்பலத்தரசன் முன் இழுத்து நிறுத்தி வைத்தார்!

எல்லோரும் எதிர்பார்த்த ஹரிகாம்போதியை யாருமே எதிர்பார்க்காத அளவுக்குச் சாறு பிழிந்து பொழிந்து விட்டு, 'வண்டாடும் சோலை'தனிலே என்ற அமரர் கல்கியின் பாடலை நிரவல் ஸ்வரங்களுடன் பாடினார் – கோகுல கிருஷ்ணனை அலங்கரித்து, கல்கி கிருஷ்ண மூர்த்திக்கு அவர் செலுத்திய அந்த அழகான அஞ்சலி நீண்ட நாட்களுக்கு ரசிகர்களின் செவிகளில் ரீங்கரிக்கும்!



• செந்தமிழ் அஞ்சலி!

ஏறத்தாழ தமிழிசைக் கச்சேரியாகவே அன்று அமைத்துக் கொண்டார் கிருஷ்ணா. பிரதான ராகமாக, தோடியை ஆலாபனை செய்து, 'வழிமறைத்திருக்குதே' என்ற கோபாலகிருஷ்ண பாரதியின் உருக்கமான கீர்த்தனையை உணர்ச்சியுடன் அவர் பாடியது வியப்பில்லை; அவரோடு சேர்ந்து வயலின் வரதராஜனும் ம்ருதங்கம் அருண் பிரகாஷ"ம் கஞ்சிரா புருஷோத்தமனும் தங்கள் வாத்தியங்களில் அதே உருக்கத்தை வெளிப்படுத்தியதோடு தமிழின் அழகுகளையும் தவழ்ந்துவரச் செய்தது நிச்சயமாய் ஆச்சர்யம்தான். கிருஷ்ணாவுடன் கூடப் பிறந்து வளர்ந்தது போல் இந்த மூவர் குழு

ஒவ்வொரு அசைவையும், வல்லின மெல்லினத்தையும் முன்கூட்டியே எதிர் பார்த்து அடக்கியும் கூட்டியும், அழுத்தியும் உயர்த்தியும் அரவணைத்துச் சென்றது அழ கான அனுபவம்.

'எந்நேரமும் உந்தன்' என்ற கீர்த்தனை யின் படுவிஸ்தாரமான காலப் பிரமா ணத்தை அருண்பிரகாஷ் அனுசரித்த அழ கைச் சொல்வதா? 'போகீந்த்ர சாயினம்' பாடலுக்குப் புருஷோத்தமன் நாதம் கூட்டி யதைச் சொல்வதா? வரதராஜனின் வயலின், தோடியை மினரல் வாட்டர் துல்லியத் துடன் வடித்ததைச் சொல்வதா!



அமரர் கல்கி பிறந்த நாள் விழா தமிழுக் குச் சிறப்புச் செய்யும் விழா வாகவே அமைந்தது அன்று. கிருஷ்ணா பத்தில் எட்டு தமிழ்ப் பாடல்களாகப் பாடினார் என்றால், நிகழ்ச்சிக்குத் தலைமைதாங்கிய திருமதி ஒய்.ஜி.பியோ எட்டாம் வகுப்பு வரை தமிழைக் கட்டாயப் பாடமாக்க வேண்டும் என்று வலியுறுத்தி, தமது பத்மா சேஷாத்ரி பள்ளிகளில் அவ்வாறு செய்யப் போவதாக அறிவித்தும் விட்டார்!

“தமிழை அரசியல் பார்வையுடன் அணு காமல் பண்பாட்டுப் பார்வையுடன் நெருங்க வேண்டும். தாய்மொழியின் மூலம் பாரம்பர்ய கலையும் கலாசாரமும் நம்மை நெருங்கி வரும்” என்று அவர் பேசியது அமரர் கல்கி, ராஜாஜி, டி.கே.சி. ஆகிய மூன்று அறிஞர்களின் கருத்தையும் பிரதி பலிப்பதாக அமைந்தது.

இந்த 'முக்கூட்டு மருந்து' இளம் வயதி லேயே போட்டப்பட்டு வளர்ந்தவர் திருமதி ஒய்.ஜி.பி. என்பதை அவரது உரையிலிருந் தும் கல்கி ராஜேந்திரனின் வரவேற்புரையி லிருந்தும் அறிய முடிந்தது.

திருமதி ஒய்.ஜி.பி. குடும்பத்துக்கும் கல்கி குடும்பத்துக்கும் நீண்ட நெடும் தொடர்பு உண்டு என்றும் திரு.ஒய்.ஜி.பியின் சகோதரி யின் கணவர் ஆர். பார்த்த சாரதியின் முன்னிலையில் தான் கல்கி பத்திரிகை தொடங்கும் முடிவை கல்கி கிருஷ்ணமூர்த்தியும் சதாசிவமும் எடுத்தார்கள் என்பதையும் தெரிவித் தார் கி.ரா. கல்கி இதழுக்கு அதன் ஆசிரி யர் 'கல்கி'யுடைய பெயரையே சூட்ட வேண்டும் என்று வலியுறுத்தியவரும் பரதன் என்ற புனை பெயரில் எழுதி வந்த இந்த ஆர். பார்த்தசாரதிதா னாம்!

'அணில் ஒரு சிறிய பிராணி' என்று பாடநூல் தமிழில் சிக்குண்டு விடா மல், அம் மொழியின் பல்வேறு பரிமாணங் களையும் ரசித்து மகிழ டி.கே.சியின் தொடர்புதான் உதவியது' என்றார் திருமதி ஒய்.ஜி.பி.

அமரர் கல்கியுடைய நாவல்களின் ஆங்கில மொழி பெயர்ப்பைப் பாடநூல் களாக்கினால் மாணவர்களின் கலையார் வமும் நாட்டுப்பற்றும் தூண்டப்படும் என்று கருத்து தெரிவித்தார்.

நிர்வாக அறங்காவலர் கி.ரா.வின் வர வேற்புரை, திருமதி ஒய்.ஜி.பியின் தலைமை யுரை, அறங்காவலர்களுள் ஒருவரான ஆனந்தியின் நன்றியுரை, கிருஷ்ணாவுக்கு கல்கி ஆசிரியர் வாசித்தளித்த விருது பத்திரம் என யாவுமே எளிமையான அழகான தமிழில் அமைந்து, கிட்டத்தட்ட ஒரு மணி நேரத்துக்குக் கலையுணர்விலும்

தமிழுணர்விலும் பார்வையாளர்களைத் திளைக்கச் செய்தன. இந்தக் களிப்புக்கு தமது கஸ்வரமான இறை வணக்கம் மூலம் பிள்ளையார் சுழி போட்டவர் சுமித்ரா வாசுதேவ். 'வாரணமுகவா துணைவருவாய்' என்று கல்கியின் காவல் தெய்வத்தை அவர் அழைத்துப் பாடிய போது, அமரர் கல்கி அந்த விநாயக பெருமானுடன் ஆற்றிய கற்பனை உரையாடல் ஞாபகம் வந்தது :

'இந்தப் பத்திரிகைக்கு மூன்று நோக்கங்கள் உண்டு. முதல் நோக்கம் தேசநலன்; இரண்டாவது நோக்கம் தேச நலன்; மூன்றாவது நோக்கமும் தேச நலன்தான்!' என்று அந்த விநாயகரிடம் கல்கியின் ஆரம்ப இதழில் தெரிவித்தார் அதன் ஆசிரியர்.

அமரர் கல்கி கண்ணெனக் கருதிய தேச நலனில் ஆழ்ந்த அக்கறை கொண்டு அவர் பெயரால் இயங்கும் அறக்கட்டளை செயல்பட்டு வருவதை அன்றைய நிகழ்ச்சி உணர்த்தியது. படிப்பில் சிறந்த, பொருளாதாரத்தில் பின்தங்கிய 162 மாணவர்களுக்கு ஒரு லட்சத்து எண்பத்தாராயிரம் ரூபாய் உதவித் தொகையை அறக்கட்டளை வினியோகித்திருப்பதாக அறிவிக்கப்பட்ட போது செவிகளில் இன்பத் தேன்வந்து பாய்ந்தது என்றுதான் சொல்ல வேண்டும்!

ரசிகமணி டி.கே.சி. பெரிதும் போற்றிய 'பண்பாடு' என்ற சொல்லுக்கு இலக்கணமாகவும் விழாவின் பல நிகழ்ச்சிகள் அமைந்தன: கிருஷ்ணாவின் குரு சீதாராம சர்மாவை மேடைக்கு அழைத்துக் கௌரவித்தனர் அறக்கட்டளையினர்.

கிருஷ்ணாவை சிஷ்யனாய் வரித்துக் கொண்ட செம்மங்குடி தமது வாழ்த்துகளை அனுப்பியிருந்தார். இசைத் துறையைச் சேர்ந்த நட்சத்திரக் கலைஞர்கள் பலரும் சென்னையின் வி.ஐ.பி. ரசிகர்கள் மிகப் பலரும் நிகழ்ச்சிக்கு வந்து மன நிறைவோடு கிருஷ்ணாவின் மகிழ்ச்சியில் பங்கேற்றனர்.

கிருஷ்ண கானம் முடிந்து வெளியே வந்தவர்களின் கையில் ஒரு பொட்டலத்தைக் கொடுத்தனுப்பினார்கள் விழா அமைப்பாளர்கள். பிரித்துப் பார்த்தால், அமரர் கல்கி எழுதிய 'சங்கீத யோகம்' புத்தகம். பெற்றுக் கொண்டவர்களுக்கும் யோகம் தான்!

— அலமேலு கணேசன்

படங்கள் : வெங்கடேஷ்

# 24

"டாக்டரம்மா, உங்களுக்கு போன்" என்றபடி மூச்சிரைக்க வந்து தகவல் கொடுத்தார் கோபால் - தெருவின் எதிர்ச்சாரியில் இருந்த தையல்கடை உரிமையாளர். தனது கடைப் பையனைத்தான் இது போன்ற தகவல்களுக்கு அனுப்புவார். மூன்று நாட்களுக்கு முன்பு அவருக்கு உடனடி மருத்துவ உதவி தேவைப்பட்டு, அதை சிவப்ரியா செய்ததிலிருந்து நேரடியாக வந்து இதுபோன்ற தகவல்களைச் சொல்வதை வழக்கமாக்கிக் கொண்டுவிட்டார். காலையிலிருந்து தனக்கு வரும்



நான்காவது போன்கால். தெரிந்தவர்களுக்கு இந்த எண்ணைக் கொடுத்திருக்கக் கூடாதோ என்று தோன்றியது இப்போது.

"சிவப்ரியா ஹியர்."

"ஆனந்த் பேசறேன்."

"சொல்லுங்க ஆனந்த். டாக்டர் ராம்ஷேகர் எப்படியிருக்கார்? லண்டன் ட்ரிப்புக்குத் தயாராயிட்டாரா?"

"நானோ மத்தவங்களோ எப்படியிருக்கோம்னும் நீங்க கேட்டிருக்கலாம். சரி விடுங்க. நானும் டாக்டர் சந்திரபாலும் சேர்ந்து ஓர் ஆக்ஷன் ப்ளான் தயார் செய்திருக்கோம். சீக்கிரமே நீங்க மறுபடியும் அனு க்ளினிக்கிலே ஜாயின் செய்யும்படி இருக்கும்."

புரியவில்லை. எதை ஆக்ஷன் ப்ளான் என்கிறான்? என்ன திட்டமிடுகிறார்கள்?

ஆனந்தே விளக்கினான். "ஒரு பொய் வழக்கு தொடுக்கப் போறேன்னு ஒரு ஃப்ராடு சொன்னதற்காக உங்களை க்ளினிக்கிலேயிருந்து சஸ்பெண்ட் செய்தது பெரிய அநியாயம். அதற்கெதிராக நாங்க போராடப் போறோம்."

"ப்ரொபசருக்கெதிராகவா? எனக்காகவா? நோ, நோ" பதறினாள் சிவப்ரியா.

"சிவப்ரியாவுக்காக இல்லே. ஒரு சக மருத்துவருக்காக. செய்யாத குற்றத்துக்காக ஒருவர் பலியாக்கப்படக்கூடாது இல்லையா, அதுக்காக. டாக்டர் ராம்ஷேகர் இதுக்கப்புறமும் உங்களை க்ளினிக்கிலே சேர்த்துக்கலேன்னா மெடிகல் ஃபோரத்தில் ரிப்போர்ட் பண்ணலாம்னு இருக்கோம்."

## அருண் சரண்யா



# மனம், மனமறிய ஆவல்

'ஐயோ' என்று அடி வயிற்றிலிருந்து கத்த வேண்டும் போலிருந்தது. அதே சமயம் சுற்றுச் சூழலை நினைத்து வழக்கமான குரலையே கூட மட்டுப்படுத்திக் கொள்ள வேண்டிய கட்டாயம். "ஆனந்த், ப்ளீஸ். இந்த அதிரடி வேலையெல்லாம் வேணாமே. சக மருத்துவர் கிடக்கட்டும். சிவப்ரியாவுக்காக இந்த முயற்சிகளையெல்லாம் விட்டுடுங்களேன்."

"ரொம்ப பதற்றப்படாதீங்க. சரி, அது இருக்கட்டும். கிராமசேவை எப்படியிருக்கு? நீங்க எப்படி இருக்கீங்க?"

"உங்க டெலிபோன் வரவரையில் நல்லாவே இருந்தேன். ஆனந்த், நான் என்ன சொல்றேன்னா.."

"சாரி, டாக்டர். எமர்ஜென்ஸி கேஸ் ஒண்ணு வந்திருக்கு. அப்புறம் பேசறேன்."

தொடர்பு துண்டிக்கப்பட்டது.

"என்ன டாக்டரம்மா?" என்று கேட்ட டெய்லர் கோபாலின் குரலில் "ஏதாவது உதவி தேவைன்னா தயங்காம கேளுங்க" என்ற மறைமுகச் செய்தி தென்பட்டது. "ஒண்ணுமில்லலே மிஸ்டர் கோபால். தாங்க்ஸ்" என்றபடி நகர்ந்தாள்.

படபடப்பாக இருந்தது. ஒரு நிமிடம் நின்று ஆசுவசப்படுத்திக் கொண்டபோது தையல்கடை வாசலில் ஒட்டப்பட்டிருந்த ஒரு சினிமா போஸ்டர் அவள் கவனத்தைக் கவர்ந்தது. மணி சங்கர் நான்கு வருடங்களுக்கு முன் இயக்கிய திரைப்படம் மூன்றாவது ரவுண்டாக மீண்டும் உள்ளூர்த் திரையரங்கை எட்டியிருக்கிறது. 'பார்த்தன்' என்று திரைப்படப் பெயரின் அளவுக்கே அவரது பெயரும் பெரிய எழுத்துக்களில். கடைசிவரை தன் புகழைத் தக்கவைத்துக் கொண்டு போய்விட்டார். 'என் வாழ்க்கையைத்தான் ஊசலாட வைத்துவிட்டீர்கள்' என்று முணுமுணுப்பு எழுந்தது சிவப்ரியாவிடமிருந்து.

பார்த்தன் - அர்ஜுனனின் மறுபெயர்.

'நான்கூட ஒரு விதத்தில் அர்ஜுனன் தான்' என்று ஒருமுறை அவளிடம் குறிப்பிட்டிருக்கிறார். அவரது இயக்கத்தில் நடிப்பதற்கு முந்தைய காலகட்டம் அது. அவரது மனைவிக்கு, தீவிர ரத்த அழுத்தம் ஏற்பட்டு, ரத்தத்தில் சிறுநீர் கலந்துவிட்டது. அதற்காக 'அனு க்ளினிக்'கில் அட்மிட் செய்யப்பட்டிருந்தபோது, தினமும் தம் மனைவியுடன் சில மணி நேரங்களாவது இருந்தார் மணி சங்கர். ஹவுஸ் சர்ஜனாக இருந்த சிவப்ரியாவும் அடிக்கடி அனு க்ளினிக்கிற்குச் செல்வது வழக்கம். நோயாளிகள் தொடர்பான நேரடி அனுபவங்கள் அவள் தொழிலுக்கும் தேர்வை மேலும் வெற்றிகரமாக்கவும் உதவுமே.

மனைவியின் உடல்நிலை கவலைக்கிடமாக இருந்த முதல் இரண்டு நாட்களில் அவளைப் பார்த்து அவர் அறிமுகப் புன்னகையை வீசியதோடு நின்றிருந்தார். அதற்குப் பிறகுதான் பேசத் தொடங்கினார்.

"நிஜத்தைச் சொல்லும்மா, ப்ரேமாவின் உடல்நிலை அபாய கட்டத்தை முழுசும் தாண்டிருச்சா?"

"கவலைப்படவே வேணாம் சார். இப்ப அவங்க நல்லா ஆயிட்டுவராங்க. இன்னும் நாலு நாளிலே நார்மலாயிடுவாங்க. மத்தபடி டீட்டெய்ல்ஸ நீங்க சீஃப்கிட்டே கேட்பதுதான் சரி."

"நான் சொன்னதை யோசிச்சியாம்மா."

சிவப்ரியாவுக்குச் சற்றுக் கோபம் வந்தது. "யோசிக்கவே தேவையில்லைன்னு அன்னிக்கு ஹாஸ்டலிலேயே சொன்னேனே சார்."

மணி சங்கர் சிரித்தார். அதில் கண்ணியம் இருந்தது. "என்னை அர்ஜுனன்னு சொல்வா என் மனைவி" என்றார்.

இப்போது சிவப்ரியாவுக்குச் சிரிப்பு வந்தது. அப்படிச் சொல்வது பாராட்டா அல்லது?...

"சிரிக்காதே சிவப்ரியா. ப்ரேமாவைத் தவிர என் வாழ்க்கையிலே வேற யாருக்கும் இடமில்ல. அவ சொன்னது வேறே அர்த்தத்திலே. மரக்கிளையிலே இருக்கிற பறவையை அம்பாலே வீழ்த்தணும்னு துரோணர் சொன்னதும் அர்ஜுனனுக்கு அந்தப் பறவையின் கழுத்தைத் தவிர வேறெதுவும் தெரியல்லியாம். அந்த மாதிரி நான் ஒரு முடிவெடுத்தால் அதைத் தவிர வேறெதுவும் என் கண்ணுக்குத் தெரியாது."

புரிந்தது. எப்பாடு பட்டாவது அவரது படத்தில் தன்னை நடிக்க வைத்துவிடுவேன் என்கிறார்.

"நான்கூட ஒரு விதத்திலே அர்ஜுனன் தான் சார். என்னைப் பொறுத்தவரை பறவையின் கழுத்துன்றது மருத்துவ சேவை" என்றாள்.

மணிசங்கரின் முகத்தில் தோல்வி நிழல் தெரிந்தது. ஆனால் அதற்கு நாலாவது நாளே அந்த நிழல் அகலுமென்றும் அது சிவப்ரியாவின் முகத்தில் கவியுமென்றும் இருவருமே அன்று எதிர்பார்த்திருக்கவில்லை.

வெற்றிக் களிப்போடு அவர் கேட்டார். "இப்ப என்ன சொல்றேம்மா. என் படத்திலே

---

**"சார்... ரெண்டு நாளைக்கு மட்டும் நான் ஆபீசுல தங்கிக்கலாமா?"**

**"எதுக்கு?"**

**"கணவன் மனைவி உறவு பலப்படும்னு எனக்கு ராசி பலன்ல எழுதித் தொலைச்சுருக்கு!"**

**- அம்பை தேவா**



நடிக்கிறியா?"

அதிர்ந்து போனாள் சிவப்ரியா. "சார், எதுக்கும் எதுக்கும் முடிச்சு போடறீங்க?"

"வேறே வழி இல்லம்மா. இதுதான் என்னோட துருப்புச் சீட்டு. தற்செயலா அமைஞ்ச துருப்புச் சீட்டு. நீ சினிமாவிலே நடிக்கணும்னு விதிச்சிருக்கும்மா."

"இது நியாயமா? உங்களுக்கு என் லட்சியம் பற்றித் தெரியும்."

"இருக்கட்டுமே. என் படத்துலே நடி. அதுக்கப்புறமும் டாக்டர் தொழில்தான் உன் லட்சியம்னு நீ நினைச்சா சினிமாவுக்கு முழுக்கு போட்டுட்டு டாக்டராகவே இருந்துடேன்."

கண்கள் கலங்க உடல் நடுங்கக் காட்சியளித்த சிவப்ரியாவைப் பார்த்து சற்றே பரிதாபமும், 'அட, சோகக் காட்சிகளில்கூட இவ ஜமாய்ச்சுடவா போலிருக்கே' என்று சுயநல மதிப்பீடும் ஒருங்கே எழுந்தன அவருக்கு. என்ன செய்ய, அவரது லட்சியத் திரைப்படத்திற்கு இவள் முழுவதும் பொருத்தமாக இருக்கிறாளே. கடந்த நான்கு மாதங்களாகத் தேடியும் அந்தப் பாத்திரத்திற்கு வேறு யாரும் ஏற்றமாதிரி அமையவில்லை.

"நான் உங்க படத்திலே நடிச்சால்.."

"ஒப்பந்தத்திலே கையெழுத்திட்ட அடுத்த நொடியே இதை உன்னிடத்திலே கொடுத்துடறேன்."

அவரது கையில் 'அந்தத் தாள்' படபடத்தது.

அதற்குமேல் யோசிக்கவில்லை சிவப்ரியா. "நான் நடிக்கிறேன்" என்றாள்.

"உனக்கென்ன பைத்தியமா? எதுக்காக நீ மெட்ராஸ் போகணும்? திரும்பத் திரும்ப தனிமையிலே தவிக்கத்தான் ஆண்டவன் என்னைப் படைச்சிருக்கானா?"

"நீயும் கூட வரலாம்மா" என்றாள் சிவப்ரியா.

"அது கிடக்கட்டும். எதுக்காக மெட்ராஸ் போணும்கிறே நீ?"

ஆனந்தின் தொலைபேசித் தகவலையும் அதன் தொனியையும் கேட்டால் இந்தப் போராட்டத் திட்டம் அவனது தனிப்பட்ட வியூகமாகத் தெரியவில்லை. ஒட்டு மொத்தமாக அனு க்ளினிக்கைச் சேர்ந்தவர்கள் அணி திரண்டிருக்கிறார்களா? டாக்டர் ராம்ஷேகருக்கெதிராகப் போராடப் போகிறார்களா? லண்டன் கிளம்ப வேண்டிய நேரத்தில் இந்தப் புதுத்தொந்தரவால் அவரது மனநிலை அமைதியை இழக்குமே. உடனே சென்னைக்குக் கிளம்பிச் சென்று தடுத்து விடவேண்டும் என்ற எண்ணம் வலுப் பெற்றுக் கொண்டே வந்தது.

உண்மையைச் சொன்னால் அம்மா தடுப்பாள். அந்தப் போராட்டம் மிக நியாயமானதுதான் என்று உணர்ச்சிவசப்படுவாள். போதாக்குறைக்கு, போன வாரம்தான் அடுத்த தெருவில் இருக்கும் சோமசேகர் மாமா வேறு "உங்க பொண்ணு, அந்த டாக்டர் ராம்ஷேகர் மேலே வழக்கு தொடுக்கலாமே" என்று அம்மாவிடம் தூபம் போட்டிருந்தார். இப்போது இது அவல்.

"எதுக்குடி போகணும்? அந்த மகானுபாவனை லண்டனுக்கு வழியனுப்பி வைக்கணுமா?"

"ஆமாம்னு வச்சுக்கோயேன்."

"அந்த ஆள், உன்னை வழியனுப்ப ரயில்வே ஸ்டேஷனுக்குக் கூட வரல்லே, ஞாபகம் வச்சுக்கோ."

எதை நினைவில் வைத்துக் கொள்ளக் கூடாதோ அதெல்லாம் அம்மாவுக்குத் தெளிவாக ஞாபகம் இருக்கும்.

"அம்மா, அவர் எனக்குச் செய்த நல்லதுக்கெதிரே இதெல்லாம் தூசு" என்றபடி தனது பெட்டியில் உடைகளை வைத்துக் கொள்ளத் தொடங்கிவிட, அம்மாவுக்கு வேறு வழியில்லாமல் போனது. தானும் தனது உடைகளை ஒரு பெட்டியில் அடுக்கத் தொடங்கினாள்.

(தொடரும்)



"என்னங்க, நம்ம தலைவர் ரொம்ப அப்பாவியா இருக்காரு?"

"ஏன், என்னாச்சு?"

"சபாநாயகர், இத்துடன் அவை ஒத்தி வைக்கப்படுகிறதுன்னு சொல்றாரு. நம்ம தலைவர் நடுவுல புகுந்து எவை எவைன்னு பட்டியல் தரச் சொல்லி கூச்சல் போடுறாரு."

- தஞ்சை. மகா



• பூங்குழலி



• வானதி



• அருள்மொழிவர்மன்

எனக்கு மகன் பிறந்தால், 'அருள்மொழிவர்மன்' என்ற பெயரைச் சூட்டுவேன் என கல்கிக்கு எழுதியதால், 1984 ஆம் ஆண்டு 'ராக மாலிகா'வுடன் இணைந்து தாங்கள் நடத்திய பரிசுப் போட்டியில், பட்டுச் சேலை பரிசாகப் பெற்றேன்.

அதேபோல் என் மகன் பிறந்தவுடன், அதையும் தங்களுக்குத் தெரிவித்தேன். அந்தச் செய்தியும் பிரசுரமானது. தற்சமயம் அருள்மொழிவர்மன் ப்ளஸ் டு படிக்கிறான். எஸ்.எஸ்.எல்.சி.யில் 445 மதிப்பெண் வாங்கியுள்ளான். பூகோளம் மற்றும் வானவியலில் அவனுக்கு இயற்கையான ஆர்வமுண்டு. இதுவும் பிரசுரமானால் என் மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை.

- எஸ்.எஸ். செண்பகராஜன், சிவகாசி



• நந்தினி



• பார்த்திபன்



• வானதி



• வானதி

பேராசிரியர் கல்கி அவர்களின் பேராற்றல் மிகுந்த தமிழ் நடையால் ஈர்க்கப்பட்ட பல கோடி வாசகர்களில் நானும் ஒருத்தி. எங்கள் இரண்டாவது மகளுக்கு 'வானதி' என்ற பெயரை அவள் பிறப்பதற்கு முன்பே தீர்மானித்துவிட்டோம். மிகச் சிறந்த மன்னர் மன்னனை மணந்து, ஆற்றல் மிக்க பேரரசனை ஈன்ற அந்த பாக்கியவதியைப் போல், எங்கள் மகளும் விளங்க வேண்டும் என்ற ஆசையே (பேராசை!) காரணம்.

வானதி, லேடி ஆண்டாள் வெங்கட சுப்பாராவ் பள்ளியில் ஏழாம் வகுப்பு படிக்கிறாள்.

- பிரத்திமா கணேஷ்ராம், சென்னை - 29



• சிவகாமி



• வானதி

எங்கள் மகள் கே. தாரிணி, வித்யா மந்திர் பள்ளியில் ஐந்தாம் வகுப்பு படிக்கிறாள். படிப்பிலும் சங்



• கே. தாரிணி



• தாரிணி



• பூங்குழலி



• வானதி

• வானதி





• பூங்குழலி



• வானதி

கீதத்திலும் நல்ல ஆர்வம் உள்ளவளாக இருக்கிறாள். தேர்வு களுக்கு என தனியாக படிப்பதே கிடையாது. இருந்தும், நல்ல மதிப் பெண்கள் பெறுகிறாள். பாபனாசம் சிவன் எழுதிய இராமாயணத்தை பாபனாசம் டாக்டர் ருக்மணி ரமணி குழுவுடன் சேர்ந்து இருபத்தைந்து இடங்களில் பாடி யிருக்கிறாள்.

- ஹரி கிருபா கண்ணன்,
சென்னை - 18



• பூங்குழலி



• தாரிணி



• வானதி தேவி

**நா**ன் ஆனைக்காரன் சத்திரம், வெங்கடேசா மேநிலைப்பள்ளியில் இடைநிலை ஆசிரியராகப் பணியாற்று கிறேன். பேராசிரியர் கல்கியின் எழுத்துக்கள்மீது எனக்கு பித்தே உண்டு. அவரது படைப்புகளால் ஈர்க்கப்பட்ட நான், எனது மகள்களுக்கு, பூங்குழலி, வானதி என பெயரிட்டிருக்கிறேன்.

- வி. நாகராஜன், ஆயங்குடிப்பள்ளம்.



• வானதி



• தாரிணி

## வாழும் கல்கி கதாபாத்திரங்கள்



• வானதி



• அருண்மொழி



• வானதி



• குந்தவைதேவி

# மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை!



• வானதி



• நந்தினி



• பொன்னியின் செல்வன்



• வானதி



• குந்தவை



• தாரிணி

# மாற்றான் தோட்டத்து மல்லிகைகள்!

**சமீபத்தில், சில பத்திரிகைகளில் பிரசுரிக்கப்பட்ட வாசகர் கடிதங்களின் சுருக்கம்: (ஓரளவு சுருக்கப்பட்டுள்ளன.)**

"ராபர்ட் க்ளைவ் மீது, 2,34,000 பவுண்டுகள் மதிப்புள்ள சொத்துக்களை முறைகேடாக குவித்ததாகக் குற்றம்



சுமத்தியது ஆங்கிலேய பாராளுமன்றக் குழு. வங்காளத்தைத் தம் முயற்சியால் வெற்றி கண்டதால்தான் இந்தச் செல்வத்தைக் குவிக்க முடிந்தது என்று குறிப்பிட்ட ராபர்ட் க்ளைவ், தாம் இந்த அளவும் போதுமென்ற மனத்தோடு செயல்பட்டதற்காகத் தம்மையே வேறு பாராட்டிக் கொண்டார்!

ஆனால் மேற்படி குழு தீவிரமாக தனது செயல்பாட்டைத் தொடர, கழுத்தைக் கத்தியால் அறுத்துக் கொண்டு, ராபர்ட் க்ளைவ் இறந்தார்.

ராபர்ட் க்ளைவ் அழுத்தக்காரர்தான். ஆனால் கணிசமான நமது



அரசியல்வாதிகளும், அரசு அதிகாரிகளும் அவரைக் காட்டிலும் அழுத்தக்காரர்கள்.

('டைம்ஸ் ஆஃப் இந்தியா' - கடிதம் எழுதியவர் – அகஸ்டஸ் டிசௌஸா, மும்பை)

"**நா**ன் ஓர் ஆசிரியை. ஏழு வயதுச் சிறுவனுக்குத் தாயும் கூட. அவன் மாநில அரசின் பள்ளியில் மலையாள மீடியத்தில் மூன்றாம் வகுப்பு படிக்கிறான். கற்றுச் சூழலை நன்கு கவனித்து மனத்தில் வாங்கிக் கொள்பவனாக இருக்கிறான். தனது



கற்பனைத் திறனை நன்கு பயன்படுத்திக் கொள்கிறான்.

வழக்கமான கல்வி முறை கொண்ட பள்ளிகளில் படிக்கும் சிறுவர்கள் பல்வேறு நாடுகளின் தலைநகரங்கள், எங்கெங்கே எந்தெந்த தாவரங்களும், கனிமங்களும் அதிகம் உள்ளன என்பதையும் மனப்பாடமாகச் சொல்கிறார்கள். ஆனால் இவை குறித்த தெளிவான ஞானம் இல்லை அவர்களுக்கு.

அக்கம் பக்கத்தில் உள்ள தாவரங்கள் குறித்த பலவித விவரங்களை ஆராய்ந்து அறிந்து கொண்டிருக்கிறான் என் மகன். இந்தப் பகுதியில் உள்ள பறவைகள், மிருகங்கள், அவை வசிக்குமிடங்கள் போன்றவை அவனுக்குத் தெரியும்.

கேந்த்ரிய வித்யாலயாவில் நான்

படித்த நாட்களை எண்ணிப் பார்க்கிறேன். அற்புதமான ஆசிரியர்கள். ஆனால் எதற்காக அந்தக் கரடுமுரடான கணிதத் தியரங்களையும், விதிகளையும் படித்தோமென்று இன்னமும் விளங்கவில்லை. பிற்காலத்தில் அவற்றால் ஒரு பயனும் இல்லை.

ஆசிரியர்களையே சார்ந்திருக்கும் நிலையிலிருந்து விடுபட்டு சுற்றுப்புறத்திலிருந்து கற்றுக் கொள்ள வைக்கும் கல்வி முறையே சிறந்தது."

('ஃப்ரண்ட்லைன்' கடிதம் எழுதியவர்- ஜஹுரா ரஹ்மான், அரேகோடு, கேரளா.)

"முலாயம்சிங் யாதவுக்கு எதிராகப் பொதுநல வழக்கு ஒன்று தொடுக்கப்பட்டுள்ளது. தான் பாதுகாப்பு அமைச்சராக இருந்த பதினெட்டே மாதங்களில் 307 முறை விமானத்தில் பயணம் செய்திருக்கிறார். அவற்றில் மூன்றில் ஒரு பங்கு பயணங்களாவது லக்னோவிலிருந்து தொடங்கியிருக்கின்றன. அல்லது அங்கு முடிவடைந்திருக்கின்றன!

'பாதுகாப்புத் துறை விமானங்களைப் பயன்படுத்தியது குறித்து புலனாய்வு செய்யப்பட்டால் அது தன்னோடு நின்றுவிடக் கூடாது. தனக்கு முந்தைய 27 பாதுகாப்பு அமைச்சர்கள் மற்றும் தற்போதைய அமைச்சர் ஆகியோர் மீதும் புலனாய்வு நடத்தப்பட வேண்டும்' என்கிறார் யாதவ்.

எப்படியோ அரசுக்குச் சேர வேண்டிய இதுபோன்ற பாக்கித் தொகைகள் உடனடியாக வசூலிக்கப்பட வேண்டும்."

('தி வீக்' கடிதம் எழுதியவர் - பி. அனந்தா, பெங்களூர்.)

ஒரு வருடத்துக்கு முன் நியூயார்க் சென்றிருந்தேன். அங்குள்ள சுரங்கப் பாதையில் பயணம் செய்தபோது பிரமிப்பு ஏற்பட்டது. பெரும்பாலான அமெரிக்கர்கள் தாங்கள் அமர்வதற்கு முன் அந்த இடத்தை 'நுண்ணுயிர்களைக் கொல்லக்கூடிய மருந்து' அடங்கிய துணியொன்றால் துடைத்துக் கொண்டனர். பயணத்தின்போது அருகிலிருந்த கம்பத்தைப் பிடித்துக் கொள்ள வேண்டுமோ எனக் கருதி அதையும் சுத்தம் செய்து கொண்டனர். ஒரு பெண்மணி தன்னைத் தவிர வேறெந்தப் பொருளைத் தொட்டாலும் உடனே தன் கையில் 'சுகாதார ஸ்ப்ரே'யை ஒருமுறை அடித்துக் கொண்டார்.

இந்தப் போக்கு வருங்காலத்தில் சமூக வாழ்வை எந்த அளவு பாதிக்கக்கூடும் என்பதை எண்ணினால் பயமாக உள்ளது. வார இறுதியில், பலருடன் கலந்து உற்சாகமாக இருப்பதற்குப் பதில் சுகாதார ஸ்ப்ரே, வாக்குவம் க்ளீனர், டிடர்ஜென்ட்டுகள் இவற்றோடு பொழுதைக் கழிப்பதே மேல் என்றாகிவிடும். இன்னும் இருபது ஆண்டுகளில் கைகுலுக்கும் பழக்கமே மறைந்து விடலாம்!"

('நியூஸ்வீக்' இதழ் கடிதம் எழுதியவர் - மால்கம் பெய்த், பிரிட்டன்)

— ஜி.எஸ்.எஸ்.



**கல்கி – பி.எம். சில்க்ஸ் இணைந்து வழங்கும் பட்டுப்புடைவை பரிசுப் போட்டி முடிவு – 5**

**'வைரம் எங்கே?' என்று தேடச் சொல்லியிருந்தோம். அனைவருமே சரியாக கண்டுபிடித்து ஒட்டி அனுப்பியிருந்ததால் குலுக்கல் முறையில் ரூ. 2500/- மதிப்புள்ள பட்டுப் புடைவை பரிசாகப் பெறுபவர்:**

**எஸ். சரவணகுமார்.**
**H- 4-B, பாரதிதாஸன் காலனி,**
**கே.கே. நகர், சென்னை – 78**

## பளிச்!

'சிந்தையில் நிறைந்த விந்தை மனிதர்' கட்டுரை 'கல்கி' சதாசிவத்தின் பன்முகங்களைப் பளிச்சிடச் செய்தது. சதாசிவம் 100 அல்ல; 100 சதாசிவம். ஆம், நூறு பேர் சாதனைகளை ஒருவரே அல்லவா சாதித்துள்ளார்!

ஊத்தங்கரை, கவி. செங்குட்டுவன்

## பாராட்டு!

'பொத்தல் வாழ்க்கை' தலைப்பில் அமைந்த கவிதை வரிகள், மனத்தில் தடம் பதித்தது. உதய சங்கர் பாராட்டுக்குரியவர்.

போடிநாயக்கனூர், பாலசுப்பிரமணியம்

## அருமை!

சாந்தா தத் எழுதிய 'அடிமைகள்' மிக அருமை. மெகா சீரியல்களின் மோகத்தில், இயல்பான குடும்பச் சூழலைவிட்டு, வெகு தொலைவு வந்துவிட்ட அனைவருக்கும் சாட்டையடி.

சென்னை, ஆர். விஸ்வநாதன்

## சூப்பர்!

மனிதனுக்குக் கடவுள் சொன்ன பதில்களைவிட மனிதன் கேட்ட கேள்விகள்தான் மனத்தில் நிற்கின்றன. கடைசியாக கடவுள் சொன்ன பதில்தான் சூப்பர். 'அனுபவம் என்பதே நான்தான்.'

கேரளா, மேரின் கிரிஸ்டி




# ஸாரி, காலை வாரி விட்டது!

## எடுத்துக்காட்டு

உண்மை, உழைப்பு, உயர்வு என்பதற்கு வானதி பதிப்பக உரிமையாளர் ஓர் எடுத்துக்காட்டு.

திண்டுக்கல், செ.ரா. ரவி

## நேரலாமா?

'கணக்குப் பாடம் காலை 'வாறி' விட்டது' என்றும், 'சரிகா'வைப் போல கிளாமரை... (சரிதா என்று இருக்க வேண்டும்) என்றும் தவறுதலாக அச்சாகியுள்ளது. நான் பெருமையுடன் போற்றி மதிக்கும் கல்கி இதழில் தவறுகள் நேரலாமா?

அம்மனூர், இரா. சம்புலிங்கம்

## புகழாரம்

சின்ன குத்தூசியாரின் கட்டுரை, மூப்பனாரின் காங்கிரஸ் பற்றை ஒரு படி மேலே உயர்த்திக் காட்டியது. மொத்தத்தில் இரண்டாவது காமராஜர் என்பதுதான் மூப்பனாருக்குப் பொருத்தமான புகழாரம்.

கும்பகோணம், புலவர் எஸ்.கே.மூர்த்தி

## வாழ்க!

'துணிச்சல் ஸ்ரீ' அட்டைப்படக் கட்டுரை படித்தேன். இவரைப் போன்ற தொழில் தீவிரம் மிக்க பெண்கள்தான் நம் நாட்டுக்குத் தேவை. வாழ்க வளமுடன்!

மொரட்டுப்பாளையம், விஜயஸ்ரீ

## நயம்

மனசுக்குள் நிகழும் யதார்த்தமான எண்ண ஓட்டங்களை - வெகு துல்லியமாக நயமாக - படம் பிடித்துக் காட்டியது 'மனம்' சிறுகதை.

விழுப்புரம், ஆர். ராஜகோபால்

# பத்தே நாளில் சமஸ்கிருதம்

'சமஸ்கிருத பாரதி' அமைப்பு, அண்மையில் சென்னை மாநகரின் மூப்பது இடங்களில், சமஸ்கிருதத்தில் பேசுவதற்கான பத்து நாள் பயிற்சி வகுப்புகளை நடத்தியது. இந்த அமைப்பின் பொறுப்பாளரான ராமசந்திரன் விவேகானந்தா கல்லூரியில் சமஸ்கிருதப் பேராசிரியராய்ப் பணி புரிகிறார்.

''உலகில் எத்தனையோ மொழிகள் இருந்தாலும் கம்ப்யூட்டரில் பயன்படுத்துவதற்கு மிகவும் ஏற்ற மொழி சமஸ்கிருதம் தான் என்று கம்ப்யூட்டர் நிபுணர்கள் குறிப்பிடுகிறார்கள். பேச்சு வழக்கிலிருந்து ஏறத்தாழ மறைந்தே விட்ட சமஸ்கிருதத்தைப் பேச்சு வழக்குக்குக் கொண்டு வரும் முயற்சியில் ஈடுபட்டிருக்கிறோம். பத்து நாட்களில் எப்படி ஒரு புது மொழியைப் பேசக் கற்றுக் கொண்டு விட முடியும் என்கிற ஆர்வம்தான் பலரை வரவழைக்கிறது. வருகிறவர்களில் எழுபது சதவிகிதம் பேர் பத்து முதல் நாற்பது வயதுக்குட்பட்டவர்கள். எந்தவித சமஸ்கிருதப் பின்னணியும் இல்லாத, பல்வேறு ஜாதி, மதத்தினர் இந்த வகுப்புகளில் சேருகிறார்கள். நாங்கள் கற்பிக்கும் முறை மிக எளிதானது. எனவே, பத்து நாள் உரையாடல் பயிற்சி வகுப்புக்குப்பின், சரளமாக, சமஸ்கிருதத்தில் உரையாட முடியும். தபால் மூலமும் பயிற்சி தரப்படுகிறது. அனைத்தும் இலவசம்தான்'' என்கிறார் ராமச்சந்திரன்

பேட்டி: எஸ். சந்திரமௌலி



• ராமகிருஷ்ண மடத்தின் சுவாமி கௌதமானந்தாவுடன் பேராசிரியர் ராமசந்திரன்

ரமாவின் ஃப்லூடா குரலுக்கும் சக்கரை முருகேச பாண்டியனின் கனத்த குரலுக்கும் சென்னையில்- அதாவது ரேடியோ பண்பலை ஒலிபரப்பு கேட்கும் பகுதிகளில் ரசிகர்கள் அதிகம்.

நேயர்கள் தொலைபேசியில் சொல்லும் கவிதைகள், விடுகதைகள், நகைச்சுவை, இடையிடையே சில சினிமா பாடல்கள் என்று இவர்கள் நடத்தி வரும் 'இனிய நேரம்' நேரடி ஒலிபரப்பு நிகழ்ச்சி ரொம்ப பாப்புலர்! டீவிக்கு ஒரு பெப்சி உமா, என்றால் ரேடியோவுக்கு இந்த ரமா!

"நேத்து இனிய நேரம் நிகழ்ச்சிக்கு நீங்க ஏன் வரலை? உங்க குரலையும் சிரிப்பையும் கேட்க முடியாம எனக்கு வேலையே ஓடலை மேடம். ஏன் லீவ் போட்டுட்டீங்க?" என்று மறு நாள் நிகழ்ச்சியில் கேட்கும் நேயர்களுக்கு, தமது ஃபேவரிட் சிரிப்பையே பதிலாக வழங்குகிறார் ரமா!

திங்கள் முதல் வெள்ளி வரை மதியம் இரண்டு மணியிலிருந்து மூன்று மணி வரை நடைபெறும் இந்த நிகழ்ச்சி நேயர் கருத்தாய்வு பிரிவின்படி தொடர்ந்து முதலிடத்தை வகித்து வருகிறது!

"இந்த நிகழ்ச்சி சக்சஸ் ஆனதுக்கு முக்கிய காரணமே தனியார் டீவிகள்தான்! இந்த நிகழ்ச்சி ஒலிபரப்பாகிற நேரத்துல அநேகமா எல்லா சேனல்களிலுமே ஒரே அழுகை சீரியல்ங்க தான் வருது. அதை விரும்பாதவங்க எங்களோட நிகழ்ச்சியை ரசிக்கறாங்க. இது ஓர் அறிவுபூர்வமான நிகழ்ச்சின்னு நாங்க சொல்லலை. ஆனா கேட்கறவங்க மனசை 'சட்டு'னு தொடும்னு மட்டும் கண்டிப்பாச் சொல்வேன்" என்கிறார் ரமா.

"என் அப்பா சென்னை வானொலியில் நூலகரா இருந்து ஓய்வு பெற்றவர். ரேடியோவுல கல்வி ஒலிபரப்புத் துறைக்கு ஆள் எடுக்கறதாக் கேள்விப்பட்டு முயற்சி செய்தேன். உடனே கிடைச்சுடுச்சு" என்று சொல்லும் ரமாவின் கணவர் கந்தசாமி, மாநில அரசின் தொழில் துறையில் உதவி இயக்குனராகப் பணிபுரிவது கொடைக்கானலில்.

"நிம்மதி! இங்க கொடைக்கானல்ல பண்பலை கேட்காது" என்று வெறுப்பேத்தும் அவரை, பதிவு செய்து வைத்த 'இனிய நேரம்' நிகழ்ச்சிகளைக் கேட்கச் செய்து, சந்தோஷப்பட்டுக் கொள்வாராம் ரமா.

"எங்க ஸ்டேஷன் டைரக்டர் பி.ஆர். குமார் நேயர்கள் நேரடியா கலந்துக்கற



• ரமா - சக்கரை முருகேச பாண்டியன்

மாதிரியான நிகழ்ச்சிகளை நாம நிறைய பண்ணணும். அதையும் நேரடி ஒலிபரப்பு செய்தால் நல்ல வரவேற்பு இருக்கும்னு சொல்லி அவர்தான் இந்த நிகழ்ச்சிக்கு ஒரு வடிவம் கொடுத்தார். முழு சுதந்தரம் தந்து என்கிட்ட ஒப்படைச்சார். ஆரம்பத்துல இந்த நிகழ்ச்சி இவ்வளவு பெரிய வெற்றி அடையும்னு நாங்க யாருமே எதிர்பார்க்கலை. 2000 ஜூலை ஒன்றாம் தேதி இனிய நேரத்தை தொடங்கினோம்.

"ரமாவோட சிரிப்புக்காகவே நிறைய நேயர்கள் இருக்காங்க. அதுல ஒரு இடைஞ்சலும் வந்தது. ஒரு நாள் நிகழ்ச்சி நேரடியா ஓடிட்டிருக்கு. ஒரு நேயர் ஃபோன்ல 'ரமா! உன் குரல் தேனினும் இனிமை. குயிலைவிட பன்மடங்கு உயர்வு. உன் கன்னமோ மாம்பழம்'- இப்படின்னு வரம்பு மீறி பேச ஆரம்பிச்சார். ரமாவுக்கோ தர்மசங்கடமாப் போச்சு. நான் உடனே "பாருங்க ரமா! உங்களோட வசீகரக் குரல் ஒரு சாதாரண நேயரைக் கூட என்ன அற்புதமா கவிதை எழுத வச்சிருக்கு"னு சொல்லி அந்த நேயரைப் பேச விடாம வெட்டி விட்டுட்டு, சினிமாப் பாடல் போட்டு சமாளிச்சேன்!" என்றார் நிகழ்ச்சி தயாரிப்பாளர் சக்கரை முருகேச பாண்டியன்.

'இனிய நேரம்' நிகழ்ச்சிக்கு 2001 ஜனவரி முதல் தேதியன்று புத்தாண்டு வாழ்த்து தெரிவிக்கும் விதமாக தி.நகரிலிருந்து டி. கனகவேல் என்கிற நேயர் 2001 தபால் கார்டுகளை அனுப்பி வானொலி நிலையத்தை திக்குமுக்காடச் செய்து விட்டாராம்!

— மடிப்பாக்கம் வெங்கட்

படம்: யோகா

# பெப்சி உமாவுக்குப் போட்டி?

# இங்கேயே...

இட்லித் தட்டைப் பார்த்துமே உற்சாகமானது மோனு. இடுப்பிலிருந்து எம்பிய குழந்தையை, இறுக அமர்த்திக்கொண்டாள் சுந்தரி. வாசல் கதவைக் காட்டி "யா...னீ..." என்று ஆரவாரித்தது. ஒரு வயது மோனுவுக்கு எல்லாமே சுருக்கெழுத்து பாஷைதான். 'யா' என்றால் ரம்யா!... 'னீ' என்றால் த்வனி. எதிர் ஃப்ளாட்டில் குடியிருக்கும் குழந்தைகள். தினமும் ஏழு மணியாகிவிட்டால் மூன்றுமாகச் சேர்ந்து ஜமாபந்தியை நடத்தி விடும்.

கதவைத் திறந்துகொண்டு உள்ளே வந்த சௌம்யாவின் கைகளில் இரண்டு தட்டுகள். கொஞ்சம் நூடுல்ஸ், உருளைக்கிழங்கு ரோஸ்ட், தக்காளி சூப் என்று கிண்ணங்களில் வகுத்து வைத்திருந்த பாங்கே சுண்டி இழுத்தது. ஊட்டிவிட சிவப்பு பிடி வைத்த ஸ்பூன் வேறு. குழந்தைகளின் சைக்காலஜி தெரிந்தவள்.

வெங்கட் தலையைத் துவட்டியபடியே வெளியே வந்தான். "ஹாய், ரம்யாஜி. டின்னர் டைம் தொடங்கிடுச்சா... இன்னிக்கு என்ன ஸ்பெஷல்?" கேட்டுக்



# இப்படியே!

பாரதி

கொண்டே தரையில் சம்மணமிட்டு உட்கார்ந்தான்.

"நூடுல்ஸ் அங்கிள்! எனக்கு நீங்கதான் ஊட்டிவிடணும்" சுவாதீனமாக அவன் மடியில் அமர்ந்தாள் ரம்யா.

சௌம்யாவின் கணவன் பாலுவுக்கு மஸ்கட்டில் வேலை. வருஷத்துக்கு ஒரு முறைதான் விடுப்பு கிடைக்கும். இரண்டு குழந்தைகளையும் தனியாகச் சமாளிக்கும் அவளுக்கு உதவும் எண்ணத்தில் ரம்யாவை அவ்வப்போது ஸ்வீகரித்துக் கொள்வான் வெங்கட்.

**மோ**னு வாயை இறுக மூடிக் கொண்டு இட்லிக்கு எதிர்ப்பு தெரிவித்தது. "ஓபன்! ஓபன் யுவர் ஹிப்போபொட்டமஸ் மவுத்!" சௌம்யாவின் ஆங்கிலக் கட்டளைக்கு அனிச்சையாய் வாய் திறந்தது.

"எல்லாம் இன்னும் இருபது நாளைக்குத்தான்! இருக்கிறவரை



என்ஜாய் பண்ணிக்க வேண்டியதுதான்!'' சௌம்யா சொன்னதைக் கேட்டு சுந்தரியின் முகம் வாடிப் போனது. வெங்கட்டின் பார்வை ஒரு கணம் அவளை ஊடுருவியது. முந்தைய இரவில் இருவருக்கும் நிகழ்ந்த வாக்குவாதத்தின் தொடர்ச்சியாக ஊசியின் ஊடுருவல்.

ஷெனாய் நகரில் தயாராகிவிட்ட சொந்த ஃபிளாட்டுக்குக் குடி போக நாள் குறித்து விட்டான் வெங்கட். சுந்தரிக்குத் துளியும் இஷ்டமில்லை. அதை வாடகைக்கு விட்டு விட்டு இங்கேயே இருக்கலாமே என்பது அவள் வாதம். வெங்கட் ஒப்புக் கொள்வதாக இல்லை.

"உங்க ஃபிரண்டுக்கு நீங்களே அட்வைஸ் பண்ணுங்க சௌம்யா. தினமும் என்கிட்டே சண்டை பிடிக்கறாங்க. யாராவது கட்டின வீட்டுக்குக் குடி போக, இப்படி முரண்டு பண்ணுவாங்களா?'' வார்த்தைகளில் வழக்கமாக மனைவியைச் சீண்டும் கிண்டல் தொனிக்கவில்லை. காலித்தட்டைக் கொண்டு போகும் சாக்கில் சுந்தரி விருட்டென்று எழுந்து உள்ளே போனாள். அப்போதுதான் சௌம்யாவுக்குச் சூழ்நிலையின் கனம் உறைத்தது.

**ஹா**லை ஒட்டிய அறையின் பால்கனியில் சரிந்து உட்கார்ந்தாள் சுந்தரி. குளிர்ச்சியான காற்று, மகிழம்பூ வாசனையைக் கூட்டுச் சேர்த்துக் கொண்டிருந்தது. பரவிக் கிடந்த இருட்டுகூட உணர்வுகளை மறைத்துக் கொள்ள உதவியாக இருந்தது. எவ்வளவு முயன்றும் சௌம்யாவின் கரம் தோளில் பதிந்த வினாடியில் வெடித்து வந்த அழுகையைக் கட்டுப்படுத்த முடியவில்லை.

இதற்கு முன்பு ஒருமுறை சுந்தரி இப்படி அழுது, சௌம்யா பார்த்திருக்கிறாள். பிரசவத்திற்கு வந்த அவள் அம்மா மூன்றாம் மாதம் மும்பைக்குப் புறப்பட்டபோது! குழந்தையுடன் யாரோ இவளை வனாந்திரத்தில் நிர்க்கதியாய் தள்ளிவிட்டது போல் இப்படித்தான் அழுதாள். சௌம்யாதான் தைரியம் சொன்னாள். குழந்தைக்கு நான்காம் மாதம், ஆறாம் மாதம் என்று ஒவ்வொரு கட்டத்திலும் அறிமுகப்படுத்த வேண்டிய ஆகாரத்தையும் அதற்கான நேரத்தையும் பட்டியலிட்டுத் தந்தாள்.

சௌம்யா அனுபவசாலி. சுந்தரியின் இப்போதைய அழுகைக்கான அடி மனசு அழுத்தம் அவளுக்குப் புரிந்து போயிற்று.

"எனக்கும் கஷ்டமாகத்தான் இருக்கு சுந்தரி. வெங்கட் பிராக்டிகலா யோசிக்கிறார். இங்கே வாடகையும் அதிகம். லாரி தண்ணிக்குத் தனியா ஐந்நூறு ரூபாய் எடுத்து வைக்க வேண்டியிருக்கு. அங்கே போனால் வெங்கட்டுக்கும் ஆபீஸ் பக்கமாயிருக்கு. நீ உன் மனசைத் தேத்திக்கறதுதான் சரின்னு தோணுது.''

"எப்படி சௌம்யா? நம்மளோட லாப நஷ்டக் கணக்கெல்லாம் இந்தக் குழந்தைகளுக்குப் புரியுமா? இப்படி கொத்தும் குலையுமா இருக்கறதுகளைப் பிரிக்க எப்படி மனசு வருது?''

ஹாலில் மூன்று குழந்தைகளையும் கட்டி மேய்க்க வெங்கட் திணறிக் கொண்டிருந்தான். ஐந்து நிமிடத்துக்கு மேல் அம்மாக்களைக் காணாமல் தேட ஆரம்பித்தன.

"நீ ரொம்ப எமோஷனலா இருக்கே சுந்தரி. இந்தப் பிரச்னையை அப்புறமா பேசிக்கலாம்.''

சௌம்யா தட்டுகளைச் சேகரித்துக் கொண்டு குழந்தைகளுடன் வெளியேறினாள்.

**இ**ரண்டு நாளைக்கு எல்லாமே இயந்திர கதியில் இயங்கியது. சௌம்யா வீட்டிலும் விருந்தாளிகள். வாரக் கடைசி கொண்டாட்டங்களுக்குப் பிறகு ரம்யா சுணங்கிக்கொண்டே ஸ்கூலுக்குப் போனாள். சௌம்யா வீட்டு ஹாலில்

"எங்க ஊர் போலீஸ், திருட்டுப் போன ரெண்டே நாள்ல திருடனைப் பிடிச்சிடுவாங்க.''

"ஹும்... இது என்ன பெரிசு...! திருட்டுப் போறதுக்கு இரண்டு நாள் முந்தியே எங்க ஊர் போலீசுக்குத் தெரிஞ்சிடும்!''

— சீர்காழி வி. ரேவதி

மோனாவும் த்வனியும் விளையாடிக் கொண்டிருந்தார்கள். சுந்தரி பிளாஸ்டிக் கூடையிலிருந்த விளையாட்டுச் சாமான்களைப் பரப்பி வைத்தாள்.

"பலவீனமான தருணங்களில் நமக்கெல்லாம் ஒரு வித மனச்சுணக்கம் வந்துடுது சுந்தரி. ஐ மீன் மென்டல் ஃபெட்டிக்!" மெதுவாகப் பேச்சை ஆரம்பித்தாள் சௌம்யா.

"பலவீனமான தருணம்னா?"

"ஒரு கைக்குழந்தையைச் சமாளிச்சு வளர்க்கறதுகூட நம்மை பலவீனமா ஃபீல் பண்ண வைக்கற சமயம்தான். நான்கூட அந்தச் சமயத்துல பாலுவோட நிறைய தர்க்கம் செய்திருக்கேன். இலேசுல எதையும் ஒப்புக் கொள்ளலை."

வாஷிங்மிஷினில் துணிகளைத் திணித்துக் கொண்டே சௌம்யா தொடர்ந்தாள். "இந்த வாஷிங்மிஷின் வாங்கற விஷயத்துலகூட முரண்டு பண்ணியிருக்கேன். அப்ப ரம்யாவுக்கு ஆறு மாசம். குழந்தை துணி நிறைய விழும். பாலு இந்த வாஷிங்மிஷினை வாங்கிப் போட்டார். வேலைக்காரி - என்னவோ முகம் சுளிக்காம தோய்க்கிறா. மிஷின்னு வாங்கிப் போட்டா, அதை நான்தான் ஆபரேட் செய்யணும். எனக்கு டபுள் வேலைதான்னு பெரிசா சண்டை போட்டேன்." சௌம்யாவின் பேச்சும் பளீர் சிரிப்பும் டி.வியில் வரும் விளம்பரப் பெண்ணை நினைவூட்டியது.

"எதுக்கு சொல்ல வர்றேன்னா, ஒரு நல்ல மாற்றத்தைக்கூட எடுத்துக்கத் தயங்கறோம். புதுசா எதையாவது செய்யப் போக, அது சிக்கலாகிப் போனால்? ஓடுகிற வரையிலும் ஓடட்டுமே, இப்படியே இந்த ஏற்பாட்டிலேயே இருந்துடலாமேன்னு நினைக்கிறோம்."

"ஸோ... பிரச்னையே நான்தான்னு சொல்றியா சௌம்யா? நான் குழந்தைகளுக்காக யோசிப்பதை உன்னால்கூடவா புரிஞ்சுக்க முடியலை." சுந்தரியின் குரல் விசும்பியது.

"குழந்தைகளை நினைச்சு ரொம்ப குழப்பிக்கறே சுந்தரி. அவங்க சமாளிச்சுப் பாங்க! எப்படி சமாளிக்கறாங்கன்னு கொஞ்சம் எட்டியிருந்துதான் பாரேன்!" ஈரத்துணிகளுடன் சுந்தரியின் மனசையும் சேர்த்து உதறிப் போட்டாள் சௌம்யா.

**வா**ர்னிஷ் மணம் பிரியாத புதுவீட்டுக்குக் குடி வந்தாயிற்று. மொத்தம் ஆறு போர்ஷன்கள். இரண்டில் அலுவலகம். மற்ற மூன்று வீடுகளிலும் வேலைக்குப் போகும் இளம் தம்பதிகள். பகல் நேரத்தில் அனேகமாய்ப் பூட்டியே கிடந்தது. விளையாட யாருமின்றி, மோனுவின் உற்சாகமெல்லாம் வடிந்துவிட்டதுபோல் தோன்றியது. சௌம்யா ஃபோன் செய்தாள். இவர்கள் குடியிருந்த போர்ஷனுக்கு ஒரு வயதான தம்பதி குடி வந்திருக்கிறார்களாம். ரம்யாவுக்கும் த்வனிக்கும் தாத்தா பாட்டி கிடைத்து விட்டதில் சந்தோஷமாம்!

சமையலறையில் பாத்திரங்களை அடுக்கிக் கொண்டிருந்த சுந்தரியை மோனுவின் குரல் கலைத்தது. "யா! னி!" என்று சந்தோஷம் கொப்பளிக்கக் கூவியது. சௌம்யா குழந்தைகளுடன் வந்திருக்கிறாளா என்ன? அவசரமாய் வெளியே வந்து பார்த்தாள். வாசல் கதவு முகத்தில் அடித்தது போல் மூடியே கிடந்தது. ஜன்னல் பக்கமாக யாரைக் கூப்பிடுகிறது? மோனுவின் தோள் உயரத்துக்குத் தலையை சரித்துப் பார்த்தாள். பக்கத்து வீட்டின் நீண்ட கான்க்ரீட் சுவருக்கு அப்பால் பின்கட்டுப் போர்ஷன் ஜன்னல். அதில் பாறை இடுக்கில் துளிர்த்த பச்சை செடிகளைப் போல இரண்டு பெண் குழந்தைகள். மோனுவைப் பார்த்துச் சிநேகமாய்க் கையசைத்தன. குழந்தையின் கவனம் கலையாமல் மெல்ல நகர்ந்து கொண்டாள் சுந்தரி, எட்டியிருந்து பார்க்க! ○



"ஏன் நம்ப ராமசாமி, குப்புசாமி சார் டேபிளையும் இழுத்துப் போட்டுத் தூங்கறார்!"

"குப்புசாமி, இன்னைக்கு லீவாம். அவர் வேலையையும் ராமசாமியை கவனிச்சுக்க சொல்லிட்டாராம் மானேஜர்!"

– பி.ஆர்.பி



# S.V.முதியோர் இல்லம்



இங்கு முதியோர்களுக்கு இலவச மருத்துவமனை, ஆரம்பிக்கப்பட்டு அனைவரையும் தனித்தனியாக பரிசோதனை செய்து, உடல் ஆரோக்கியம் கண்காணிக்கப் படுகிறது. படுத்த படுக்கையில் உள்ள முதியோர்கள் அனைவரையும் 24 மணி நேரமும் நர்சுகளும், உதவியாளர்களும் கவனித்துக் கொள்கிறார்கள். எமர்ஜென்சி உபகரணங்கள் உள்ளன.

மனச்சிதைவு, மனவளர்ச்சி குன்றிய முதியோர்கள் மற்றும் எல்லா வயது ஆண்/பெண் நோயாளிகளுக்கென்று தனி இல்லம் மருத்துவ வசதியுடன் செயல்பட்டு வருகிறது.

எல்லா வயது உட்பட்ட அதிக பட்ச மனநோயால் பாதிக்கப்பட்ட நோயாளிகளுக்கு (ஆண், பெண் இருபாலரும்) சிறப்பு பாதுகாப்பு வசதியுடன் முற்றிலும் இலவச மருத்துவ வசதியுடன் தனித் தனி இல்லம் செயல்படுகிறது.

உங்கள் பிறந்த நாள் மற்றும் சிறப்பு நாட்களில் நீங்கள் அளிக்கும் ஒரு சிறிய நன்கொடைத் தொகை எங்கள் இல்லத்தில் உள்ள முதியோர்கள் மருத்துவ வசதிக்கு பயன்படுத்துவதுடன், அவர்கள் வாழ்க்கையை காப்பாற்றிய நல்லாசி உங்கள் குடும்பத்திற்குக் கிடைக்கும் மிகப் பெரிய பரிசாகவும் அமையும்.

*முதியோர் சேவை பெரியது!*

நன்கொடைக்கு வருமானவரி விலக்கு (80G, Income Tax Excemption) உண்டு

## S.V. HOME FOR AGED

#8, Janakiraman Colony, Near Arumbakkam Bus Stand,
Arumbakkam, Chennai - 600 106.
Phone: 475 5700; 475 1356; 475 5799
Email: svhome1rediffmail.com

---

சென்னை மாநகருக்கு மிகஅருகில்

## சிறந்த வீட்டு மனைகள்

## பிரதான அமைவிடம், வளமான முதலீடு

MMDA அங்கீகாரம் பெற்ற வீட்டு மனைகள் மிக நியாயமான விலையில்



## சக்தி கார்டன்ஸ்

(இராமச்சந்திரா மருத்துவக் கல்லூரி மற்றும்
சவீதா பல் மருத்துவக் கல்லூரி சமீபம்)

சென்னை - 600 056

• போரூர், கோடம்பாக்கம், கோயம்பேட்டிலிருந்தும் வசதியான ௱ அடி ரோடு • சென்னையின் எல்லாப் பகுதிகளிலிருந்தும் பஸ் வசதி • உத்தேசிக்கப்பட்டுள்ள பூந்தமல்லி ரயில் நிலையம் ஒரு கூடுதல் வசதி • சுவையான குடிநீருடன் அருகில் வீடுகளுடன் தேசிய நெடுஞ்சாலையை ஒட்டி அமைந்துள்ள இந்த மனையை உடனே வாங்குவீர் • உடனே வீடு கட்டவோ அல்லது முதலீடு செய்வதற்கோ சரியான தேர்வு • சுத்தமான பத்திரம் / நம்பகமான நிறுவனம்

☆ சுந்தரம் ஹோம் பைனான்ஸ் லிட் மூலமாக நிதி உதவியும் உண்டு.

**மனையை பார்வையிட தினமும் இலவச வாகன வசதி 7,11 a.m & 3.00 p.m**

Ph : 4357721/31 Fax.4353183. Cell : 98400-44018 E-mail: blbestmail@vsnl.net http://business.vsnl.com/blbestates




## BLB Estates (P) Ltd.

S-3, "Ramana Flats" 27, Rathna Nagar, Off Anna Salai,
(Behind Apollo Cancer Hospital), Teynampet, Chennai - 18.

நம்பிக்கையில் முதலீடு.

# சிவகாமியின் சபதம்

பதினைந்தாம் அத்தியாயம்

## ரதியின் தூது

குதிரை வந்த சப்தம் சிவகாமியின் செவியில் விழுந்தது. குதிரை நின்றதையும் அதன் மேல் வந்த வீரன் இறங்கித் தன்னை நோக்கி நடந்து வருவதையும் அவள் உணர்ந்தாள். வருகிறது இன்னார்தாம் என்பதை அவளுடைய நெஞ்சு அவளுக்கு உணர்த்தியது. இருந்தாலும், திரும்பிப் பார்த்துச் சந்தேகம் தீர வேண்டுமென்ற ஆவல் அளவில்லாமல் எழுந்தது. அந்த ஆவலைப் பலவந்தமாக அடக்கிக்கொண்டு, சிவகாமி சிலையைப் போல் அசையாமல் நின்றுகொண்டிருந்தாள்.

குமார சக்கரவர்த்தி, மாமல்ல நரசிம்மர் கையில் பிடித்த வேலுடன் வந்து சிவகாமியின் அருகில் குளக்கரைப் படியில் நின்றார். குளத்தின் தெளிந்த நீரில் சிவகாமியின் உருவத்துக்குப் பக்கத்தில் நரசிம்மவர்மரின் உருவமும் புலப்பட்டது. அப்போதும் சிவகாமி அவரைத் திரும்பிப் பார்க்கவில்லை.

வீர செளந்தரியம் குடிகொண்டு தேஜஸுடன் விளங்கிய நரசிம்மரின் நவயௌவன முகத்தில் இலேசாகப் புன்னகை அரும்பியது. அவரும் சிவகாமியை நேராகப் பார்க்காமல், தண்ணீரில் பிரதிபலித்த அவளுடைய முழுமதி முகத்தை உற்று நோக்கினார்.

சிவகாமி சட்டென்று முகத்தைத் திருப்பிக்கொண்டு அவளுக்கு இன்னொரு பக்கத்தில் நின்ற மான்குட்டியைப் பார்த்து, ''ரதி! இவர் யார்? எதற்காக இங்கு வந்தார் என்று கேள்'' என்றாள்.

இதைக் கேட்ட நரசிம்மரின் முகத்தில் புன்னகை மறைந்தது. புருவங்கள் நெரிந்தன. அவரும் ரதியைப் பார்த்து, ''ரதி! உன் எஜமானி

அமரர் கல்கி

பரத கண்டத்திலேயே இணையற்ற பரத கலாராணியாகிவிட்டாள் அல்லவா? பழைய சிநேகத்தை நினைவு வைத்திருக்க முடியுமா? 'இவர் யார்?' என்று கேட்கத்தான் தோன்றும். இது ஒன்றும் எனக்கு ஆச்சரியமில்லை, ரதி!" என்றார்.

சிவகாமி ஆத்திரம் நிறைந்த குரலில் கூறினாள்: "ரதி! ஆச்சரியத்தையே அறியாதவரான சக்கரவர்த்தியின் திருக்குமாரருக்கு என்னுடைய ஆயிரங்கோடி நமஸ்காரத்தைச் சொல்லிவிட்டு இதையும் சொல்லு: அவரோ பூமண்டலாதிபதியின் புதல்வர்! தேசதேசங்களின் ராஜராஜாக்கள் எல்லாம் தம் திருப்பாதங்களில் விழுந்து வணங்கப் பெற்ற பிரபு; அப்பேர்ப்பட்டவர்க்கும் இந்த ஏழைச் சிற்பியின் மகளுக்கும் சிநேகம் எப்படிச் சாத்தியம்? அந்த எட்டாத பழத்துக்கு ஆசைப்பட்டது என்னுடைய அறிவீனந்தான் என்பதை உணர்ந்துகொண்டேன், ரதி!"

மாமல்லர் பரிகாசம் தொனித்த குரலில் சொன்னார்: "ரதி! உன் எஜமானிக்கு ஒரு விஷயத்தை ஞாபகப்படுத்து; பரத சாஸ்திர பண்டிதையான சிவகாமி தேவி இப்போது ஆடலரங்கத்தில் நிற்கவில்லை; அபிநயம் பிடிக்கவில்லை. நிருத்தம், நிருத்தியம், ஹஸ்தம், அபிநயம் ஆகியவைகளைக் கொஞ்சம் ஒதுக்கிவைத்துவிட்டு என்னுடன் சுபாவிகமாகப் பேசச் சொல்லு!"


யற்கையில் செவ்வரியோடிய சிவகாமியின் கண்கள் இப்போது கோபத்தினால் கோவைப்பழம் போல் சிவந்தன.

"ஆமாம் ரதி, ஆமாம்! நான் நடன அரங்கத்தில் நடிக்கும் நாடகக்காரிதான். காஞ்சிச் சக்கரவர்த்தியின் திருக்குமாரர் எங்கே? ஆயனச் சிற்பியின் மகள் எங்கே? மாமல்லரின் அருளைப் பெறுவதற்கு அரண்மனைகளிலும் அந்தப்புரங்களிலும் வளரும் எத்தனையோ இராஜகுமாரிகள் தவங்கிடங்கிறார்கள்! அரங்க மேடையில் ஏறி ஆடும் இந்த ஏழைப் பெண்ணின் ஞாபகம் அவருக்கு எப்படி இருக்கும்?" என்று சிவகாமி சொன்னபோது, அவளுடைய குரல் தழுதழுத்தது; அவளுடைய கண்களில் நீர் துளித்தது.

நரசிம்மவர்மர் மனங்கனிந்தவராய் அன்பு ததும்பிய குரலில், "சிவகாமி! ஏன் இப்படியெல்லாம் பேசுகிறாய்? இந்தப் பல்லவ சாம்ராஜ்யத்துக்கு நான் உண்மையில் தலைவனாகும்போது, அரங்கமேடையில் சதங்கை ஒலிக்க ஆடும் உன் அழகிய பாதங்களுக்கு அந்தப் பதவியை அர்ப்பணம் செய்வேன். என் உள்ளம் உனக்குத் தெரியாதா?" என்றார்.

இதனாலும் சிவகாமியின் மனம் மாறவில்லை. மீண்டும் அவள் மான் குட்டியையே பார்த்தவளாய், "ரதி! கதைகளிலும் காவியங்களிலும் புருஷர்களுடைய நயவஞ்சகத்தைப் பற்றி எவ்வளவோ கேட்டறிந்திருக்கிறேன். ஆனால் அவர்களில் யாரும் காஞ்சி குமார சக்கரவர்த்திக்கு இணையாக மாட்டார்கள்" என்றாள்.

நரசிம்மவர்மருக்கு இப்போது உண்மையாகவே கோபம் வந்ததென்று அவருடைய புருவங்களின் நெரிப்பிலிருந்து தெரிந்தது.

"சிவகாமி! ஏன் இன்றைக்கு இவ்விதம் மாறிப் போயிருக்கிறாய்? எவ்வளவோ ஆசையுடன் நான் உன்னைத் தேடி வந்தேன். எவ்வளவோ விஷயங்கள் பேச எண்ணியிருந்தேன். நான் வந்ததே உனக்குப் பிடிக்கவில்லை என்று தோன்றுகிறது. இதோ போகிறேன்" என்று ஓர் அடி எடுத்து வைத்தார்.

அப்போது, சிவகாமி விம்மிய குரலில், "ரதி! அவர் போகிறதாயிருந்தால் போகட்டும். ஆனால், குற்றத்தை என் பேரில் சுமத்தி விட்டுப் போக வேண்டாமென்று சொல்லு!" என்றாள்.

நரசிம்மர் மேலே அடி எடுத்து வைக்காமல் நின்று, "நான்தான் என்ன குற்றம் செய்துவிட்டேன்?" அதைச் சொல்லிவிட்டுக் கோபித்துக்கொண்டால் மிகவும் நன்றாயிருக்கும்!" என்றார்.

சிவகாமி பெண் சிங்கத்தைப் போல் கம்பீரமாக அவரைத் திரும்பிப் பார்த்து, "என்னுடைய நடனக் கலையைப் பற்றி எப்படி எப்படியெல்லாம் பாராட்டிப் பேசினீர்கள்! எவ்வளவெல்லாம் முகஸ்துதி செய்தீர்கள்! அப்படியெல்லாம் பேசிவிட்டு, என் அரங்கேற்றத்துக்கு ஏன் வராமல் இருந்தீர்கள்?" என்று கண்களில் கனல் பறக்கக் கேட்டாள்.

நரசிம்மர் 'கலகல'வென்று சிரித்து, "இதை முன்னமேயே கேட்டிருக்கக் கூடாதா? நான் அரங்கேற்றத்துக்கு வரவில்லையென்று உனக்கு யார் சொன்னது: மேல் உப்பரிகையில் என் தாய்மார்களோடு உட்கார்ந்து பார்த்துக் கொண்டுதான் இருந்தேன். அவர்களுக்குப் பரத சாஸ்திர நுட்பங்களைப் பற்றி அவ்வப்போது எடுத்துச் சொல்லிக்கொண்டிருந்தேன். நான் சபையில் நேரில் வந்து உட்கார்ந்தால், ஒருவேளை உன் ஆட்டத்துக்குப் பங்கம் விளையுமோ என்று பயந்தேன். அதற்காக இவ்வளவு ஆர்ப்பாட்டமா?" என்று கேட்டபோது, சிவகாமியின் முகத்தில் அதுவரை காணப்படாத மகிழ்ச்சியும் மலர்ச்சியும் தோன்றின. நரசிம்மரை ஆர்வத்துடன் நோக்கி, "இதை ஏன் முன்னமே நீங்கள் சொல்லவில்லை?" என்று கேட்டாள்.

"சொல்லுவதற்கு நீ இடங் கொடுத்தால்தானே? இன்னும் எவ்வளவோ சொல்ல வேண்டியிருக்கிறது. உன்னுடைய சிம்மாசனத்தில் உட்கார்ந்து பேசலாம், வா!" என்று கூறி, நரசிம்மர் குளக்கரையில் மரத்தடியில் அமைந்திருந்த பலகையைப் பார்த்தவாறு சிவகாமியின் கரத்தைப் பிடித்து அழைத்துப் போக யத்தனித்தார். சிவகாமியோ, அவர் பிடித்த கையைச் சட்டென்று இழுத்துக்கொண்டு, மானைப் போல் துள்ளிக் கரை மீது ஏறினாள்.

அவர்கள் இருவரும் போய் மரத்தடியில் போட்டிருந்த பலகையில் உட்கார்ந்ததை ரதி தலை நிமிர்ந்து பார்த்துக் கொண்டிருந்தது. இனி நம்முடைய தூது இவர்களுக்குத் தேவையில்லை என்பதைத் தெரிந்துகொண்டது போல், அது குளத்தோரமாகக் 'கருகரு'வென்று வளர்ந்திருந்த பசும்புல்லை மேயச் சென்றது.

## பதினாறாம் அத்தியாயம்

# தடைப்பட்ட திருமணம்

பலகையில் உட்கார்ந்த பிறகும் சிவகாமி வேறு பக்கம் முகத்தைத் திருப்பிக்கொண்டிருப்பதைப் பார்த்த நரசிம்மர், "இன்னும் என்ன கோபம், சிவகாமி? இப்படி நீ பிடிவாதம் பிடிக்கும் பட்சத்தில் என்னிடம் உனக்குப் பிரியம் இல்லை என்றுதான் எண்ணிக்கொள்வேன்" என்றார்.

சிவகாமி உடனே திரும்பி, நரசிம்மரின் முகத்தை ஏறிட்டுப் பார்த்து, "உங்களுக்கு மட்டும் என்னிடம் பிரியம் இருக்கிறதா? இருந்தால் இந்த மூன்று நாளாக என்னுடைய ஞாபகம் இல்லாமற் போனதேன்?" என்று கேட்டாள்.

"இந்த மூன்று தினங்களாக நானும் உன்னைப் பார்க்க வர வேணுமென்று துடித்துக்கொண்டுதான் இருந்தேன். ஆனால் முக்கியமான இராஜாங்க வேலைகள் குறுக்கிட்டன. அன்றைக்கு உன்னுடைய அரங்கேற்றத்தை நடுவில் முடிக்கும்படி நேர்ந்தது ஏன் என்று உனக்குத் தெரியாதா? பல்லவ சாம்ராஜ்யத்தில் பல வருஷங்களாக இல்லாத பெரிய யுத்தம் வந்திருக்கிறது..."

இவ்விதம் நரசிம்மர் சொல்லி வந்தபோது சிவகாமி குறுக்கிட்டு, "நானும் கேள்விப்பட்டேன். யுத்தம், வந்துவிட்டதே என்று நினைத்து நினைத்துக் கவலைப்பட்டுக்கொண்டிருந்தீர்களாக்

கும்!'' என்றான்.

''கவலையா? ஒருநாளும் இல்லை. சிவகாமி! பல்லவ குலத்தில் பிறந்தவர்கள் யுத்தம் வந்துவிட்டதே என்று கவலைப்பட மாட்டார்கள். குதூகலப்படுவார்கள். என் பாட்டனார் சிம்ம விஷ்ணு மகாராஜாவின் காலத்திலிருந்து பல்லவ சாம்ராஜ்யத்தில் யுத்தம் நேரவில்லை. பல்லவ சேனாவீரர்களின் கையில் வேல்களும் வாள்களும் துருப்பிடித்து வந்தன. இப்போது அவற்றுக்கெல்லாம் வேலை வந்திருக்கிறது. போர்க்களத்தில் ஆயிரக்கணக்கில் மின்னிப் பாயும் வேல்களையும், வாள்களையும் கண்டு பயப்படுகிறவன் நான் அல்ல. ஆனால், உன்னுடைய கரிய விழிகளிலிருந்து கிளம்பிப் பாயும் வாள்களையும் வேல்களையும் கண்டுதான் அஞ்சுகிறேன்!''

சிவகாமி தன்னை மீறி வந்த புன்முறுவலை அடக்கிக் கொள்ள முடியாதவளாய், ''புருஷர்களே இப்படித்தான் போலிருக்கிறது. சாதுர்யமாயும் சக்கரவட்டமாயும் பேசி உண்மையை மறைக்கப் பார்ப்பார்கள்'' என்று முணுமுணுத்தாள். ஆனாலும், அந்த வார்த்தைகள் நரசிம்மரின் காதில் விழாமற் போகவில்லை.

''பழிமேல் பழியாகச் சுமத்திக் கொண்டிருக்கிறாயே? எந்த உண்மையை நான் மறைக்கப் பார்த்தேன்!'' என்று மாமல்லர் கேட்டார்.

''பின்னே, நீங்கள் யுத்தத்துக்குப் பயப்படுகிறவர் என்று நான் சொன்னேனா? நீங்கள் வீராதி வீரர், சிம்ம விஷ்ணு மகாராஜாவின் பேரர், மகேந்திர சக்கரவர்த்தியின் குமாரர் என்பதெல்லாம் எனக்குத் தெரியாதா? இந்த யுத்தம் வந்ததனால் திருமணம் தடைப்பட்டு விட்டதே? அதைப் பற்றிக் கவலைப்படுகிறீர்களாக்கும் என்று தானே சொன்னேன்?''

இவ்விதம் சிவகாமி கூறியபோது, அவளுடைய முகத்தில் நாணத்துடன் கோபம் போராடியது. நரசிம்மர் வியப்புடன், ''சிவகாமி! என்ன சொல்லுகிறாய்? திருமணம் தடைப்பட்டு விட்டதா? யாருடைய திருமணம்?'' என்று கேட்டார்.

''ஒகோ! உங்களுக்குத் தெரியவே தெரியாதுபோல் இருக்கிறது. நான் சொல்லட்டுமா! காஞ்சி மாநகரத்தில் மகாராஜாதிராஜ திரிபுவன சக்கரவர்த்தி மகேந்திர வர்ம பல்லவர் இருக்கிறாரோ, இல்லையோ, அந்தச் சக்கரவர்த்திக்குத் தேசமெல்லாம் புகழ் பெற்ற மாமல்லர் என்னும் திருக்குமாரர் ஒருவர் உண்டு. அந்தக் குமார சக்கரவர்த்திக்குத் திருமணம் பேசி வருவதற்காக மதுரைக்கும், வஞ்சிக்கும், இன்னும் வட தேசத்துக்கும் தூதர்களை அனுப்ப ஏற்பாடாகியிருந்ததாம். அப்பேர்ப்பட்ட சமயத்தில் யாரோ ஒரு பொல்லாத அரசன் பல்லவ ராஜ்யத்துக்குள் படையெடுத்து வரவே கல்யாணத்தைத் தள்ளிப் போட வேண்டியதாகி விட்டது. இதெல்லாம் தங்களுக்குத் தெரியாதல்லவா?'' என்றாள் சிவகாமி.

நரசிம்மர் 'கலகல'வென்று சிரித்து விட்டு, ''இதற்குத்தானா இவ்வளவு பாடுபடுத்தினாய்? நான் பயந்து போய் விட்டேன். உனக்குத்தான் ஒருவேளை ஆயனர் திருமணம் நிச்சயம் செய்து விட்டாரோ என்று! அப்படி ஒன்றும் இல்லையே?'' என்றார்.

சிவகாமி கண்களில் கபடக் குறும்பு தோன்ற அவரைப் பார்த்து, ''ஏன் இல்லை? என் தந்தைகூட அடிக்கடி என் கல்யாணத்தைப் பற்றிப் பேசிக் கொண்டுதான் இருக்கிறார். அவரிடம் சிற்ப வேலை கற்றுக் கொள்ளும் கெட்டிக்கார சீடப்பிள்ளை ஒருவனைப் பார்த்து என்னை மணம் செய்து கொடுக்கப் போகிறாராம்'' என்றாள்.

''ரொம்ப சந்தோஷம். உன் தந்தை நிஜமாக அப்படிச் சொன்னாரா? அவரை உடனே பார்த்து என்னுடைய நன்றியை அவருக்குத் தெரிவித்துக் கொள்ள வேண்டும்'' என்று நரசிம்மர் கூறிய மறுமொழி சிவகாமியைத் திடுக்கிடச் செய்தது. அவள் தொடர்ந்து கலக்கமுற்ற குரலில், ''ஆனால், நான் அதற்குச் சம்மதிக்கவில்லை. 'எனக்குக்

கல்யாணமே வேண்டாம்! நான் புத்த பிக்ஷுணி ஆகப் போகிறேன்' என்று அப்பாவிடம் சொல்லிவிட்டேன்'' என்றாள்.

"என்ன? நீயா புத்த பிக்ஷுணி ஆகப் போகிறாய்? ஆயனர் மகளா இப்படிப் பேசுகிறது? சிவபெருமானும் திருமாலும் உனக்கு என்ன தீங்கைச் செய்தார்கள்? சிவகாமி! நம் திருநாவுக்கரசர் பெருமானின் தேனினும் இனிய சைவத் திருப்பாடல்களை நீ கேட்டிருக்கிறாயே? 'குனித்த புருவமும் கொவ்வைச் செவ்வாயும்' என்ற தெய்வீகப் பாடலுக்கு அபிநயங்கூடப் பிடித்தாயே? அப்படியிருந்தும், புத்த பிக்ஷுணியாக வேண்டுமென்ற எண்ணம் உன் மனத்தில் எப்படி உதித்தது?" என்று நரசிம்மர் சரமாரியாய்ப் பொழிந்தார்.



''எனக்குச் சிவன் பேரிலும் திருமாலின் பேரிலும் வெறுப்பு ஒன்றுமில்லை. கல்யாணத்தின் பேரில்தான் வெறுப்பு. புத்த பிக்ஷுணியாகி, நான் தேச யாத்திரை செய்யப் போகிறேன்'' என்று சிவகாமி தலை குனிந்தவண்ணம் கூறினாள்.

"சிவகாமி! அந்தமாதிரி எண்ணமே உனக்குத் தோன்றியிருக்கக்கூடாது. மகாமேதாவியான உன் தந்தையின் பேச்சை நீ தட்டலாமா? அவருடைய விருப்பத்தின்படி அவருடைய சீடர்களில் மிகவும் கெட்டிக்காரன் எவனோ, அவனை, நீ மணம் புரிந்து கொள்ளத்தான் வேண்டும்" என்று நரசிம்மர் கடுமையான குரலில் சொன்னார்.

"என்னை எந்த அசட்டுப் பிள்ளையின் கழுத்திலாவது கட்டி விடுவதில் உங்களுக்கு என்ன அவ்வளவு சிரத்தை? அரண்மனையில் பிறந்து வளர்ந்த அரசிளங்குமரியை நீங்கள் மணந்து கொள்வதை நான் குறுக்கே நின்று தடுக்கவில்லையே?" என்றாள் சிவகாமி. அவளுடைய கண்களில் நீர் ததும்பி நின்றது.

"ஜாக்கிரதை, சிவகாமி! அசட்டுப் பிள்ளை என்று யாரைச் சொன்னாய்? உன் தந்தையின் சீடர்களுள் ரொம்ப கெட்டிக்காரன் யார் என்பது உனக்குத் தெரியாதா? ஆயனர் எத்தனையோ தடவை, 'குமார சக்கரவர்த்திக்குச் சிற்பக் கலை வருவது போல் வேறு யாருக்கும் வராது' என்று சொல்லியதில்லையா? ஆயனரின் சீடர்களில் மிகவும் கெட்டிக்காரனுக்கு உன்னை மணம் செய்து கொடுப்பதாயிருந்தால் எனக்குத்தானே கொடுக்க வேண்டும்! அதற்காக உன் தந்தைக்கு நன்றி செலுத்த வேண்டாமா?" என்று நரசிம்மர் கூறிய போது, அவருடைய முகத்தில் குறும்பும் குதூகலமும் தாண்டவமாடின.

சிவகாமியோ சட்டென்று பலகையிலிருந்து எழுந்து நின்றாள். "பிரபு! இந்த ஏழைப் பெண்ணுக்கு ஏன் வீண் ஆசை காட்டுகிறீர்கள்...?" என்று கூறி, மேலே பேச முடியாமல் விம்மி அழத்

தொடங்கினாள்.

நரசிம்ம வர்மர் அவளுடைய கரங்களைப் பிடித்து மறுபடியும் பலகையில் தம் அருகில் உட்கார வைத்துக் கொண்டு, "சிவகாமி! என்னை நீ இன்னும் தெரிந்து கொள்ள வில்லையா? இப்படி நீ கண்ணீர் விடுவதைப் பார்க்கும் போது..." என்று கூறுவதற்குள், சிவகாமி விம்மிக்கொண்டே, "பிரபு! இது ஆனந்தக் கண்ணீர்! துயரக் கண்ணீர் அல்ல!" என்றாள்.

## பதினேழாம் அத்தியாயம்

# வேலின் மேல் ஆணை!

நரசிம்மர் தமது அங்கவஸ்திரத்தின் தலைப்பினால் சிவகாமியின் கண்ணீரைத் துடைத்தவண்ணம், "நினைக்க நினைக்க ஒரு விஷயம் எனக்கு வியப்பையளிக்கிறது!" என்று கூறினார்.

சற்றுமுன் சிவகாமியின் முகத்தை ரதி ஏறிட்டுப் பார்த்ததுபோல் இப்போது சிவகாமி நரசிம்மரை ஏறிட்டுப் பார்த்தாள். "அது என்ன வியப்பான விஷயம்?" என்னும் கேள்வியை அவளுடைய கண்களின் நோக்கும், புருவங்களின் நெரிப்பும் கேட்பன போலத் தோன்றின.

நரசிம்மர் சிவகாமியின் முகத்தைக் கண்களால் விழுங்கி விடுபவர் போல் பார்த்துக்கொண்டு கூறினார்: "மூன்று வருஷ காலத்திற்குள் உன்னிடம் ஏற்பட்டிருக்கும் மாறுதலைத்தான் சொல்லுகிறேன். உனக்கு ஞாபகம் இருக்கிறதா, சிவகாமி? சக்கரவர்த்தியும் நானும் அந்த நாளில் உங்கள் வீட்டுக்கு வருவோம். என்னைக் கண்டதும் நீ கொஞ்சமும் கூச்சமோ, தயக்கமோ இல்லாமல் ஓடி

வருவாய். என் கைகளைப் பிடித்துக் 'கரகர'வென்று இழுத்துக்கொண்டு போவாய். நம் இருவருடைய தந்தையரும் ஒரு பக்கம் பேசிக்கொண்டிருக்கும்போது நாம் இன்னொரு பக்கத்தில் கொட்டம் அடிப்போம்! சில சமயம் நான் உன்னை எனக்குப் பரத நாட்டியம் சொல்லிக் கொடுக்கும்படி கேட்பேன். நீ சொல்லிக் கொடுக்க முயல்வாய்; எனக்கு நன்றாய் வராது. அதைக் கண்டு நீ கலகலவென்று சிரிப்பாய். உன்னுடைய முல்லைப் பல் வரிசையைப் பார்த்து நான் மதி மயங்கி நிற்பேன். இன்னும் சில சமயம் நாம் இருவரும் ஓடிப் பிடித்து விளையாடுவோம். சிலசமயம் ஆயனர் அமைத்த கற்சிலைகளுக்கு மத்தியில் நீயும் ஒரு சிலையைப் போல் அசையாமல் நிற்பாய். நானும் வேண்டுமென்றே உன்னைச் சிலையாகப் பாவித்துக்கொண்டு மேலே போவேன். உன்னுடைய சிரிப்பின் ஒலியைக் கேட்ட பிறகு திரும்பிப் பார்த்து உன்னைப் பிடித்துக்கொள்வேன். 'அகப்பட்டுக் கொண்டாயா, சிவகாமி தேவி?' என்று பாடுவேன். இப்படியெல்லாம் நாம் விளையாடுவதைப் பார்த்து நம்முடைய தந்தைமார்களும் சந்தோஷப்படுவார்கள். அதெல்லாம் ஒரு குதூகலமான கனவு மாதிரி இப்போது தோன்றுகிறது."

"பிரபு! நான் ஏதோ மாறிப் போனதாகச் சொன்னீர்கள். எந்த விதத்தில் மாறியிருக்கிறேன்?" என்று சிவகாமி கேட்டாள்.

"நல்லவேளை, ஞாபகப்படுத்தினாய். எனக்குப் பதினாறு பிராயம் பூர்த்தியான போது, சக்கரவர்த்தி என்னைத் தேச யாத்திரைக்கு அழைத்துச்சென்றார். தெற்கே சித்தர் மலையிலிருந்து வடக்கே நாகார்ஜுன மலை வரையில் நாங்கள் யாத்திரை செய்தோம். மேற்கே, காவேரி நதியின் ஜனன ஸ்தானம் வரையில் போயிருந்தோம். யாத்திரையை முடித்துக் கொண்டு நாங்கள் திரும்பி வருவதற்கு மூன்று வருஷம் ஆயிற்று..."

"அந்த மூன்று வருஷமும் எனக்கு மூன்று யுகமாக இருந்தது" என்றாள் சிவகாமி.

"மூன்று வருஷங் கழித்து நான் திரும்பி வந்து மறுபடியும் உன்னைப் பார்த்தபோது, நீ பழைய சிவகாமியாகவே இல்லை. தேவசபையிலிருந்து அரம்பையோ, ஊர்வசியோ வந்து ஆயனர் வீட்டில் வளர்வதாகவே தோன்றியது. உருவ மாறுதலைக் காட்டிலும் உன்னுடைய குணத்திலும் நடவடிக்கையிலும் காணப்பட்ட மாறுதல்தான் எனக்கு அதிக வியப்பையளித்தது. என்னைக் கண்டதும் நீ முன்போல் ஆர்வத்துடன் ஓடி வந்து வரவேற்கவில்லை; கலகலப்பாகப் பேசவில்லை; தூண் மறைவில் மறைந்துகொண்டு நின்றாய்; நான் உன்னைப் பார்க்கும்போது நீ வேறு பக்கம் திரும்பிக்கொண்டாய்; நான் உன்னைப் பார்க்காத சமயங்களில் கடைக்கண்ணால் என்னைப் பார்த்துக்கொண்டிருந்தாய். தப்பித் தவறி நம் கண்கள் சந்திக்கும் சமயம் உடனே தலையைக் குனிந்துகொண்டாய்; உன்னுடைய கலீரென்ற சிரிப்பு மறைந்துவிட்டது! சில சமயம் உன் கண்களில் நீர் ததும்பி நிற்பதைக் கண்டேன். ஒரு காரணமுமில்லாமல் நீ பெருமூச்சு விடுவதைக் கேட்டேன். எல்லாவற்றையும்விட அதிக வியப்பை எனக்கு அளித்தது என்னவென்றால், என்னை அறியாமல் நானே சில சமயம் பெருமூச்சு விடத் தொடங்கினேன்...!" என்று நரசிம்மர் சொன்னபோது, சிவகாமி 'கலீர்' என்று சிரித்துவிட்டாள்.

நரசிம்மர் மீண்டும் தொடர்ந்து கூறினார்: "என் உள்ளத்திலும் ஒரு மாறுதலைக் கண்டேன். இரவும் பகலும் சதா சர்வ காலமும் உன்னுடைய நினைவு என் இருதயத்தில் குடிகொண்டது. அந்த நினைவு, இன்பத்தையும் வேதனையையும் ஏக காலத்தில் அளித்தது. எப்பேர்ப்பட்ட முக்கியமான காரியத்தில் ஈடுபட்டபோதிலும் உன்னை என்னால் மறக்க முடியவில்லை. இந்த நிலைமையில் இந்தத் தாமரைக் குளக்கரையில் ஒரு நாள் நாம் தனியாகச் சந்தித்தோம். மூன்று வருஷம் உன்னை வந்து பார்க்காமல் இருந்ததற்காக நீ என்னைச் சண்டை பிடித்தாய். கடைசியில் உன்னை மறப்பதில்லை என்று கையடித்

துச் சத்தியம் செய்து கொடுக்கச் சொன்னாய். எனக்குச் சிரிப்பு வந்தது. உன்னை ஒரு கணமும் மறக்க முடியாமல் நான் திண்டாடிய திண்டாட்டம் எனக்கல்லவா தெரியும்? ஆனாலும், உன்னுடைய மனத் திருப்திக்காகச் சத்தியம் செய்து கொடுத்தேன். அதன் பிறகு, இன்றுதான் நாம் இந்தக் குளக்கரையில் சந்திக்கிறோம். ஒருவேளை நீ இங்கு இருக்கமாட்டாயா என்ற ஆசையினால் வந்தேன். வந்து பார்த்தால், நீ இங்கே இருக்கிறாய்! நம்முடைய உள்ளங்கள்தான் எப்படி ஒத்திருக்கின்றன!'' என்று சொல்லி நரசிம்மர் நிறுத்தினார்.

''இவ்வளவெல்லாம் சொன்னீர்கள். நான் முதலில் கேட்ட கேள்விக்கு மட்டும் மறுமொழி சொல்லவில்லை!'' என்றாள் சிவகாமி.

''என்ன கேள்வி அது? தயவு செய்து ஞாபகப்படுத்தினால் நல்லது'' என்றார் மாமல்லர்.

''மதுரைக்கும் வஞ்சிக்கும் திருமணத் தூதர்களை அனுப்புவதாக இருந்த விஷயந்தான்!''

நரசிம்மர் இலேசாகச் சிரித்துவிட்டு, ''அது உண்மைதான். மகனுக்குக் கல்யாணம் செய்ய வேண்டுமென்று எந்தத் தாயாருக்குத்தான் எண்ணமில்லாமலிருக்கும்? என் தாயாருடைய ஏற்பாடு அது! ஆனால், நான் சக்கரவர்த்தியிடம் என் மனநிலையைத் தெரியப்படுத்தச் சந்தர்ப்பத்தை எதிர்நோக்கிக்கொண்டிருந்தேன். அதற்குள் இந்த யுத்தம் வந்து அதற்கு அவசியமே இல்லாமல் செய்து விட்டது'' என்று கூறினார்.

''பிரபு, எனக்கு என்னவோ நிம்மதி இல்லை. மூன்றரை வருஷத்துக்கு முன்பு இருந்ததுபோல் நாம் இருவரும் குழந்தைகளாகி விடக்கூடாதா என்று தோன்றுகிறது.''

''இல்லை, சிவகாமி! மறுபடியும் குழந்தைகள் ஆவதற்கு ஒரு நாளும் சம்மதிக்க மாட்டேன். அதற்கு இரண்டு முக்கிய காரணங்கள் இருக்கின்றன. முதலாவது, தேவி சிவகாமியைப் பார்த்த பிறகு குழந்தை சிவகாமியை நான் விரும்ப முடியாது. இரண்டாவது காரணம், சக்கரவர்த்தி இப்போதே நான் போர்க்களம் போவதற்கு ஆட்சேபிக்கிறார்; நான் குழந்தையாயிருந்தால் சம்மதிப்பாரா?''

''பிரபு! தாங்கள்கூட உண்மையாகவே போர்க்களம் போவீர்களா?'' என்று சிவகாமி கவலையுடன் கேட்டாள்.

''அவசியம் போவேன். என் தந்தையுடன் அதைப் பற்றித்தான் மூன்று நாளாக வாதம் செய்துகொண்டிருக்கிறேன். நூறு வருஷ காலமாக அந்நியர்கள் காலடி வைக்காத பல்லவ சாம்ராஜ்யத்தில் இன்று சளுக்கர்கள் படையெடுத்திருக்கிறார்கள். அவர்களைத் துவம்ஸம் செய்து புத்தி புகட்ட வேண்டாமா?''

''பிரபு! அதற்குப் பல்லவ சைனியங்கள் இல்லையா? படைத் தலைவர்கள் இல்லையா? தாங்கள் ஏன் போக வேண்டும்?''

''பல்லவ சைனியங்கள் அன்னியர்களை எதிர்த்து வீரப் போர் புரியும் போது, நான் என்ன செய்வதாம்? அரண்மனையில் உட்கார்ந்து அறுசுவை உண்டி அருந்தி அந்தப்புர மாதர்களுடன் சொக்கட்டான் ஆடிக் கொண்டிருக்கட்டுமா? அப்படி நான் இருந்தால், ஆயனர் மகளின் காதலுக்குப் பாத்திரன் ஆவேனா?''

சிவகாமி கூறினாள்: ''பிரபு! தாங்கள் போர்க்களம் போவதைத் தடுப்பவள் நானல்ல. தாராளமாய்ச் சென்று பகைவர்களை வென்று வாகை மாலை சூடி வாருங்கள். ஆனால்...

''ஆனால், என்ன?''

''என்னுடைய கோரிக்கையைப் பரிகாசம் செய்யக்கூடாது.''

''இல்லை, சிவகாமி, சொல்லு!''

''வள்ளியம்மைக்கு சுப்பிரமணியர் சத்தியம் செய்து கொடுத்ததுபோல், உங்கள் கையிலுள்ள வேலின் மேல் ஆணை வைத்துச் சொல்லுங்கள், போர்க்களத்திலும் என்னை மறப்பதில்லையென்று!''

நரசிம்மர் புன்முறுவல் செய்து, ''இவ்வளவுதானே? என்னை மறந்து விடுங்கள் என்று நீ ஆணையிடச் சொன்னால்தான் என்னால் முடியாது! மறக்

காமலிருப்பதற்கு எத்தனை தடவை வேணுமானாலும் செய்கிறேன். இதோ...!" என்று வேலைத் தூக்கிப் பிடித்தவர், சட்டென்று தயங்கி நின்றார்.

"பிரபு! ஏன் தயங்குகிறீர்கள்? அதற்குள்ளே மனம் மாறிவிட்டதா?" என்றாள் சிவகாமி.

"இல்லை, சிவகாமி, இல்லை! இந்த வேல் என்னுடையதில்லையே! இன்னொருவருடைய வேலின் மேல் ஆணையிடலாமா என்றுதான் நான் யோசிக்கிறேன்."

"உங்களுடைய வேல் இல்லையா? பின் யாருடையது?"

"அரங்கேற்றத்தன்று மதயானையின் மேல் வேல் எறிந்து ஆயனரையும் உன்னையும் தப்புவித்தானே, அந்த வீர வாலிபனுடையது. அந்த மகாவீரனை நேரில் கண்டு அவனிடம் கொடுக்க வேண்டுமென்று வைத்திருக்கிறேன்."

"அப்புறம் அந்த வாலிபனை நீங்கள் பார்க்கவே இல்லையா?" என்று சிவகாமி கேட்டாள்.

"மூன்று நாளாக நாடு நகரமெல்லாம் தேடுகிறோம்; அவன் மட்டும் அகப்படவில்லை."

"பிரபு! அவன் இருக்குமிடம் சொன்னால், எனக்கு என்ன தருவீர்கள்?" என்று கேட்டாள் சிவகாமி.

"அவன் இருக்குமிடம் உனக்குத் தெரியுமா? சீக்கிரம் சொல், சிவகாமி! உனக்கு என்னையேதான் கொடுத்திருக்கிறேனே! வேறு என்ன தரப் போகிறேன்?"

"அந்த வாலிபன் இப்போது எங்கள் வீட்டில் இருக்கிறான்."

நரசிம்மர் துள்ளி எழுந்து, "என்ன சொல்லுகிறாய், சிவகாமி! உங்கள் வீட்டுக்கு அவன் எப்படி வந்தான்?" என்று கேட்டார்.

"முன்னே உங்களிடம் சொன்னேனல்லவா, ஒரு புத்த பிக்ஷு அடிக்கடி வந்து அப்பாவையும் என்னையும் வடநாட்டுக்கு வரும்படி அழைத்துக்கொண்டிருக்கிறார் என்று; அந்த நாகநந்தி அடிகள்தான் அழைத்துக்கொண்டு வந்தார்."

"ஆகா! சக்கரவர்த்தி கூறியது உண்மையாயிற்று... சிவகாமி! அதோ கேள்!" என்றார் நரசிம்மர்.

தூரத்தில் பேரிகை முழக்கம், சங்கநாதம், குதிரைகளின் காலடிச் சப்தம் கலந்து கேட்டன.

"யார், சக்கரவர்த்தியா?" என்றாள் சிவகாமி.

"ஆம், சக்கரவர்த்திதான் வருகிறார். இதோ! நான் போய்ச் சக்கரவர்த்தியுடன் சேர்ந்துகொள்கிறேன். நீயும் சீக்கிரம் வீடு வந்து விடுவாயல்லவா?"

"குறுக்கு வழியாக வந்து விடுவேன். பிரபு! தாங்கள் போர்க்களம் போவதற்கு முன்னால் இங்கே மறுபடியும் வருவீர்களா?"

"அவசியம் வருகிறேன்! உன் கருவிழிகளில் மின்னும் வேல்களின் மேல் ஆணை!" என்று சொல்லிவிட்டு நரசிம்மர் திரும்பிப் பார்த்துக்கொண்டே விரைந்து சென்று குதிரை மீதேறினார்.

அவர் போவதை மலர்ந்த முகத்துடன் பார்த்துக்கொண்டு நின்ற சிவகாமி, குதிரை காட்டுக்குள் மறைந்ததும் வீட்டை நோக்கி விரைந்து நடந்தாள். வீட்டிலிருந்து வந்தபோது அவளுடைய நடையில் காணப்படாத மிடுக்கும் குதூகலமும் இப்போது காணப்பட்டன. ரதியை அவள் மறந்து சென்றாலும், அவள் போவதைப் பார்த்துவிட்டு ரதி பின் தொடர்ந்து துள்ளி ஓடிற்று.

வீட்டின் கொல்லைப்புறத்தைச் சிவகாமி அடைந்தபோது, வாசலில் பேரிகை முழக்கம் கேட்டது. வீட்டின் மூன்று கட்டுகளையும் அதிவேகமாய்த் தாண்டி வாசற்புறம் சென்றாள். அங்கே அவளுடைய தந்தை ஏற்கெனவே நின்று, குதிரைகளின் மீது ஆரோகணித்து வந்த சக்கரவர்த்தியையும் அவருடைய திருக்குமாரரையும் வரவேற்க ஆயத்தமாயிருப்பதைப் பார்த்தாள்.

குமார சக்கரவர்த்தியின் அறிவொளி வீசிய கண்கள் சிவகாமியின் ஆர்வம் நிறைந்த கண்களுடன் சங்கேதம் பேசிய போது, புத்த பிக்ஷுவையும் அவருடன் வந்த வாலிபனையும் வீட்டிற்குள்ளே காணவில்லையென்று சிவகாமிக்கு நினைவு வந்தது!

(தொடரும்)



# டிஷ்யூம்!

நெசப்பாக்கம் 'உஷா ஹவுஸ்' மாமியார் - மருமகள் அதிர்வேட்டு அமர்க்களத்தில் புகை பரப்பிக்கொண்டிருந்தது. சின்ன பாப்பா ஸ்ரீப்ரியா, பெரிய பாப்பா நிரோஷாவைக் கலாய்த்துக் கொண்டிருந்தார்.

"என்ன திடீர்னு காணாம போயிட்டீங்களே?" என்று ஸ்ரீப்ரியாவிடம் கேட்டால், முழு நீள பாராவுக்கு மூச்சு வாங்கப் பேசினார் :

"கல்யாணத்துக்கப்புறம் குடும்பத்தைக் கவனிக்கவே நேரம் சரியா இருந்தது. அதனால சின்ன இடைவெளி. இரண்டு குழந்தைகள் பிறந்தாங்க. கணவர் ராஜ்குமாருக்குச் சொந்த பிஸினெஸ். அவரும் நடிப்புக்குத் தடை சொல்லலை. 'குழந்தைங்க ஏங்கிப் போயிடக் கூடாது. அவங்களுக்குத் தர வேண்டிய முக்கியத்துவம் குறையாத மாதிரி, நடிக்க



* ஸ்ரீப்ரியா

வாய்ப்பு வந்தா, நடி'ன்னுதான் சொன்னார். எனக்கேகூட அதுதான் சரின்னு தோணுச்சு. எனக்கு நானே சில கன்டிஷன்களைப் போட்டுக்கொண்டேன். 'படப்பிடிப்பு சென்னையில்தான் இருக்கணும். 'டென் டு சிக்ஸ்' மட்டுமே வேலை நேரம்'. இந்த மாதிரி கன்டிஷன்களுக்கு சரிப்பட்டு வந்த ஒரே கம்பெனி ராடன் டீவி. தான். ராதிகா என்னோட பெஸ்ட் ஃப்ரெண்டு.

"ராடன் டீவிக்காக சூப்பரா ஒரு காமெடி சப்ஜெக்ட் இருக்கு. நடிகை சீமா பண்றதா இருந்து, கடைசியிலே டிராப் ஆயிடுச்சு. அந்த கதாபாத்திரத்துல நீ நடிக்கிறியா?"னு கேட்டப்போ, ரொம்ப சந்தோஷமா ஒத்துக்கிட்டேன். முதல் ரவுண்டுலே 65 எபிஸோட் செஞ்சோம். நல்ல ஆதரவு கிடைச்சது. இப்ப இரண்டாவது பாகம் மறுபடி தொடங்கியிருக்கு..." என்றவர், மேக்கப்பில் கவனம் செலுத்த ஆரம்பிக்கவே... அருகிலிருந்த நிரோஷாவிடம் தாவினோம்.

"'சின்ன பாப்பா - பெரிய பாப்பா' வெற்றி அடைஞ்சது எதனாலேனு நீங்க நினைக்கறீங்க?"



* நிரோஷா

"மாமியார் - மருமகன் பிரச்னையை, சீரியஸா பண்ணாம, ஜாலியா, காமெடியா கொடுக்கறதனாலதான். அதுவுமில்லாம, ஒரே மெகா தொடரா இல்லாம, ஒரு எபிஸோடுக்கு ஒரு கதைனு இருக்கறதனால, அந்த 'நறுக்' முடிவும் ஒரு காரணமா இருக்கலாம்" என்றார் நிரோஷா.

அதே கேள்வியை இயக்குனர் சக்திவேலிடம் கேட்டால், வேறொரு கதை பதிலாக வருகிறது.

"முழுக்க முழுக்க ராதிகா மேடத்தின் ஆலோசனைதான். ஷூட்டிங் கிளம்பறதுக்கு முன்னாடி, சப்ஜெக்ட் சொல்வேன். அவங்க சில மாற்றங்கள் சொல்வாங்க. அது ரொம்ப சரியாவும் இருக்கும். அவங்களோட ரசனை தான் சீரியலோட வெற்றி" என்றார்.

"ஐஸ்.... கோன் ஐஸ்... குச்சி ஐஸ்" என்ற குரல் தெருவில் கேட்டது தற்செயல்தான்!

**மடிப்பாக்கம் வெங்கட்**

படங்கள் : **ஜி.டி. பாவை ரமேஷ்குமார்**

புகைப்படம்: பி. ஆனந்த்

தொட்டில்

• டாக்டர் மைதிலி

# இரண்டரை லட்ச ரூபாய் கிலுகிலுப்பை!

அந்தக் காலத்தில், குழந்தை பிறந்த சில நாட்களில், தாய்மாமன் கிலுகிலுப்பையை, குழந்தையின் காதருகே ஆட்ட, சப்தம் கேட்டு குழந்தை திரும்பியதும், "நல்லவேளை, குழந்தைக்குக் காது கேட்குது" என்று சந்தோஷப்பட்டுக் கொள்வார்கள். அதையே கொஞ்சம் காஸ்ட்லி சமாசாரமாக்கி, இரண்டரை லட்ச ரூபாய் செலவில் சங்கீதத் தொட்டில் ஒன்றை வடிவமைத்திருக்கிறார் டாக்டர் மைதிலி.

பெங்களூர் எம்.எஸ். ராமையா மருத்துவமனையில் ஆடியோலஜிட்டாகவும், ஸ்பீச் பெதாலஜிஸ்ட்டாகவும் பணியாற்றும் இவர், செவிக் குறைபாட்டை அறியவும் பேச்சுப் பயிற்சி அளிக்கவும் பல நவீன கருவிகள் கொண்ட கிளினிக்கை மல்லேஸ்வரத்தில் நடத்தி வருகிறார். டாக்டர் மைதிலியின் லேட்டஸ்ட் கண்டுபிடிப்புதான் இந்த சங்கீதத் தொட்டில். பெயர் சுஸ்வரா!

இந்தத் தொட்டிலில் குழந்தையைப் படுக்க வைத்த உடனேயே, அதற்குக் கேட்கும் திறனில் ஏதேனும் குறைபாடு உள்ளதா என கணித்து விட முடியும்.

தொட்டில் கொஞ்சம் பெரிய சைஸ். பிளைவுட்டில், அக்கௌஸ்டிக் டைல்ஸில், ஸவுண்ட் ப்ரூஃப் செய்யப்பட்டிருக்கிறது. வலது இடது புற ஸ்பீக்கர்களை ஆடியோ மீட்டருடன் இணைத்திருக்கிறார்கள். தொட்டிலின் உள்ளே கண்களை உறுத்தாத இதமான வெளிச்சம் தரும் சிறிய பல்புகள். நான்கு மானி மின்விசிறிகளில் இரண்டு காற்றோட்டத்துக்கு, இரண்டு எக்ஸாஸ்டிங்குக்கு, என தொட்டில் படு சொகுசு.

குழந்தையைத் தொட்டிலில் கிடத்தி ஆடியோ சிஸ்டத்தில் பதிவு செய்யப்பட்ட கேஸட்டை இணைத்ததும் தாலாட்டும் ட்யூனில் மெல்லிய சங்கீதம் கேட்கிறது. உடனே ஒலி வரும் திசையில் குழந்தை திரும்புகிறது. புரிந்த பாவனையில், அதன் உடல் இலேசாக அதிர்கிறது. இது நார்மல் குழந்தை. குறைபாடுள்ள குழந்தையாக இருந்தால், எவ்வித அதிர்வுமில்லாமல், அமைதியாக இருக்கும். சில குழந்தைகள் இசையின் ஒலியை அதிகரித்த பிறகே, திரும்பிப் பார்க்கும். குழந்தையின் குறைபாடு எந்த அளவில் இருக்கிறது என்பது துல்லியமாகத் தெரிந்து விட்டதால், உடனேயே சிகிச்சை ஆரம்பித்து விடுகிறார்கள்.

— பேட்டி, புகைப்படம்
சாரதா ஸ்ரீனிவாஸன்

*சிறு பத்திரிகை இயக்கத்தோடு ஒன்றிணைந்து உழைத்த நவீன ஓவியர்களில் முதன்மையானவர் ஆதிமூலம். எழுபதுகளில் வரையத் தொடங்கிய இவரது நவீன கோட்டோவியங்களின் சாயல், இன்றைய இளையதலைமுறை ஓவியர்களின் படைப்புகளிலும் எதிரொலிப்பதே இவரது தாக்கத்தையும், தனித்துவத்தையும் தெளிவுபடுத்தும். இன்று அருபவகை ஓவியங்களுடன் அதிக தோழமை காட்டும் ஆதிமூலம், தமது தூரிகையின் பின்னணியில் நிகழ்ந்த துயரங்களை எப்படித் துடைத்துக் கொண்டு முன்னேறினார் என்பதை நம் முன் வைக்கிறார்...*

**எ**னது கிராமத்தில் கிருஷ்ணன் கோயில் ஒன்றுள்ளது. திருச்சி துறையூருக்கு அருகிலுள்ள கிராமம். அந்தக் கோவிலை பஜனை மடம் என்றுதான் எல்லோரும் சொல்லுவார்கள். அங்கிருந்த மூலவிக்கிரகத்துக்குப் பின்னால் தஞ்சாவூர் பாணியிலமைந்த பெரிய ஓவியம் ஒன்றிருந்தது. சிறுவனாக அந்தக் கோவிலுக்குச் செல்லும் போதெல்லாம் அதையே கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருப்பேன். அதில் ராமரின் பட்டாபிஷேக வைபவம் வரையப்பட்டிருக்கும். பூஜையின் போது, விக்கிரகத்துக்குத் தீபம் காட்டும் போது, ஓவியத்திலுள்ள கண்ணாடிகள், ஜரிகைகள் எல்லாம் ஜொலிக்கும். அது ஓவியம் என்பதை விட நான் நேரடியாகவே பங்குகொள்கிற ஒரு வைபவமாகவே எனக்குத் தோன்றும். அந்த ஓவியத்துடன் ஏதோ பூர்வஜென்ம தொடர்பு இருந்தது போல் தோன்றும். அதன் பிறகு அந்த ஓவியம் கோவிலிலிருந்து திருடுப் போய் விட்டது. என் நினைவுகளில் இருந்து அதை யாராலும் திருட முடியாமலும் போய் விட்டது.

**ஏ**ழு வயதிலேயே படங்களைப் பார்த்து வரையத் தொடங்கினேன். 'இதையெல்லாம் ஏன் வரைகிறாய்?' என்று பெற்றோர் சொன்னதில்லை. மாறாக, "என் பையன் வரைஞ்சது" என்று வீட்டுக்கு வருவோரிடம் காட்டி சந்தோஷப்படுவார்கள். ஓவியத்தின் பால் ஏற்பட்ட ஈர்ப்பு – படிப்பின் மீதான கவனத்தைச் சிதறடித்தது. "நீ நல்ல கலைஞனாக வருவாய்!" என்று ஆசிரியர்களும் நம்பிக்கையூட்டி வந்தார்கள். இப்படித்தான் ஓவியத்தை என் லட்சியமாகத் தொடக்கப் பள்ளியிலேயே வரித்துக் கொண்டேன். ஆனால் என்ன மாதிரியான ஓவியன் ஆவது என்று திசை தெரியாமல் இருந்தேன். ஓவிய உலகின் நீள, அகலங்களும் தெரியாத நிலையில், உயர்நிலைக் கல்வி முடிந்தது. உடன் தாய்மாமன் நடத்தி வந்த உணவு விடுதி மற்றும் மளிகைக்





கடையின் கல்லாப் பெட்டிக்குப் பொறுப்பாக விடப்பட்டேன். அங்கேயும் ரூபாய் நோட்டுகளில் வரையப்பட்டிருந்த சித்திரங்களை வெறித்துக் கொண்டு வேண்டா வெறுப்பாக மூன்றாண்டு காலம் ஓட்டினேன். எனது மனநிலையைப் பார்த்து, கல்லூரி முடித்து வந்த எனது மூத்த சகோதரர் பொறுப்புகளை ஏற்றுக் கொள்ள, சென்னை நோக்கி எனது சிறகுகளை விரித்தேன்.

சென்னை வந்ததன் நோக்கமே, ஓவியம் தொடர்பான ஓர் இடத்தில் மாதச் சம்பளத்திற்கு, வேலைக்குச் சேர்ந்து விடலாம் என்றுதான். எங்கள் குடும்ப நண்பர் வி.எஸ். செட்டியார், அன்று சென்னை ஓவியக் கல்லூரியில் பேராசிரியராக இருந்த சிற்பி தனபாலிடம் அழைத்துப் போனார். "இவனிடம் திறமையிருக்கிறது. அதைக் கெடுத்து விட வேண்டாம்" என்று 1960-ல் என்னை ஓவியக் கல்லூரியில் சேர்த்துக் கொண்டார்கள்.

## வைரமுடைய நெஞ்சு வேண்டும்
## ஓவியர் ஆதிமூலம்

உலக ஓவியர்களின் படைப்புகள், ஐரோப்பிய நவீன ஓவியங்கள் எப்படிப் புழக்கத்திற்கு வந்தன என்பது

குறித்தெல்லாம் தெரிந்து கொள்ள ஓர் அரிய களமாக ஓவியக் கல்லூரி எனக்குப் பேருதவி புரிந்தது. அப்போது நவீன சோதனை முயற்சி ஓவியக் காட்சிகளைக் கண்டு, அவற்றைப் பார்வையாளர்கள் சிந்தாதது குறித்தும் யோசிக்க வைத்தது சென்னை வாசம். ஆனால் தீவிர இலக்கியத்தை படைப்பவன், தனக்கு வாசகர்கள் இல்லாவிட்டாலும், தானே படித்து சுயதிருப்தி கொள்வதைப் போல, எனது ஓவியங்கள் மீதும் எனக்கு சுயதிருப்தி வந்தது. இதனால் ஓவியத்திற்கு உள்ளே பயணம் செய்கிற, தீவிரத்தனம் என்னை ஆட்கொண்டு விட்டது.

இதற்கிடையில் விடுமுறைகளின்போது, ஊர்ப் பக்கம் போய் வருவேன். "பெயிண்ட் தடவுற வேலைக்கு ஆறு வருஷமா படிக்கிறே... அப்புறம் வேலை கிலை ஏதாவது கிடைக்குமா? இல்லேன்னா... இப்பவே கடை கண்ணியைப் பார்க்க ஆரம்பிச்சுடு. அப்போதான் பொறுப்பான புள்ளேன்னு பொண்ணு தருவாங்க" என்று எனது நம்பிக்கை மீது ஓங்கி அடிப்பார்கள். இதனால் விடுமுறை முடியும் முன்பே சென்னைக்குப் புறப்பட்டு விடுவேன்.

கல்லூரி வாழ்க்கை முடிந்த பிறகு, 1968ல் திருமணம். வேலையெதுவும் இல்லாத என்னை நம்பி கழுத்தை நீட்டிய அந்தப் பெண்மணி லலிதா. ஓவியம் குறித்து அவளுக்கு அதிகம் தெரியாதென்றாலும், கோடுகள், வண்ணங்கள் உடனான எனது வாழ்க்கை பற்றி அவள் ஒருபோதும் சிறு முணுமுணுப்பையும் வெளியிட்டதில்லை. ஆனால், "குடும்பத்தைச் செழுமையாக வைத்துக் கொள்ளவில்லை. இப்படி வீட்டில் உட்கார்ந்து கொண்டு குடும்பம் நடத்தினால் ஊரார் என்ன சொல்வார்கள்?" என்று மாமனார் வீட்டிலிருந்து இடையறாத விமர்சனங்கள் வந்து கொண்டேயிருந்தன. ஆனால் எதற்காகவும் எனக்குள் இருந்த ஓவியன் உடன்பாடு செய்து கொள்ளவில்லை. அதே நேரம், ஒரு குடும்பத் தலைவனாக எனது கடமைகளை எந்தவித குறுக்கீடும் இல்லாமல் நிறைவேற்றி வந்தேன். அதற்கு டெக்ஸ்டைல் டிசைன் துறையில் கிடைத்த டிசைனர் வேலை உதவியது.

இதற்கிடையில் 1969-ல் நாடெங்கும் காந்தி நூற்றாண்டு விழா தொடங்கியது. ஓவியன் என்ற அளவில், நானும் ஏதேனும் செய்ய எண்ணினேன். இந்தியா விடுதலை அடைந்தபோது நான் சிறுவன். சாதாரண மக்களிடம் கூட தெய்வத்திற்கு இணையாக அவர் பெற்றிருந்த உயர்வான இடமும், அடுத்த சில மாதங்களில் அவர் படுகொலை செய்யப்பட்ட செய்தியறிந்து மக்கள் அடைந்த துயரமும் என்னுள் பசுமையான நினைவுகளாக நிலைத்திருந்தன. ஒரு கோணத்தில் புத்தரையும், மற்றொரு கோணத்தில் இயேசுவையும் நினைவுக்குக் கொண்டு வரும் அந்த வசீகர முகம், ஓவியத்துக்குத் தோதான உடல்வாகு. இவையெல்லாம்தான், காந்திஜியை நூற்றுக்கும் மேற்பட்ட கோட்டுச் சித்திரங்களாக வரையத் தூண்டின. இந்த 'எசன்ஸ் ஆஃப் காந்தி' தொடர் ஓவியங்கள் மிகப் பெரிய கவனிப்பிற்கு உள்ளாயின. வெளிநாட்டுப் பத்திரிகைகளும் பாராட்டி எழுதின. ஒரு நவீன ஓவியன் என்கிற அங்கீகாரத்தை எனக்கு முதன் முதலில் தேடிக் கொடுத்தவை காந்தியின் ஓவியங்கள்தான். எனக்கான ஒரு பாணியை முதன் முதலில் தனித்துவப் படுத்திக் காட்டின இந்த ஓவியங்கள்!

நான் பார்த்து வந்த டிசைனர் வேலையில் சுதந்தரம் இருந்த போதும், ஒரு கட்டத்திற்குப் பிறகு யந்திரமயமான அந்த வேலை, நேரக் கொலை என அஞ்சினேன். எனது ஓவிய முயற்சிகளையும் அது பெரிதும் பாதிக்கத் தொடங்கியதால், உதறினேன். நண்பர்கள், உறவினர்கள் தரப்பிலிருந்து கடுமையான எதிர்ப்பு. அரசு வேலையை விட வேண்டிய அவசியம் என்ன என்று கடுகடுத்தார்கள். வேலையை விட்ட பிறகு மேலும் தீவிரத்தோடு வரையத் தொடங்கினேன். இப்போது அரூப வகை வண்ண ஓவியங்களைத் தீட்டும் நிலையில் எனது பயணம் தொடர்ந்து கொண்டிருக்கிறது. இந்த வகை ஓவியங்களுக்கு, நமது



சூழல்தான் களமாக அமைகிறது. அதற்குள் ஓர் அமைதி, மாசற்ற உலகம் போன்ற 'பாசிட்டிவ் எண்ணங்களை' வெளிப்படுத்தும் காட்சிப் புலங்களை பார்வையாளன் கண்டு பிடித்துக் கொள்ளலாம். அதனூடாக பயணம் செய்து, அந்த வெளிகளில் சஞ்சரித்து விட்டு வரலாம். இந்த வகை ஓவியங்களை, பென்சில் கோடுகள் போட்டு அதன் மேல் வரைவதில்லை. கோடுகளை அதனுடைய ஓட்டத்திற்கு அனுமதிக்கிறேன். மனம் அனுமதிக்கும், கட்டுப்பாடுமிக்க ஓட்டம் அது.

உருவ வெளிப்பாடுகள் நிறைந்த விவரணை ஓவியங்களுக்கும், இப்போதைய அரூப வகை ஓவியங்களுக்கும், பாராட்டுகள், கடுமையான விமர்சனங்கள் இரண்டுமே கிடைத்தது. ஆனால் இரண்டையுமே சமமாகப் பார்க்கப் பழகிக் கொண்டிருக்கிறேன். இங்கே நவீன ஓவியங்களை ரசிக்க, பார்வையாளனைத் தயார்படுத்தவில்லை என்ற குற்றச்சாட்டும் எங்கள் மீது வைக்கப்பட்டது. ஆனால் ரசிகனைக் கைபிடித்து பின்னாலேயே அழைத்து வர வேண்டும் என்பதெல்லாம் படைப்பாளியின் வேலை அல்ல. அப்படிச் செய்தாலோ, அதற்காகக் கவலைப்பட்டாலோ, படைப்பாளி ஒரு கட்டத்தோடு நின்று விடுவான். மீடியாவும், எழுத்தாளர்களும்தான் அதைச் செய்ய வேண்டும்.

இதற்காகவே, தமிழில் நவீன இலக்கிய இயக்கம் முன்னெடுத்துச் செல்லப்பட்ட போது, சா. கந்தசாமி, ஞானக்கூத்தன், முத்துசாமி போன்ற எழுத்தாளர்கள், கலைஞர்களோடு நவீன கோட்டு ஓவியத்தைச் சிற்றிதழ்களில் கொண்டு சேர்த்தேன். இதைத் தொடர்ந்தே 'ஜூனியர் விகடன்' இதழில் கி. ராஜநாராயணனின் கரிசல்காட்டு கடுதாசி தொடர் கதைகளுக்கும், ஆனந்த விகடனில் 'கோபல்லபுரத்து மக்கள்' தொடர் கதைக்கும், இல்லஸ்ட்ரேஷன் போடாமல் நவீன கோட்டோவியங்களையே வரைந்தேன். அதற்கு நல்ல வரவேற்பு கிடைத்தது. வெகுஜன வாசகனுக்கும் நவீனத்தின் அறிமுகத்தைக் கொண்டு சென்றதில் ஓர் உற்சாகம் கிடைத்தது.

ஓவியக் கண்காட்சிகளுக்கு, தொடக்க நாளன்று வரும் கூட்டம் தவிர மற்ற நாட்களில் பெருமளவில் பார்வையாளர்கள் வருவதில்லையே என்று நான் வருத்தப்பட்டதில்லை. சிறந்த இசை, கவிதை ரசிக்க ஆட்கள் இருப்பதைப் போல இதற்கும் பார்வையாளர்கள் இருக்கிறார்கள் என்று நம்புகிறேன். அதனால்தான் 'டைம்ஸ் ஆஃப் இந்தியா' இதழ் இந்திய அளவில் பூகம்ப நிவாரண நிதிக்காக நடத்திய கண்காட்சியில் எனது ஓவியம் ஒரு லட்சம் விலைபோனது. அதை குஜராத் நிதிக்கே என்னால் ஆத்மதிருப்தியோடு அளிக்க முடிந்தது.

கேன்வாஸ் வாங்கவும் வண்ணங்கள் வாங்கவும், மனைவியின் நகைகளை அடகு வைத்ததும், அரசு வேலையைத் துறந்ததும் எனக்குப் போராட்டமே அல்ல. ஓவியத்தில் எனக்கு அடையாளம் கிடைக்க வேண்டும். நான் மறைந்த பிறகும் ஒருசில ஓவியங்களாவது என் பெயர் சொல்ல வேண்டும் என்று தேடிக் கொண்டே இருக்கிறேன். இது தான் எனது போராட்டம். அது இன்னமும் தொடர்கிறது. இது முடிவற்ற போராட்டம்.

சந்திப்பு : **ஜெயந்தன்**
படங்கள் : **ஸ்ரீஹரி**



# 8 பூவரசம் வீடு

**வீ**ரையன் சோர்வுடன் சைக்கிளை உருட்டிக் கொண்டே நடந்தான். காலை பத்து மணி வெயில் முதுகுச் சட்டையை நனைத்து ஒட்ட வைத்திருந்தது. காலை ஆறு மணியிலிருந்து மிகச் சரியாக நான்கு மணி நேரம் பணத்துக்காக வெயிலில் அலைகிறான். ரொம்பவும் அதிகத் தொகை இல்லை. இருநூற்று ஐம்பது ரூபாய். 'இந்தப் பிச்சைக்காரப் பய ஊர்ல எவங்கிட்டயும் பாக்கெட்ல இந்தத் தொகை இல்லை. எடுத்து எண்ணிக் காமிக்கிறாங்க... இருபத்தி அஞ்சு ரூவாய்க்கு மேல எவன் பாக்கெட்லயும் காசைக் காணோம். ஆனா கட்டுறது பாலியெஸ்டர் வேஷ்டி.. கைல கெடியாரம்... வெரல்ல மோதிரம்...ம்" எரிச்சலுடன் நின்று வியர்வையைத் துடைத்துக் கொண்டான் வீரையன்.

கறி வெட்டிக் கொண்டிருந்த வேலுச்சாமியிடம் ஒரு வார்த்தை கேட்டுப் பார்த்தாலென்ன என்று தோன்றியது. காலையிலிருந்து முழுசாக மூன்று ஆடு உரித்து விற்றதற்கு சாட்சியாக வெறித்த கண்களுடன் மூன்று தலைகளை இடப்புறமிருந்த மரக்கட்டையில் வைத்திருந்தான். மூன்று தலைகளும் நிலைகுத்திய பார்வையுடன் பார்த்திருக்க, இதுநாள் வரை அவற்றின் உடனிறைந்த பிற பகுதிகள் தூக்குச் சட்டிகளிலும், போணிகளிலும் அரை கிலோ, ஒரு கிலோ என்று கிளம்பிப் போய்க் கொண்டிருந்தன.

மனசுக்குள் ஒரு தோராயக் கணக்குப் போட்டான் வீரையன். 'மூணு குட்டி கறி வித்திருக்கான். அப்ப நிச்சயம் வேலுச்சாமி கிட்ட இருநூத்தம்பது இருக்கும். என்னதான் கடனுக்குப் பாதிப்பேரு வாங்கிட்டுப் போனாலும் மீதிப் பேரு துட்டு குடுத்துதான் வாங்கி இருப்பான்' என்று உத்தேசித்த வீரையன் வேலுச்சாமியை அணுகினான்.

"அப்றம் வேலண்ணே... பரவாயில்லாத யாவாரம் போல்ருக்கு."

"எங்கன பரவாயில்லாத யேவாரம்? எல்லாம் தொட்டுக்கிரவும், தொடைச்சிக்கிரவும் சரியா இருக்கு... ஒரு அரைக் கிலோ போட்றவா ஒனக்கு;' நல்ல எளங் கறி."

வீரையனின் முதல் பந்தையே மிதமிஞ்சிய பாதுகாப்புடன் வேலுச்சாமி ஆடி விட்டான். வீரையன் இவ்வளவு சுதாரிப்பை வேலுச்சாமியிடம் எதிர்பார்க்கவில்லை...

"மூணு குட்டி வித்திருக்கீங்க... நல்ல யேவாரந்தான... அப்றமென்ன விட்டுக் குடுக்காமப் பேசறீங்க?"

"அது சரி... என் நொம்பலம் எனக்கு.... ஒனக்கு அரை கிலோ போடவா வேணாமா?"

வீரையனின் மனசுக்குள் எரிச்சலோடு சிந்தனைகள் ஓடின. "இதுதான் இந்த சின்னப்பட்டிக்காரங்களோட பெரிய சிக்கல். அவங்க சுயநலம், அவங்க வேலைதான் முக்கியம். ஏதோ வராத ஆளு நம்ம கறிக் கடைக்கிட்ட வந்து ஏதோ பேச வர்றானே...

ஏம்ப்பா, என்ன விவரம்னு கேட்டாத்தானே பேச்சை ஆரம்பிக்க முடியும்... ச்சேய்..."

"என்ன வீரைய்யா யோசனை?"

"கறியெல்லாம் ஒண்ணும் வேணாம்ணே... நம்ம இருக்கற இருப்புக்கு அது ஒண்ணுதேங் கேக்குதா?"

"என்னாப்பா சலிச்சுக்கிறே... என்ன பிரச்னை?"

வீரையன்னே எதிர்பாராத விதத்தில் வேலுச்சாமி இப்படிக் கேட்டதும், இந்தப் பொன்னான வாய்ப்பை நழுவ விடக் கூடா தென்றெண்ணிய வீரையன், 'சட்'டென்று பேச ஆரம்பித்தான்.

"அது வேற ஒண்ணுமில்லண்ணே. நம்ம தொழிலைப் பத்தி உங்களுக்கே தெரியும். கொஞ்சம் அப்படி இப்படி புரட்டி, கையை ஊனி கர்ணமடிக்கிற பொழப்பு பொழைக்கிறேன். ஆனா நம்ம ஊர்ல 'சட்'டுன்னு ஒரு கைமாத்து பொரட்ட முடியுதா? இத்தனைக்கும் நான் சொல் தவறாத ஆளு... நாளைக்குப் பன்னண்டு மணியின்னா பதினொண்ணே முக்காலுக்கே காசைக் கொண்டாந்து குடுக்கறவன்... ஆனா நம்ம ஊர்ல இது யாருக்குப் புரியுது? எல்லாரையும் பாக்கிற மாதிரிதான் நம்மளையும் பாக்குறாங்க... சமயத்துல இந்த ஊர்ல இருக்கறதுக்கே சள்ளையா இருக்குண்ணே."

வேலுச்சாமி புன்னகை செய்தான். "என்னமோ சீமையில பொறந்து வளர்ந்தவன் மாதிரி பேசுறியே... நீயும் இந்தூர்தானப்பா."

வீரையன் சொன்னான். "அது வந்து... சமயத்துல மனசு விட்டுப் போகுதுண்ணே... ஒரு இருநூத்தி அம்பது ரூபாய்க்கி காலைல இருந்து நாயா அலையிறேன்... என்ன பண்றதுன்னே தெரியலை... அண்ணே, உங்ககிட்ட இருந்தா ஒரு மாத்து மாத்தி விடுங்களேன். நாளைக்கிச் சாயங்காலம் 'டாண்'ணு குடுத்திடறேன்."

வேலுச்சாமி இதை எதிர்பார்த்தவன் போல ஒரு புன்னகை பூத்தான்.

"நல்லா வந்து கேட்டப்பா நம்மகிட்ட போயி..."

"என்னண்ணே... காலைல இருந்து யேவாரம் பாத்திருக்கீங்க. மூணு குட்டி உரிச்சு வித்திருக்கீங்க... இருநூத்தி அம்பது



ருவா இல்லையா?"

"அது சரி வீரய்யா. மூணு குட்டி வித்திருக்கேன்.. ஆனா மூணு குட்டியும் மேற்குப்பட்டி பெரிய வீட்ல கடஞ் சொல்லிப் புடிச்சிட்டு வந்து உரிச்சது. கறியை வித்து அவங்களுக்குக் காசைக் குடுக்கறேன்னு சொல்லிப் புடிச்சிட்டு வந்தேன். ஆனா... பாதிப்பய கறியை எடுத் துக்கிட்டு அடுத்த சனிக்கிழமை சேத்துத் தர்றேன்னு சொல்லிட்டுப் போறாங்க... நான் இந்தப் பள்ளத்தை எப்படி மேவுறதுன்னு யோசிச்சிக்கிட்டு இருக்கேன். நீ வந்து கைமாத்துக் கேக்குற... வெளியருந்து பாத்தா எல்லாம் பசப்பாத்தான் இருக்கும். உள்ள நுழைஞ்சு பாத்தாத்தான சங்கதி தெரியும்..."



"மந்திரி முன்ன மாதிரி இல்லை. ரொம்ப மாறிட்டாரு."
"அப்படி என்ன மாறிட்டாரு?"
"முன்னாடியெல்லாம் "அரெஸ்ட் வாரண்ட்'ன்னா நெஞ்சுவலின்னு சொல்லிட்டு இருந்தாரு. இப்ப உடனே கேபிள் டீவிக்கு போன் பண்றாரு."
– நாராயண ஹரிகிருஷ்ணன்

வீரயன் சோர்ந்து போனான். தனது பம்பாய் யுக்திகளெல்லாம் இந்தப் பட்டிக் காட்டான்களிடம் எப்போதுமே எடு படாமல் போய் விடுகிறது... சைக்கிளில் ஏறினான்.

"என்னா வீரயா கௌம்பிட்ட?"

"என்ன பண்ணச் சொல்றீங்க? உங் ககிட்ட இல்லைன்னுட்டீங்க... வேற எங்கியாவது போய் முட்டணுமில்ல?"

கடுப்புடன் சைக்கிள் மிதித்துக் கிளம் பினான் வீரயன். டீக்கடை தாண்டு கையில் சரவணன், பாலா, சுந்தர், மணி நால் வரும் பெஞ்சில் உட்கார்ந்து பேப்பர் பார்த்துக் கொண்டிருந்தார்கள். அவர் களருகில் சைக்கிளை நிறுத்தினான்.

"என்ன பிரதர்ஸ்... டீ சாப்பிடலாமா?"

சரவணன் சிரித்தபடியே நகர்ந்து இடம் கொடுத்தான். பாலா சாதாரணமாக இருந் தான். ஆனால் சுந்தர், மணி இருவரும் வீரை யனைப் பார்க்காமல் வேறுபுறம் பார்த்தனர்.

"என்ன ரெண்டு பேரும் வேற பக்கம் திரும்பிக்கிட்டீங்க?"

சுந்தர் கடுப்பாகப் பேசினான், "பிறகு... நீங்க பாட்டுக்கு எங்க ரெண்டு பேரையும் உங்க அசிஸ்டெண்டுன்னு சொல்றீங்க... எங்களுக்கு ரொம்பக் கேவலமா போயி ருச்சு."

"இதில என்னடா கேவலம்... நீங்க எனக்கு ரொம்ப சப்போர்ட்... வலது கை, இடது கை மாதிரி அப்படிங்கறதைத்தான் நான் அந்த மாதிரி சொன்னேன்."

"அடப் போங்கண்ணே... நாங்க ரெண்டு பேரும் டிகிரி படிச்சவங்க... எங்களை அதைச் சொல்லி அறிமுகப்படுத்தாம.. உங்க அசிஸ்டெண்ட்டுன்னு சொல்றீங்களே... நீங்க அப்படிச் சொன்னது எங்களுக்குப் புடிக் கலை."

வீரயன் முகம் சுருங்கிப் போனது இந்தப் பயல்கள் இப்படிக் கூடப் பேசு வார்கள் என்று இப்போதுதான் முதல் முதலாகத் தெரிகிறது. ஒரு பெண் முன்னி லையில் அப்படி அறிமுகப்படுத்தியதில், இவர்கள் இதுவரை உபயோகித்திராத மூளையின் சில பகுதிகள் தூண்டப்பட்டு விட்டன போலும். அதுதான் இப்படியெல் லாம் சிந்திக்கிறார்கள். அடடே!

"ம்" என்று ஒரு பெருமூச்சு விட்டான் வீரயன்... "வளந்துட்டீங்கடா... நீங்க ரொம்ப வளந்துட்டீங்க. ஆனா நான் சின்னப் பசங்கன்னு ஒங்களை நெனைச் சுக்கிட்டிருந்திட்டேன். ஸாரி... கோச்சுக் காதீங்க."

பயல்கள் 'சட்'டென்று நெகிழ்ந்தனர். "என்னண்ணே... நீங்க? நாங்க ஒண்ணும் உங்க மேல கோவப்படலை... சங்கடமா இருந்துச்சு, அம்புட்டுத்தான்."

"ஏய், அண்ணனுக்கு ஒரு டீ போடு... ஸ்பெஷல் டீ."

அங்கே ஒரு உடனடி சமாதான நட வடிக்கை நிறைவேறியது.

சிறிது நேரம் கதையடித்துக் கொண்டிருக் கையில் சரவணன் நடுவே ..:'முந்தான், "நான்

ளம்பறண்ணே. ஒரு சின்ன வேலை..."

"என்ன வேலை சரவணா?" வீரையன் கேட்டான்.

"பூவரசம் வீட்டில அந்தம்மா இருக்காங்கல்ல அவங்ககிட்ட பணம் தரணும். அப்பா குடுத்து விட்டாரு."

"ஓங்கப்பா பணம் குடுத்து விட்ருக்காரா? எதுக்குடா? அவங்க இல்ல உங்களுக்கு வாடகை தரணும்."

"இல்லண்ணே... இது வேற... உரம் வைக்கப் பணமில்லைன்னு அவங்ககிட்ட கைமாத்து வாங்கினாராம் அப்பா. அதைத் திருப்பிக் குடுத்தாரு... போய்க் குடுத்திட்டு வரணும்."

"எவ்வளவு சரவணா?" இயல்பாகக் கேட்பது போல் கேட்டான் வீரையன். மனசு ஒரு கணக்குப் போட்டு விட்டது.

"ஆயிரம் ரூபாய்ணே" என்றான் சரவணன்.

"வர்றேண்ணே" என்று கிளம்பிப் போனான்.

மிகச் சரியாக பத்து நிமிடம் கழித்து பாலா, சுந்தர், மணி மூவரிடமும் சொல்லி விட்டு சைக்கிலேறி, பூவரச வீட்டுப் பக்கம் போனான் வீரையன். தள்ளி இருந்து கவனித்தான். சரவணன் அங்கிருந்து வெளியேறிப் போன பின்பு கொஞ்சம் அவகாசம் எடுத்துக் கொண்டு பூவரச வீட்டை நெருங்கினான்.

கதவைத் தட்டினான். வீட்டில் அரவம் குறைவாயிருந்தது. எப்போதும் ஒலிக்கும் ரேடியோ கேட்கவில்லை. காதுகளைக் கூர்மை பண்ணிக் கொண்டு காலடியைக் கேட்டான். கொலுசற்ற வெறும் பாதம் ஒன்று நடந்து வந்து கதவைச் சமீபித்தது.

தாழ்ப்பாள் திறந்தவள் லீலா... இவனைப் பார்த்ததும் சற்று ஆச்சர்யம் கலந்து புன்னகை செய்தாள்.

"வாங்க, என்ன திடீர்னு? ஆச்சரியமாயிருக்கு."

"இந்தப் பக்கமாப் போனேன்... சரி எப்படியிருக்கீங்கன்னு ஒரு வார்த்தை கேட்டுட்டுப் போலாம்னு வந்தேன்."

அவளது கண்கள் அங்குமிங்கும் சஞ்சரித்தன.

"எங்க வீட்ல யாரையும் காணோம்?"

"போரடிச்சுச்சுன்னு. எல்லாரும் டவுன்ல சினிமாவுக்குப் போயிருக்காங்க."

"யார் கூட?"

"எம் பையன் அழகு கூடத்தான் போயிருக்காங்க..."

"அப்படியா?" மனதுக்குள் அவனெல்லாம் ஒரு துணையா என்று நினைத்துக் கொண்டான் வீரையன்.

"எனக்குக் கொஞ்சம் தலைவலியா இருந்துச்சு. லீவு போட்டுட்டேன். ஆஸ்பத்திரி போகலை" என்றாள் லீலா.

"அப்படியா? ஏங்க... தலைவலிக்கு ஏதாச்சும் மாத்திரை இருக்கா? எனக்கும் காலைல இருந்து ஒரே தலைவலி... அதோட ரொம்ப அலைச்சல்..."

"அப்படியா? மாத்திரை இருக்கு. இதோ தர்றேன்..." என்று அவள் அலமாரியைத் திறந்து தேடத் துவங்கினாள்.

வீரையனின் கண்கள் அவளையே



"என்னது? ஒரு சினிமாப் பாட்டை முணுமுணுத்ததுக்காக மேனேஜர் 'மெமோ' கொடுத்துட்டாரா?"

"அந்த வயித்தெரிச்சலை ஏன் கேக்கறே! அந்தாளுக்கு 'சொட்டைத் தலை'ன்றது ஞாபகமில்லாம, 'பல்லாங்குழியின் வட்டம் பார்த்தேன்'னு பாடித் தொலைச்சுட்டேன்!"

– கே. சண்முகம்

உற்றுப் பார்த்தன. அவளது பின்புறம்தான் அவனுக்குத் தெரிந்தது. வீட்டில் யாருமில்லாத இந்தத் தருணத்தில் வீரையனின் ஒட்டுமொத்த கவனமும் அவள் மேல் குவிந்தது. உறுத்தல் ஏதுமின்றி அவளைப் பார்க்கத் தொடங்கினான் வீரையன்.

லீலா மாத்திரை எடுத்துக் கொண்டு இவனிடம் வந்து நீட்டினாள். அவளது முகத்தில் இன்னும் முதுமை வந்து சேரவில்லை. திருத்தமான முகம். சற்றே கவலையும், சோர்வும் படர்ந்திருந்த முகம். அதனை மானசிகமாக விலக்கிப் பார்த்தால் ஓர் அழகிய நடுவயதுப் பெண்தான் இவள். வீரையன் அவளை பார்த்த பார்வையை

# வேரின் முகம்

இலைகளின்
பசுமை முகங்களில்
குதூகலத்தின் ஆளுமை.
பூக்களின்
புன்னகை முகங்களில்
வசீகர வாசனை.
தளிர்களின்
இளம் முகங்களில்
மகிழ்ச்சியின் மலர்ச்சி.
கனிகளின்
திரண்ட முகங்களில்
செழுமையின் குளுமை.
வேரின் முகம்
எப்படியிருக்கும்?
செடியைக் கொத்தாய்ப்
பிடுங்காமலே கூறுவேன்.
அழகாய்த் தெரியும்
தாய்மையின் சாயல்!

விஷ்ணு குமார்

அவன் வித்தியாசமாக உணர்ந்தாலும் அதனைக் காட்டிக் கொள்ள விரும்பாதவளாய் அவன் மாத்திரையை அவனிடம் கொடுக்கும்போது முகத்தைச் சாதாரணமாக வைத்துக் கொண்டாள்.

"உங்களுக்கு என்னங்க வயசு?"

அவள் முகம் சுருங்கியது. "ஏன்?"

"சும்மாதான் கேட்டேன்" என்றான் வீரையன்.

"அனாவசியமான கேள்வி. அதையெதுக்கு சும்மா கேக்குறீங்க" இந்தப் பதிலைச் சொன்ன லீலா, முற்றிலும் வேறானவளாக வீரையனுக்குத் தோன்றினாள். அவன் 'சட்'டென உஷாரானான்.

"மன்னிச்சுக்கங்க. தயவு பண்ணி தப்பா எடுத்துக்க வேணாம். நான் சாதாரணமாத் தான் கேட்டேன்."

"சரி பரவாயில்லை... விடுங்க."

"........................"

"அப்புறம் வேறென்ன விஷயம்?"

"அது ஒண்ணுமில்லைங்க" போலியாக தனது முகத்திலொரு தயக்கமும், பரிதாபமும் காட்டினான் வீரையன்.

"ஒங்ககிட்ட ஒரு உதவி கேட்டு வந்திருக்கேன். முடிஞ்சா தட்டாம செய்யணும்."

"என்ன உதவி? எங்கிட்டப் போயி..."

"ஒண்ணுமில்ல... கொஞ்சம் பணம் கைமாத்தா வேணும். ஒரு வாரத்துல தந்துர்றேன். இருந்தா, குடுத்து ஹெல்ப் பண்ணுங்க. முடியாதுன்னாலும் நீங்க தயங்காம சொல்லிருங்க. நான் ஒண்ணும் சங்கடப்பட்டுக்கிட மாட்டேன்."

அவள் புன்னகை செய்தாள்.

"தர்றேங்க... எவ்வளவு தேவைப்படுது?"

ஒரு வினாடி மனசுக்குள் யோசித்த வீரையன் "ஐந்நூறு ரூபாய்ங்க" என்றான்.

"இருங்க வர்றேன்" என்று லீலா உள்ளே சென்றாள்.

கண்களில் போதை ஏற, அதே நேரம் எச்சரிக்கையுடன் அவள் உள்ளே போவதையே பார்த்துக் கொண்டிருந்தான் வீரையன்.

(தொடரும்)



சிக்கல் - 65

வரலொட்டி ரெங்கசாமி

# “இழுங்கப்பா சங்கிலியை!”

ஒருமுறை மூதறிஞர் ராஜாஜியும், அவரது நண்பரும் ரயிலில் பயணம் செய்து கொண்டிருந்தார்கள் பேச்சு சுவாரசியத்தில் நண்பர், கைக்கடிகாரத்தைக் கழற்றவும் மாட்டவுமாக இருந்தார். அப்போது அவர் கடிகாரம் கழன்று ஜன்னலுக்கு வெளியே விழுந்து விட்டது.

அந்தக் காலத்தில் கைக்கடிகாரம் வெகு சிலரே வைத்திருப்பார்கள். விலையுயர்ந்த பொருள் வேறு. நண்பர் பதறி விட்டார். “ரயிலை நிறுத்தச் சொல்லுங்கள். என் கடிகாரம் விழுந்து விட்டது” என்று ராஜாஜியைப் பார்த்துக் கத்தினார். ஆனால் ராஜாஜி அதைக் காதில் வாங்கிக் கொள்ளாமல் வெளியில் எங்கோ வெறித்துப் பார்த்தபடி ஜெபம் செய்வது போல் முணுமுணுத்துக் கொண்டிருந்தார். நண்பருக்கு ராஜாஜி மேல் வருத்தம். தம்முடைய பதவியையும் அதிகாரத்தையும் உபயோகித்து, கடிகாரத்தை எடுத்துத் தராமல் ஜெபம் செய்து கொண்டிருக்கிறாரே என்று.

அடுத்த ஸ்டேஷனில் ரயில் நின்றதும் அந்த ஸ்டேஷன் மாஸ்டர் மரியாதை நிமித்தம் ராஜாஜியைப் பார்க்க வந்தார். ராஜாஜி அவரிடம், “இங்கிருந்து 8ஆவது தந்திக் கம்பத்தின் அருகே இவருடைய கைக்கடிகாரம் விழுந்து விட்டது. யாரையாவது விட்டு எடுத்து வரச் சொல்லுங்கள்” என்று அமைதியாக கூறினார். கடிகாரம் பத்திரமாக வந்து சேர்ந்தது.

நண்பரின் கடிகாரம் விழுந்துவிட்டது என்று தெரிந்ததும் ராஜாஜி ஜெபம் செய்யவில்லை; எந்த பதற்றமும் இல்லாமல் தந்திக் கம்பங்களை எண்ணிக் கொண்டு வந்திருக்கிறார் என்பதை உணர்ந்த நண்பருக்கு அழுகையே வந்து விட்டது.

நண்பர்களுக்குச் சிக்கல் என்று தெரிந்தவுடன் பலர் ‘டாம் டூம்’ என்று ஏதாவது செய்து விடுவார்கள். ராஜாஜி உணர்ச்சி வசப்படாமல் அறிவுபூர்வமாக உதவிக் கரம் நீட்டி நண்பரின் பிரச்னையைத் தீர்த்து வைத்தார். அவர் ரயிலை அந்த இடத்திலேயே நிறுத்தியிருக்கலாம்.

ஆனால் அப்படிச் செய்வது அதிகார துஷ்பிரயோகம் என்பதையும் ஒரு நபரது கவனக்குறைவுக்காக நூற்றுக்கணக்கான பயணிகளைக் காக்க வைப்பது நியாயமில்லை என்பதையும் உணர்ந்திருந்த உண்மைத் தலைவர் ராஜாஜி.





• மருத்துவர் குழு

# டயானா... ஓ... டயானா!

முப்பத்தைந்து பேர் அடங்கிய, அந்தக் குழுவைச் சேர்ந்த அத்தனை பேரும், ஐம்பதைக் கடந்த டாக்டர்கள். 1962ல் சென்னை மருத்துவக் கல்லூரியில், ஒரே பேட்சில் உயிர் நண்பர்களாய்ப் பழகிப் படித்தவர்கள். கல்லூரி நாட்களுக்குப் பின் வாழ்க்கை, தொழில் என்று காலவெள்ளம் அடித்துக்கொண்டு போனதில், உலக வரைபடத்தின் வெவ்வேறு திசைகளில் சிதறிக்கிடக்கும் தூர தேசங்களில் தொலைந்து போனார்கள்.

சொந்த மண்ணைப் பிரிந்து குடியேறிய நாடுகளில், புகழையும், பொருளையும் சேர்க்க முடிந்தாலும், கல்லூரி கொடுத்த உயிர் நண்பர்களின் நினைவுகளை நீக்க முடியாமல் அவதிப் பட்டனர். அமெரிக்கா, ஆஸ்திரேலியா, தென் ஆப்ரிக்கா, பிரான்ஸ் என்று பிரிந்து கிடந்த இவர்கள், தத்தம் முகவரிகளைப் பரிமாறிக் கொண்டாலும் நேரில் சந்தித்து, ஆரத்தழுவி மலரும் நினைவுகளை மகிழ்ச்சியாய்க் கொண்டாட முடியாதா என்று கனவு கண்டனர்.

எல்லோரும், எங்கே, எப்போது, எப்படி ஒன்று சேர்வது? வெவ்வேறு நாடுகளின் விசா சட்டங்களும், விதிமுறைகளும் வழி விட்டாலும்கூட, யார் ஏற்பாடு செய்து தருவார்கள் என்று ஏங்கவே ஆரம்பித்து விட்டார்கள் என்.ஆர்.ஐ நண்பர்கள். தமிழகத்திலேயே புகழ் பெற்ற மருத்துவர்களாக இருக்கும் தமது நண்பர்கள் சிலர்மூலம் இந்த சந்திப்பிற்கு ஏன் ஏற்பாடு செய்யக்கூடாது என்று முழுப் பொறுப்பையும் சென்னை வாழ் டாக்டர்களிடம் ஒப்படைத்துவிட்டார்கள். சென்னை ஸ்டான்லி மருத்துவமனையில், இதயநோய், எலும்புச்சிகிச்சை பிரிவுகளின் தலைமை மருத்துவர்களாய்ப் பணியாற்றும் வியாஸ், ரெத்தின சபாபதி மற்றும் சந்திரன் ஆகிய மூன்று பேரும்தான் அந்த டாக்டர்கள்.

பொறுப்பை ஏற்றுக் கொண்ட இவர்கள், நண்பர்களின் சந்திப்பு மட்டும் போதாது. ஓர் உலகச் சுற்றுலாவுக்கும் ஏற்பாடு செய்ய வேண்டும் என்று களத்தில் இறங்கினர். முன்னணி டிராவல் நிறுவனங்களையும், டூர் ஆபரேட்டர்களையும் சந்தித்து தங்கள் கெட்டுகெதர் கனவு குறித்து சொல்லியிருக்கிறார்கள். ஆனால் ஒவ்வொருவரும் இன்னொருவரை கைகாட்டி விட்டு ஒதுங்கிக் கொண்டனர். அந்த நேரத்தில் மற்றொரு மருத்துவ நண்பர் மூலம் 'டயானா' பற்றி தகவல் கிடைத்திருக்கிறது.

உலகின் எந்த மூலைக்கும் பயண ஏற்பாடுகளைச் செய்து தரும் பிரபல நிறுவனம், டயானா வேர்ல்டு டிராவல்ஸ் பிரைவேட் லிமிடெட். எழும்பூர் மாண்டியத் சாலையில் உள்ள நிறுவனத்தின் தலைமை அலுவலகத்தை அணுகிய மருத்துவர்களுக்கு நம்பிக்கை பிறந்தது. பத்தே நாட்களில் முழுச் சுற்றுலாவையும் டயானா ஏற்பாடு செய்து கொடுத்ததை நம்ப

முடியாமல் பயணத்தைத் தொடங்கினார்கள். கோலாலம்பூர், மலேசியா, லண்டன், நியூயார்க் என்று தொடங்கிய பயணத்தில் கொஞ்சம் கொஞ்சமாய் ஒன்று சேர்ந்த நண்பர்கள் பாரிசில் கூடிக் களித்து முப்பதாண்டு நட்பைக் கொண்டாடி விட்டார்கள். "இன்னும் அந்த பதினைந்து நாட்கள் ஒரு கனவு போலவே இருக்கிறது. வழி நெடுகிலும் எங்களோடு பயணப்பட்டு, வசதியான விடுதிகளில் நியாயமான கட்டணத்தில் தங்க வைத்து, இந்திய உணவுகளை எங்களுக்காகத் தேடிக் கொடுத்து, தரை வழிப் பயணங்களில் எங்கள் பாதுகாப்பை உறுதி செய்து, அசத்தி விட்டார்கள். டயானா ஓ... டயானா" என்று பாராட்டுப் பத்திரமே வாசிக்கிறார்கள்.

டயானா வேர்ல்டு டிராவல்ஸின் இயக்குனர் குழுவில் இடம் பெற்றுள்ள கே. வெங்கட்ராமனைச் சந்தித்தோம்.

"குளோபலைசேஷனுக்குப் பிறகு உலகளாவிய பயணச் சேவையின் தேவை பல மடங்கு உயர்ந்துவிட்டது. அது மட்டுமல்லாது சுற்றுலாத் துறையை வளர்த்தெடுக்க எல்லா நாடுகளின் கதவுகளும், இப்போது சுதந்தரமாய்த் திறக்கப்பட்டுவிட்டன. எனவே சூழ்நிலையின் தேவையைப் பயன்படுத்திக் கொண்டு உலக அளவிலான பயண ஏற்பாடுகளை, விரைவாக செய்து கொடுத்து, ஒவ்வொரு அசைவிலும் துல்லியமாக வழி காட்டும் ஒரு முழுமையான டிராவல் சேவை நிறுவனத்தைத் தொடங்க நினைத்தோம். இருபத்தைந்து ஆண்டு காலம் இத்துறையில் பணியாற்றிய அனுபவம் எங்களுக்குக் கை கொடுத்தது.'' என்றவர் நிறுவனத்தின் சேவைகள் குறித்து விளக்கினார்.

"சென்னையில் தலைமை அலுவலகத்தையும், ஹைதராபாத்தில் கிளை அலுவலகங்களையும் இயக்கி வருகிறோம். டெல்லி, மும்பை மற்றும் பெங்களூரில் அசோசியேட் அலுவலகங்களும் உண்டு. தொழில் ரீதியாக அனுபவம் பெற்ற எழுபத்தைந்து அலுவலர்கள் இருபத்து நான்கு மணி நேரமும் பணியாற்றி வருகிறார்கள்.

"நிறுவனத்தின் இண்டர்நேஷனல் பிரிவில், வெளிநாட்டுப் பயணங்களுக்கு, டிக்கெட்டுகளை முன் பதிவு செய்தல், வீட்டிற்கே வந்து டிக்கெட்டுகளைத் தருதல், விசா, பாஸ்போர்ட்டுகளை விரைந்து பெற்றுத் தருதல் போன்றவற்றை வாடிக்கையாளரின் தேவையறிந்து செய்கிறோம். இதில் தொழில் நிறுவனங்கள் மேற்கொள்ளும் பிஸினெஸ் டூர், தனி நபர் மற்றும் நூற்று ஐம்பது பேர் வரை அடங்கிய குழு என்று பிரித்துக்கொண்டு செயல்படுகிறோம். வாடிக்கையாளர்கள் விரும்பும் அல்லது கேட்கும் வகுப்பில் கடைசி நேரத்திலும் டிக்கெட்டுகளைப் பெற்றுத் தருவதில் எங்கள் நிபுணத்துவம் பயன்படுகிறது. அதேபோல் கடைசி நேரத்தில் முன்பதிவை மாற்றித் தருதல், ரத்து செய்தல் போன்றவற்றையும் விரைவாக செய்துகொடுத்து, வாடிக்கையாளர் நஷ்டம் அடைவதை அடியோடு தவிர்த்து வருகிறோம்" என்கிறார் வெங்கட்ராமன்.

கோனிகா, தமிழ்நாடு பெட்ரோ ப்ராடக்ட்ஸ், மெட்ராஸ் பெர்டிலைசர்ஸ் லிமிடெட், டிட்கோ போன்ற நூற்று ஐம்பது நிறுவன வாடிக்கையாளர்களுக்கு டிராவல் சேவை செய்து வரும், இந்த நிறுவனம், உலகம் முழுவதும் தனது பிரதிநிதிகளைப் பணியில் அமர்த்தி, உலக அளவிலான டூர்களை பட்ஜெட் செலவில் முடித்துத் தருவதால், வாடிக்கையாளர் மூலமே இவர்களுக்குப் புதிய வாடிக்கையாளர்கள் கிடைத்து வருகிறார்களாம்.

இந்திய சுற்றுலாத் துறையினால் அங்கீகரிக்கப்பட்டுள்ள இந்த நிறுவனம், உலகளவிலான டிராவல் மற்றும் சுற்றுலாச் சங்கங்களில் உறுப்பினராகவும் இருப்பதால் டிராவல் சேவைக்கு ஐஎஸ்ஓ 9002 தரச்சான்று பெறவும் முயன்று வருகிறார்களாம். www.dianaworld.com என்ற இணையதளத்தின் மூலம் எந்த நேரத்திலும் டிக்கெட்டுகளை ஆன் லைன் பதிவு செய்யலாம் என்கிறார்கள்.

சந்திப்பு: **சக்கரத்தாழ்வார்**

படங்கள்: **ஸ்ரீஹரி**



• டயானா இயக்குனர் குழு

பகலா, இரவா என்று தெரியாதபடி, சோடியம் விளக்குகள் ஆரஞ்சு நிற ஒளிப் புகையை உமிழ்ந்து கொண்டிருக்க, அந்த அதிகாலைப் பொழுதிலும் திருப்பதி- திருமலைப் பகுதி ரொம்ப பிஸியாக இருந்தது- உலக நகரங்களிலிருந்து, பக்த கோடிகள், தினமும் லட்சங்களில் வந்து இறங்கிக் கொண்டிருக்க...

புத்தம் புதிய டாடா சுமோ வேனில் சென்னை ஸ்ரீனிவாஸன் குடும்பத்தினரும் இறங்குகின்றனர்.

இனம் புரியாத புனிதம் மனத்தை நிரப்ப, குளிர் காற்றை அனுபவித்தபடியே முதலில்



## புரட்டாசி ஸ்பெஷல்

இறங்கினார் திருமதி லட்சுமி.

"அப்பா... கோவிந்தா..." என்றபடியே, முட்டிக் காலைத் தாங்கியபடியே மெள்ள இறங்கினார் ஸ்ரீனிவாஸனின் தாயார் கமலாம்பா...

'ஜிங்' என்று ஸ்டைலாக குதித்தான் பர்முடாஸில் இருந்த பத்ரி... ஸ்ரீனிவாஸனின் அமெரிக்க பேரன். அடுத்து இறங்கி, முதுகை வளைத்து அழகாய் பூனைக்குட்டி போல சோம்பல் முறித்த டீனேஜ் பெண் பத்மினி... அமெரிக்க பேத்தி. காரை ஓட்டி வந்த ஸ்ரீகாந்த். அவன் மனைவி சுசித்ரா, ஸ்ரீனிவாஸனின் - மகன் மற்றும் மருமகள்... அறிமுகம் முடிந்தது... இனி ஸ்ரீ வராஹ சுவாமி காட்டேஜ் வாசலில் இந்தக் குடும்பத்துக்காக காத்திருக்கும் ரங்கராஜனைப் பரிச்சயம் செய்து கொள்வோம்.

ஸ்ரீனிவாஸனின் பால்ய நண்பர். திருமலை வாசி... திருவேங்கடப் பெருமாள் சேவையில் வாலண்டியராக இருப்பவர்.

இனி...

"வாங்க... வாங்க... வெல்கம்" ரங்கராஜன் நண்பனைத் தழுவிக் கொண்டார். ஸ்ரீகாந்தின் கைகுலுக்கி அன்பைப் பரிமாறினார்.

"ஈஸ் இட் ஃபஸ்ட் டைம் டு திருமலா?" என்று பத்ரியைக் கேட்க,

"தமிழ்லேயே பேசுங்க அங்கிள். நல்லா பேசுவாங்க" என்றாள் சுசித்ரா.

"எப்பவோ, சின்ன வயசுல பத்ரிக்கு மொட்டை போட வந்தது... அதுக்கப்புறம் அமெரிக்கா போயிட்டாங்க... இப்பதான் அனுகிரஹமாயிருக்கு, பெருமாளைத் தரிசனம் பண்றதுக்கு..." கமலாம்பாள் குரலில் ஆதங்கம்.

"ரொம்ப குளிருது அங்கிள்" என்று கைகளை மார்புக்குக் குறுக்கே கட்டிக் கொண்டாள் பத்மினி...

"திருப்பதியிலிருந்து ஐந்நூறு அடி உயரத்துல இருக்கோமே... அதான்" என்றார் ஸ்ரீனிவாஸன்.

"காட்டேஜ் நல்ல வசதியா இருக்குப்பா... தாங்க்ஸ் அங்கிள்" ஸ்ரீகாந்த் காலை நீட்டி உட்கார்ந்தான்.

"சரி... ரெஸ்ட் எடுக்கப் போறீங்களா? இல்லை, ஊர் சுற்றிப் பார்க்கப் போகலாமா...?"

"இவ்வளவு தூரம் வந்தது ரூம்லே முடங்கிக் கிடக்கவா? கிளம்பலாம்."

லட்சுமி முகம் அலம்பிக் கொண்டு சுறுசுறுப்பாக புறப்படவும்...

# ஸ்ரீனிவாஸனின் திருப்பதி

"ஓ... பாட்டி... நீ பியூட்டி... வாராயென் தோழி... வயசான தோழி" என்று பத்ரி கேரோ செய்யவே, மிஸ்ஸ் லட்சுமி, நிஜமாகவே ஜீன்ஸ் நடிகை லட்சுமி போல முகம் சிவந்தார்.

"இதுதான் சுவாமி புஷ்கரணி. தினமும் 20 லட்சம் காலன் தண்ணீர் விட்டு பராமரிக்கப்படுகிறது. சுக்லபட்ச துவாதசி தினத்தன்று, தனுர் மாஸத்தில் எல்லா நதிகளும், தீர்த்தக் குளங்களும் இங்கே மூங்கி பாவம் களைவதாக ஐதிகம்" என்று சொல்லி தீர்த்தத்தை எடுத்து, கண்ணில் ஒற்றிக் கொண்டார் ரங்கராஜன்.



## புரட்டாசி ஸ்பெஷல்

அனைவரும் தலையில் தீர்த்தத்தைத் தெளித்துக் கொண்டு, படிக்கட்டில் உட்கார்ந்தனர். குளத்தில் குளித்துக் கொண்டிருந்த ஒரு பெண், பேக்கட் ஷாம்பூ போட்டுக் குளிப்பதைப் பார்த்து, விஸிலும் தடியும் வைத்திருந்த காக்கி வாட்ச்மேன் துரத்திக் கொண்டுப் போக...

> செடியாய வல்வினைகள் தீர்க்கும் திருமாலே
> நெடியானே! வேங்கடவா! நின் கோயிலின் வாசல்
> அடியாரும் வானவரும் அரம்பையரும் கிடந்தியங்கும்
> படியாய்க் கிடந்து உன் பவளவாய் காண்பேனே
> – நாலாயிர திவ்ய பிரபந்தம்

இந்தப் பக்கமாக இன்னொரு மொட்டைத் தலை, 'ஹமாம்' சோப்பு நுரைக்க குளித்தது.

"பவித்ரமான ஜலம்... எப்படி நேஸ்டி பண்றாங்க பாருங்க..." லட்சுமி சலித்துக் கொண்டாள்.

"சம்பிரதாயம் பார்க்கிற பெரியவங்க, சுவாமி புஷ்கரணியில குளிச்சு, வராஹசுவாமி கோயில் தரிசனம் பண்ணிட்டுதான், பெருமாளை சேவிக்கப் போவாங்க. இப்ப என்னடான்னா கையில சுதர்ஷண பாண்ட்டைக் கட்டிய உடனேயே, 'டைம்' பார்த்துட்டு, நேரா கோயிலுக்குப் போயிடறாங்க" என்று வருத்தப்பட்டார் ரங்கராஜன்.

"ஆனா... இந்த பாண்ட் சிஸ்டம் நல்ல ஏற்பாடுதான்... மணிக்கணக்குல இரும்புக் கூண்டுல அடைஞ்சு கிடக்க வேணாம் பாரு."

"இந்த வாட்டர் ப்ரூஃப் பாண்ட், விலை ஒரு ரூபாய் முப்பது காசு ஆகுது. ஹைதராபாத்துல தயாரிக்கறாங்க. ஸ்கேனிங் வேலைகளை பெங்களூர் நிறுவனம் செய்யுது" என்று தகவல் சொன்னார் ரங்கராஜன்.

"அம்மா... பூ... மல்லிப்பூ..." பூக்கூடையோடு நெருங்கிய பையனைப் பார்த்ததும், "யூ வான்ட் ஜாஸ்மின் பப்பி?" என்று மகளைக் கேட்டான் ஸ்ரீகாந்த்.

"ஒத்தப்பா... ஒத்து... போ" என்று விரட்டினார் ரங்கராஜன்.

"திருமலையில் பூக்கிற, கிடைக்கிற எல்லா பூவுமே சுவாமிக்குத்தான். அதனால இங்க யாரும் மாலை போட்டுக்கறதோ, பூ வைச்சுக்கறதோ கூடவே கூடாது." ரங்கராஜன் சொல்லிக் கொண்டிருக்க, பத்மினி ஏக்கத்தோடு திரும்பிப் பார்த்தாள். அங்கே... புத்தம் புது மனைவிக்கு, அவளுடைய கணவன் ஆசையாக பூ வாங்கிக் கொடுத்துக் கொண்டிருந்தான்!

"சீனி... உனக்கு முடி இறக்கினப்போ, இந்த சத்திரத்துலதான் தங்கியிருந்தோம். அப்பல்லாம் இவ்னோ வசதி ஏது? விறகு, அரிசி, கறிகாய் எல்லாமே தூக்கிட்டு, மலையேறி நடந்தே வந்தோம்... இப்ப, கார்ல வரக்கூட கால் வலிக்குது" என்றாள் கமலாம்பாள்.



"படியெல்லாம் இருக்கவே, மலை ஏற சிரமப்படறோமே...வ்ருஷபாத்ரியில் தன் கால் பட்டு விடக் கூடாதே என்பதற்காக, முழங்காலிட்டே நடந்து வந்து சேவித்

• ஆனந்த விமானம்



தாராம் ஸ்ரீராமானுஜர்... அவரோட பக்தி அசாத்தியமானது'' என்று ஸ்ரீனிவாஸன் சொல்ல, ரங்கராஜன் புன்னகைத்தார்.

"அங்கிள்... அங்கப் பிரதக்ஷணம் பண்ணணும்னா காலைலே எத்தனை மணிக்கு இருக்கணும்?'' சுசித்ரா கேட்டாள்.

"ஸாரிம்மா... இப்பல்லாம அங்கப் பிரதக்ஷண சேவையை சுத்தமா நிறுத்திட்டாங்க. கோயிலுக்கு வெளிப் பிராகாரத்துல வேணா சுத்தி பிரதக்ஷணம் பண்ணலாம். இந்த விஷயம் தெரியாமல், வேண்டிக்கிட்டவங்க ஏதாவது அபராத காணிக்கை போட்டுட்டா போதும். பெருமான் ஏத்துக்குவார்'' என்று சொன்னார் ரங்கராஜன்.

எஸ்பிரஸோ காப்பியைக் குடித்துக்கொண்டே அன்னதானம் காம்ப்ளெக்ஸ் ஏரியாவில் நுழைந்தார்கள். ஏகப்பட்ட பிளாட்பாரம் கடைகள். பெட்டிக் கடைகள், கேஸட், விளக்கு, டாலர், கீ-செயின் என எல்லாவற்றிலும 'சுவாமி'தான் சூப்பர் ஸ்டார்.

"மம்மி... லோலிடாவுக்கு ஒரு பெருமான் படம் வாங்கிக்கறேன்'' என்றான் பத்ரி.

"இங்கே வந்தும் கேர்ள் – ஃப்ரெண்டை மறக்க முடியலையா...? ஓ! புவர் பாய்!'' பத்மினி கிண்டலடித்தாள்.

தகதகவென ஜொலித்த பெருமாள் படத்தை, ஆரம்பத்தில் நூறு ரூபாய் சொல்லி, ஏகப்பட்ட பேரத்துக்குப் பிறகு நாற்பது ரூபாய்க்கு சந்தோஷமாகத் தந்தான் கடைக்காரன்.

"வெங்கடாஜலபதி ரொம்ப அழகு... எவ்வளவு நகை? வெரி கிராண்ட்...'' பத்மினி கண் கொட்டாமல் ரசித்தாள்.

"பகவான் சுமார் ஒன்பதடி உயரம். விரிந்த தாமரை மேல் நின்ற திருக்கோலம். 'ஸ்தானகக் கோலம்'னு சொல்வாங்க.. வெள்ளிக் கிழமைகளில் கவசங்கள் எல்லாவற்றையும் களைந்து, அபிஷேகம் பண்ணுவாங்க. அப்ப பெருமாளை பாதாதிகேசம் கண்டு தரிசிக்கலாம்... மூலவர், சிவப்புக் கல் சாளகிராம சிலை. அடிக்கடி சந்தனம், புனுகு, பச்சைக் கற்பூர அபிஷேகம் செய்யப்படுவதால் கருமை நிறமாகிவிட்டார்'' என்று சொன்னார் ரங்கராஜன்.

"ரங்கா, நீ வர்ணிக்கறதைக் கேட்கவே ரொம்ப ஆசையா இருக்கு... மேலே சொல்லு'' என்றார் கமலாம்பாள் ஆர்வமாக.

"காதில் மகரக் குண்டலங்கள் ஜொலிக்கும். சங்கு, சக்கரம், புலிநகம் பதித்த மகர கண்டி, தங்க துளசி மாலை, யக்ஞோபவீதம், புஜங்களில் நாகாபரணம். தோளில்

## புரட்டாசி ஸ்பெஷல்



அஷ்டலட்சுமி மாலை, அதைச் சுற்றி சாளகிராம மாலை, கால்களில் வங்கி, தங்க பாதக் கவசம், தசாவதாரம் பொறிக்கப்பட்ட இடுப்புப்பட்டை, இடுப்புல தங்க நந்தகவாள், சாரங்க வில், மணிக்கட்டில் ஸ்யமன்தகா, மார்பில் வலப்புறம் ஸ்ரீதேவி, இடப்புறம் பூதேவி... என்று சர்வாங்க சுந்தரன் பாலாஜி...''

"இப்படியொரு வசீகரமான தோற்றம். வேறெந்த சாமிக்குமே இல்லை...'' சுசித்ரா பரவசப்பட்டாள்.

ஸ்ரீ பத்மநாப, புருஷோத்தம, வாஸுதேவ
வைகுண்ட மாதவ ஜனார்தன
சக்ரபாணே!
ஸ்ரீ வத்ஸ சிஹ்ந சரணாகத பாரிஜாத
ஸ்ரீ வேங்கடாஜலபதே தவ ஸுப்ரபாதம்

'ஆனா... அங்கிள்... இந்த மூல மூர்த்தி வைணவக் கடவுளே இல்லை, முருக தெய்வம்னு சொல்றாங்களே...'' ஸ்ரீகாந்த் கேட்டான்.

''இவர் சுயம்பு மூர்த்தி... சாட்சாத் பிரபிரம்மம்... அதனால இவரோட உருவத்தை, சிற்ப சாஸ்திர விதிக்குள்ள அடக்க முடியாது. திருவேங்கட சுவாமியின் திருமேனியில் இரு புஜங்களிலும், அம்பு, வில் சுமந்த வடு இருக்கு. இது கோதண்டராமரோட திருமேனின்னு சொல்றாங்க. ஜடை, உடலில் ஆரவம், நாகாபரணம், வில்வதள அர்ச்சனை, இதையெல்லாம் வைச்சுப் பார்க்கும்போது,



## புரட்டாசி ஸ்பெஷல்

அது சிவ ரூபம்னு சொல்றாங்க.

''சங்கு சக்கரமும், விமானத்தில் சிங்க உருவங்களும் இருக்கிறதனால் இது தேவியின் அம்சம்'னும் சொல்றவங்க இருக்காங்க. அதனால, பிரம்மா, விஷ்ணு, சிவ, சக்தி அம்சம் கொண்ட 'அனந்த ரூபம்'னு சொல்லிடலாம்'' என்றார் முடிவாக...

''சுவாமிக்கு அழகே 'டிம்பிள் சின்'தான். அதுல வெக்கிற வெண்ணெய் பொட்டு... நல்ல காஸ்ட்யூம் சென்ஸ்'' என்றான் பத்ரி.

''நாராயணா...! அது வெண்ணெய் இல்லடா... பச்சைக் கற்பூரம்'' என்று திருத்தினாள் லட்சுமி.

''அது சும்மா அழகுக்காக வைக்கிறதில்லே... அதுக்குப் பின்னாடி ஒரு பக்தி கதை இருக்கு'' என்று சஸ்பென்ஸோடு நிறுத்தினார் ரங்கராஜன். கதை என்றதாலோ, அல்லது கால் வலித்ததாலோ, கல்யாணக் கட்டடத்தின் கற்படிகளில் காலார உட்கார்ந்து கொண்டார்கள்.

> ஸ்ரீ சேஷசைல, கருடாச்சல
> வேங்கடாத்திரி
> நாராயணாத்திரி வ்ருஷாபாத்ரி
> விருஷாத்ரி முக்யாம்.

'அனந்தாழ்வார்'னு ஓர் ஆழ்வார். கோவிந்தனின் பரம பக்தர். ராமானுஜரின் சிஷ்யர். 'பெருமாளுக்குப் பூ கைங்கரியம் பண்ற பாக்கியம் தனக்கே வேணும்'னு கெஞ்சிக் கேட்டு, திருமலைக்கு வந்து, அழகான நந்தவனம் வளர்த்தார். ரோஜா, முல்லை, துளசின்னு நித்திய பூஜைக்கு வேண்டிய எல்லா புஷ்பத்தையும் தானே பயிரிட்டு, மாலை கட்டிக் கொண்டு போய், சார்த்திவிட்டு, ஆனந்தக் கண்ணீர் வடிப்பார். ஒருமுறை அனந்தாழ்வார், பூந்தோட்டத்தில் கடப்பாரையால் வெட்டிக் கொண்டிருக்க, அவருடைய மனைவி தலையில் கூடை சுமந்து, மண் அள்ளிப் போட்டுக் கொண்டிருந்தாள். நிறைமாத கர்ப்பிணியான அவள், மண்பாரம் சுமந்து சிரமப்படுவதைக் கண்டு, இரக்கப்பட்ட பெருமாள், தாமே ஒரு சின்னப் பையனாக வந்து, மண் சட்டி தாங்கி உதவினார்.... 'எப்படி இவ்வளவு 'கிடுகிடு'னு மண் அள்ளுறா' என்று சந்தேகப்பட்டு, திரும்பிப் பார்த்த ஆழ்வாருக்கு, பொடிப்பயல் கண்ணில் பட்டுவிடுகிறான். 'பெருமாள் சேவையில் மூன்றாவது கையா?' என்று ஆத்திரப்பட்டு, கையிலிருந்த கடப்பாரையை விட்டெறிய, அது பையனின் தாடையில் பட்டு காயமாகி விடுகிறது.

மாலையில், பெருமாளுக்குப் பூமாலை சார்த்த போன, அனந்தாழ்வாருக்கு அதிர்ச்சி! சுவாமியின் தாடையில் ரத்தம்! அவருக்குப் புரிந்துப் போகிறது... காலையில் வந்தது சாட்சாத் நாராயணனேதான்!



• கோபுர வாசல்



• தங்க ரதம்



• வைரக்கிரீடம்

'பெருமாளுக்கு ரத்தம் கசியுதே!' என்று துடித்துப் போய், ஏழிலைப் பாலை சாற்றைத் தடவி, பச்சைக் கற்பூரம் எடுத்து பூசுகிறார். ரத்தக் கசிவு நிற்கிறது... ஆனால் தழும்பு...?

"ஐயோ... மகா பாவம் செய்துவிட்டேனே... அழகனை, இப்படி ஊனமாக்கிவிட்டேனே" என்று அழுது புலம்புகிறார்.

அப்போது பகவான், விஸ்வருபக் காட்சி தந்து, "என் மார்பில் 'ஸ்ரீவத்ஸம்' இருப்பது போல, உன் பக்தியின் நினைவாக, இந்தத் தழும்பும் நிரந்தரமாக இருக்கும். இந்தச் சம்பவத்தை நினைவுகூரும் வண்ணம், தினமும் எனக்குப் பச்சைக் கற்பூரம் பூசுங்கள். வடு உண்டாக்கிய கடப்பாறையை கோயிலுக்குள் மாட்டி வையுங்கள்" என்றார். இன்றைக்கும் கோவிலின் வலதுபுற பிராகாரத்தில், கல் கடப்பாரையைக் காணலாம்..."

> ஸ்ருதி சிரசி தீர்த்தே
> ப்ரம்மமாகிய ஸ்ரீநிவாஸ: – இராமானுஜர்
> (சுருதிக்குள் தலை போல் இருக்கின்ற – பிரணவமாய் இருக்கின்ற ஸ்ரீநிவாஸனிடம் மனம் எப்போதும் நிலைத்திருக்கட்டும்.)



பல மாடிகளுடன் இருந்த 'கல்யாண கட்டட'த்துக்குள் நுழைந்தார்கள். அங்கேயும் நெரிசல். ஏராளமான பாத்ரும்... ஈரத்தரை... மொட்டைத் தலைகள்.

"காலில் முடி பட்டால் பாவம்" என்று பார்த்து பார்த்து நடந்தாள் கமலாம்பாள்.

நீளமான வரிசைகளில் பலகை போட்டு, உட்கார்ந்து இருந்த 'டிப்டாப்' நாவிதர்களுக்குத் தலைக்கு மேல் வேலை. உறையைக் கிழித்து, அரை பிளேடு எடுத்து, தலையை 'மழமழ' என ஆக்குவதில் மும்முரமாக இருந்தவர்களை காமிராவில் கிளிக் எடுத்தான் பத்ரி.

## புரட்டாசி ஸ்பெஷல்



புது வேட்டி, பத்து விரல் மோதிரம், கனமான தங்க செயின் என்று படுபந்தவாக இருந்தார்கள்.

"டோக்கன் இருபை மூடு" மைக்கில் சப்தம் கேட்கவே, அந்த டோக்கன்காரர் பதறியடித்துக் கொண்டு உட்கார்ந்தார். அவரது தொடையைத் தட்டி, தலையைப் பிடித்து, காதுக்குள் ஏதோ முணுமுணுக்க, அவர் புரியாமல் திகைத்ததும் 'டப்பு... டப்பு' என்று சைகை காட்டி, பத்து ரூபாயை நைஸாக பத்திரப்படுத்தினார் அந்த நாவிதர்.

அவரது மரப்பலகைக்குக் கீழே இருந்த விரிப்புக்கு அடியில் எத்தனையோ பத்துகள்! வாசலில் 'இலவச மொட்டை' என்ற விளம்பரம் ஸ்ரீதரன் கண்களை உறுத்தியது.

"இந்த ஊரில் இறை சிந்தனை எவ்வளவு இருக்கோ, அதுக்கு சமமா ஊழலும் லஞ்சமும் ஊடுருவியிருக்கு. பக்தர்களின் அவசரத்தையும், தேவையையும் காசாக்கறாங்க... புகார் பண்ணினாலும் எடுபடாது... அப்படியே ஊறிடுச்சு... நமக்குதான் பக்தி. அவங்களுக்கு பிழைப்பு..." ஸ்ரீனிவாஸன் சகஜமாகப் பேசினார்.

"டாடி... அந்த ரூமுல, மலை மாதிரி



## புரட்டாசி ஸ்பெஷல்

தலைமுடியைக் குவிச்சுருக்காங்க" என்றாள் பத்மினி.

"இதெல்லாம் என்ன பண்ணுவாங்க தாத்தா?"

"ஏலத்துக்குப் போயிடும்டா... கோயிலுக்குச் செம காசு வர்றதே இந்த முடி காணிக்கையாலதான். வருஷத்துக்குச் சுமார் இருபது கோடி வருமானம் வருது."

"விக் தயாரிப்புக்காக ஃபாரின் எக்ஸ்போர்ட்தான் அதிகம். முடியில இருக்கிற புரோட்டீனை வைச்சு, சாக்லேட் தயாரிக்கிறதாகூட சொல்றாங்க" என்றார் ரங்கராஜன்.

"பெண்களோட நீளமான கூந்தலுக்குத்தான் அதிக ரேட். கிலோ 6,300 ரூபாய்... நரைச்ச முடி இரண்டாம்தரம் கிலோ 1,634 ரூபாய். மத்ததெல்லாம் சாதா... கிலோ 48 ரூபாய். நீளமான வெள்ளை முடியா இருந்தா தனி விலை."

"பாட்டி... தெரிஞ்சிருந்தா நீ 'டை' அடிச்சிருக்க மாட்டே இல்லே!" பத்மினி, லட்சுமியின் பின்னலைப் பிடித்து இழுக்க, "சே...சே! 'டை' கிடையாதே! சும்மா ஹென்னா வாஷ் போட்டிருக்கேன்" சமாளித்தாள்...

அங்கிள்... ஒரு டிக்கெட்டுக்கு இரண்டு லட்டுதானா? எனக்கு எக்ஸ்ட்ரா லட்டு வேணுமே?"

"மொதல்ல லட்டுப் பற்றாக்குறை இருந்தது நிஜந்தான். ஆனா இப்ப, பத்து ரூபாய் கொடுத்தா எக்ஸ்ட்ரா லட்டு கிடைக்குது. லட்டு மிஷின் வந்ததால, பிரசாதத்துக்குத் தட்டுப்பாடு இல்லை."

"லட்டு மிஷினா?"

"ஆமா... மங்களூரில் உள்ள மைக்கோ இன்ஜினியரிங் கம்பெனிக்காரங்க,

> விநா வேங்கடேசம் ந நாதோ நநாத:
> ஸதா வேங்கடேசம் ஸ்மராமி ஸ்மராமி
> ஹரே வேங்கடேச ப்ரஸீத ப்ரஸீத
> ப்ரியம் வேங்கடேச ப்ரயச்ச ப்ரயச்ச:
>
> (திருவேங்கடவனைத் தவிர
> வேறொரு நாதன் இல்லை.
> எப்பொழுதும் வேங்கடவனைத்
> துதிக்கிறேன், துதிக்கிறேன்.
> ஹரியே வேங்கடேசா அருள்புரி!
> அருள்புரி!
> வேங்கடேசா! யான் விழை
> பொருளைத் தந்தருள்! தந்தருள்!)
> – ஸ்ரீவேங்கடேச ஸ்தோத்ரம்

பிரத்யேகமா தயாரிச்சுக் கொடுத்திருக்காங்க. விலை என்ன தெரியுமோ? அறுபது லட்சம். இப்ப, ஒரு நாளைக்கு இருபதாயிரம் லட்டு தயாராகுது. விசேஷ நாளுன்னா ஆர்டரும் ஜாஸ்தியாகும்."

"என்னமோப்பா! அந்தக் காலத்துல, திருப்பதி லட்டுன்னா, நல்லா பெரிசா, முந்திரியும் நெய்யுமா ருசியா இருக்கும். ஆனா இப்ப குடுக்குற லட்டுல நெய் பசையே இல்ல... முந்திரிகூட தப்பித் தவறி இருக்கு... வெறும் கல்கண்டு துண்டை வைச்சே லட்டு கட்டிட



• அன்னமாச்சாரியார்



• புரந்தரதாஸர்



• தியாகராஜர்

றாங்க! சைஸும் ரொம்ப குறைஞ்சு போச்சு..." கமலாம்பாள் அங்கலாய்த்தார்.

"ஒவ்வொரு லட்டும் நூற்று எழுபத்தைந்து கிராம் எடை இருக்கும் மாமி. கடலை மாவு, நெய், சர்க்கரை எல்லாம் தேவஸ்தானத்துல கொடுத்துடறாங்க... தனியார் காண்ட்ராக்டர்காரங்க தயாரிச்சு தர்றாங்க. ஒரு லட்டு தயாரிக்கிற செலவு மட்டும் 21 பைசா ஆகுதாம். அதுதான் சைசும் குறைஞ்சுப் போச்சு...டேஸ்ட்டும் குறைஞ்சு





போச்சு."

"சுவாமி பிரசாதம்! அப்படியெல்லாம் பேசக் கூடாது... அபசாரம்! நாராயணா!" என்று கன்னத்தில் 'தப்பு' போட்டுக் கொண்டாள் லட்சுமி.

"**தா**த்தா, ஆசியாவிலேயே பணக்கார சாமி மிஸ்டர் பாலாஜிதானாமே!"

"ரிச்சஸ்ட்! வருஷத்துக்கு சுமார் இருநூறு கோடி வருமானம் வருது... ஆனா 1300 வருஷமா இன்கம்டாக்ஸ் கூட கட்டறதில்லே..." ஸ்ரீனிவாஸன் சொல்லவும், செல்லக் கோபம் காட்டி முதுகில் இலேசாய்க் குத்தினாள் லட்சுமி.

"நிறைய வருமானம் வருது... அதேபோல நிறைய நல்ல காரியங்களும் செய்யறாங்க... பக்தர்களோட வசதிக்காக நிறைய திட்டங்கள்... இலவச உணவு, இலவச மருத்துவமனை, இலவச மொட்டை, இலவச தங்கும் வசதி, இலவச பஸ் வசதினு செஞ்சிருக்காங்க. அதுமட்டுமில்லை... ஆதரவற்றோர் விடுதி, ஊனமுற்றோர் மறுவாழ்வு இல்லம், முதியோர் இல்லம், ஸ்கூல்ஸ், காலேஜ் வேத பாடசாலைனு பெரிய ப்ராஜக்ட்! நிறைய டெவலப்மெண்ட்ஸ்."

"அதுக்கு நாமெல்லாம் ஆதி சங்கரருக்குத்தான் தாங்க்ஸ் சொல்லணும். ஏன்னா, அவர்தான் தன்னோட ராசியான திருக்கரங்களாலே, ஏழாவது நூற்றாண்டுலே, தன ஆகர்ஷண யந்திரத்தை, பத்ம பீடத்துல பிரதிஷ்டை பண்ணினாரு... அதுல இருந்துதான் கோயில், செல்வ செழிப்பா ஆயிடுச்சு."

"பெருமாளுக்கு முதல் கிஃப்டைக் கொடுத்து துவக்கி வைச்சது யாரு தெரியுமோ! சுவாமியோட மாமனார் ஆகாசராஜாதான். ஸ்ரீனிவாச கல்யாணத்தன்னிக்கு, சூர்ய கடாரியையும், (ஆயுதம்) தங்க கிரீடத்தையும் மாப்பிள்ளைக்குக் கொடுத்தார்... அதற்கப்புறம் கிருஷ்ண தேவராயர், தங்க கிரீடம் சாத்தியிருக்கார். ஸ்ரீமஹந்த் தர்மதாஸ்னு ஒரு வடக்கத்திக்காரர், தங்கக் கிரீடம் நன்கொடையா கொடுத்திருக்கார். அது தவிர, கோயில் சார்பா கர்ணபத்ரம், சங்கு, சக்கரம், கடி

## புரட்டாசி ஸ்பெஷல்



ஹஸ்தம், வரத ஹஸ்தம்னு வைரத்தாலேயே இழைச்சுட்டாங்க. இப்ப, சுவாமிக்கு சாத்தற வைரக்கிரீடம் ஆறு வருஷத்துக்கு முன்னாடி, ஆறு கோடி ரூபாய் செலவுலே தயாரிச்சது. எடை 26 கிலோ. மொத்தம் 28,369 வைரம் இருக்கு" ரங்கராஜன் சொல்லவும், வாயைப் பிளந்தான் பத்ரி.

"சரி, இவ்வளவு நகையும், பூவும் தினமும் போட்டுக்கிட்டு, தரிசனம் கொடுத்துக்கிட்டே இருக்காரே... உடம்பு வலிக்காதோ?" லட்சுமி கரிசனமாய்க் கேட்டாள்.



• ஸ்ரீ சக்கரம் • ஸ்ரீசங்கு • அபயஹஸ்தம் • கடிஹஸ்தம்

''அதுதான் 'குருவேரு'ங்கிற சமுத்திர



## புரட்டாசி ஸ்பெஷல்

மலரைத் தைலம் பண்ணி தடவி விடறாங்க. அது அவருக்கு ரிலாக்ஸேஷன் தந்துடுமாம்!''- ரங்கராஜன் தகவல் சொல்ல.

''வேத ஸ்வரூபி, சச்சிதானந்த மூர்த்திக்கு களைப்பாவது, ஹெர்பல் பாமாவது... இது ஓர் ஆகமவிதி. அவ்வளவுதான்'' என்றார் ஸ்ரீனிவாஸன்.

''ராமானுஜர் ஆரம்பிச்ச ஆகம விதிகள் இப்பவும் நெறி தவறாமல் நடந்துக்கிட்டிருக்கு. யோக நித்திரையில் இருக்கிற நாராயணனை, 'கௌசல்யா சுப்ரஜா'னு சுப்ரபாதம் பாடி திருப்பள்ளி எழுப்புவாங்க. ஆகாஸ கங்கையிலிருந்து கொண்டு வர்ற தீர்த்தத்துல அபிஷேகம் பண்ணி, சகஸ்ரநாமம், பிரபந்தம் சொல்லி, ஆராதிப்பாங்க... கல்யாண உத்ஸவம், திருப்பாவாடை, விஸ்வரூப தரிசனம், ஊஞ்சல் சேவை, ஏகாந்த சேவைனு பெருமாளுக்கு நித்ய கல்யாண மஹோத்சவம்தான்.''

''டெய்லி இவ்வளவு கூட்டம் இருக்குமா அங்கிள்?''

''தினமும் குறைஞ்சது ஐம்பதாயிரம் பேர் திருமலைக்கு வர்றாங்க. அதிலும் பிரம்மோத்சவம், பவித்ரோத்சவம், தெப்போத்சவம், ஸ்ரீராமநவமி, கோகுலாஷ்டமி, தனுர்மாசம்னா பயங்கர கூட்டம் வந்துடும். சமாளிக்கிறது கஷ்டம்.''

'இதற்கு மேல் நடக்க முடியாது' என்பது போல கமலாம்பாள் இடுப்பைப் பிடித்துக்கொண்டு நின்றுவிட, அனைவரும் அரை வட்டமாய் அமர்ந்துகொண்டார்கள்.

பத்ரி, பாப்கார்ன், மசால்வடையோடு வந்தான். ஜில்லென்று வீசிய குளிருக்கு, மசால் வடையின் சூடு சூப்பர் காம்பினேஷனாக இருந்தது. டிஸ்யூ பேப்பரை எடுத்து நாசுக்காக கைகளைத் துடைத்துக்கொண்டாள் பத்மினி.

''எத்தனையோ சாமிங்க இருக்கறப்போ, இவர் மட்டும் ஏன் இத்தனை ஸ்பெஷல்?'' பத்ரிக்கு சந்தேகம்.

''பெருமான் ஜகன்பிதா. தாயார் ஜகன் மாதா. அவர் பவித்ரானாம் பவித்ரம். இவனோ மங்களானாம் மங்களம். வேங்கட ஸ்ரீனிவாஸன் கலியுக தெய்வம். இவரைத் தரிசனம் செய்தால், சர்வ பாப விமோசனம். திருப்பதிக்குப் போய் வந்தாலே நல்ல திருப்பம் ஏற்படும்னு சொல்





றது அதனாலேதான்."

துவக்கத்தில் இருந்த உற்சாகம், வடிந்து போனதில், ஸ்ரீனிவாஸன் அண்ட்கோவின் நடையே அன்ன நடையானது. திருக்கோயி லின் வெளிப் பிராகாரத்தில் இருந்த தமி ழும், தெலுங்கும் கலந்த கல்வெட்டுகளைப் படிக்க முயன்று, "ஒண்ணும் புரியலை; பழைய தமிழ்" என்றார் பத்ரி.

பிராகாரத்தின் கல் இடுக்குகளில் ஏகப் பட்ட விசிட்டிங் கார்டுகள் செருகப்பட் டிருந்தன. ஒன்றல்ல... இரண்டல்ல... சேகரித் தால் கிலோ கணக்கில் தேறும் போலிருந்தது.

"என்ன தாத்தா இது...? சுவாமிக்கே விஸிட்டிங் கார்டு கொடுக்கறாங்களே!" பத்ரி சிரிக்கவும்

"பாபு" என்ற குரல் கேட்டது.

எதிரே நின்ற ஒருவர், அவனைப் பார்த்து,

"கோவிந்தா செப்பு" என்றார்.



## ஓம் நமோ நாராயணாய!

திருப்பதி திருமலையில், பிரம்மோத்ஸவ வைபவத்தின்போது ஒன்பது நாட்களும் நடக்கும் 'பிரம்மோத்ஸவ வாகன' அலங்கார உற்சவங்களை மிக அற்புதமாக படமாக்கி, வி.சி.டியாக வழங்கி யிருக்கிறார்கள் கோவை ஸ்ரீகிருஷ்ணா ஸ்வீட்ஸ் நிறுவனத்தினர்.

எல். வைத்தியநாதன் இசையமைப்பில், பாடல்களும், பின்னணி இசையும் பக்தி ரஸம் சேர்க்கிறது. டாக்டர் – ஏ.வி. ரமண தீக்ஷிதலு ஆலோசனையின் பேரில், ஜெய லட்சுமி சக்திவேலன் எண்ணத்தில் எஸ்.கே. சுந்தர் தயாரித்திருக்கும் பாலாஜி தரிசனக் காட்சிகளைக் காணக் கண்கோடி வேண்டும்.

பி.சி. ராமகிருஷ்ணனின் அற்புதமான வர்ணனையில் கண்ணார திருப்பதி தரிசனம் செய்த ஆனந்த அனுபவம் கிடைக்கிறது!

"கோவிந்தா!" என்று பத்ரி சொல்லவும், கையிலிருந்த சிவப்பு சாந்துப் புட்டியி லிருந்து ஒரு குச்சியை எடுத்து, பத்ரியின் நெற்றியில் 'பளிச்'சென்று நாமக் கோடு இழுத்து, கழுத்தில் துளசி மாலையைப் போட்டார்.



பத்ரி என்ன ஏது என்று திகைத்து நிற் கும்போதே, "டென் ருபீஸ்" என்றார் மிரட் டலாக.

"யோவ்... உன்னை யாருய்யா கேட்டா...?" பத்ரி துளசி மாலையைக் கழற்றப் போனான்.

"ஒத்து நைனா... நாமத்தை அழிக் கக்கூடாது. போட்ட மாலையைக் கழட் டக்கூடாது. பாபமு... டென் ருபீஸ்..."

மல்லுக்கு நிற்கப் பிடிக்காமல், ரங்க ராஜன் ஐந்து ரூபாய் கொடுத்தனுப்ப, அவர் ஏதோ முணுமுணுத்துக்கொண்டே போனார். மூடு அவுட்டான கோஷ்டியைச் சமாதானப்படுத்தும் வகையில்,

"சரி... சரி... வாங்க.. ரிப்போர்ட்டிங் டைம் வந்தாச்சு... இப்போ போனால் சரியா இருக்கும்" என்றார் ரங்கராஜன்.

தேரடியைத் தாண்டி, வராஹ சுவாமிக் கோயில் நுழைவாயிலுக்கு வந்தனர்.

"பத்ரி... அண்ணா... கோவிந்தா செப்பு!" என்றாள் பத்மினி அவன் நெற்றியில் நாமம் போடும் சைகை செய்தவாறே,

"கோவிந்தா!" என்றான் பத்ரி பக்தி யோடு.

அனைவரும் பயபக்தியோடு 'கோவிந்தா' என்றவாரே தரிசன வாயிலில் நுழைந்தனர்.

— அனுராதா சேகர்




# ஒருநாள் மருத்துவமனை!

ஒவ்வொரு வகுப்பறையின் வாயிலுக்கு மேலேயும் எத்தனையாவது வகுப்பு, என்ன செக்ஷன் என்று எழுதப்பட்டிருக்கும் இடங்களில், நீரழிவு, இரத்த அழுத்தம், இதயநோய் என சிறப்பு மருத்துவ பிரிவுகளின் பெயர்கள்! மாணவர்கள் அமரும் இருக்கைகளில் பொதுமக்கள். ஆசிரியர் அமரும் இருக்கையிலோ மருத்துவர்கள். கரும்பலகையில் நோய் குறித்த விளக்கங்கள். ஏற்கெனவே பள்ளியில் ஓர் அறிவியல் சோதனைக்கூடம் இருந்தாலும், ஈசிஜி, எக்ஸ்ரே, உடனடி இரத்தம், சிறுநீர் சோதிக்கும் கருவி என்று ஒரு நவீன மருத்துவ பரிசோதனைக்கூடம், அந்த அரங்கில் முளைத்திருந்தது. இது என்ன பள்ளிக்கூடமா இல்லை, ஸ்பெஷாலிட்டி மருத்துவமனையா என்று குழம்பிக் கொண்டிருந்த நம்மைத் தெளிவுப்படுத்தினார் ஸ்ரீஜ்வாலா டிரஸ்டின் செயலர், ஏ. சந்திரசேகர்.

"சந்தேகமே வேண்டாம், இது பெரம்பூர் மான்ட்போர்டு மேல்நிலைப்பள்ளிதான். எங்கள் டிரஸ்டின் தலைவர், ஸ்ரீவிஸ்ரீதர் குருஜி அவர்களின் நாற்பத்து இரண்டாவது பிறந்த நாளை முன்னிட்டு இந்த ஒருங்கிணைந்த இலவச மருத்துவமுகாமை நடத்திக் கொண்டிருக்கிறோம். இந்த முகாம் நடத்தும் முன்பு, இது எப்படியிருக்க வேண்டும் என்று கலந்தாலோசித்தபோது ஓர் உண்மை தெரியவந்தது. ஒவ்வொரு மருத்துவப் பிரிவிலும் இன்று நகரில் பிரபலமாக இருக்கும் முன்னணி டாக்டர்களிடம் ஆலோசனைக் கட்டணம் கொடுத்துப் பார்ப்பதற்கே வசதியில்லாத கீழ்த்தட்டு நடுத்தர மக்கள் அதிகமாக இருக்கிறார்கள். அப்படியே பார்க்க நினைத்தாலும் அவர்களின் அப்பாயிண்ட்மெண்ட் உடனடியாகக் கிடைப்பதில்லை. எனவே பிரபலமாக இருக்கும் முன்னணி மருத்துவர்களைக் கொண்டு முழுமையான மருத்துவ முகாம் ஒன்றை நடத்தலாமே என்று யோசித்ததன் விளைவுதான். இன்று இந்தப் பள்ளி ஒருநாள் மருத்துவ மனையாக மாறியிருக்கிறது"

என்றபடி ஒவ்வொரு மருத்துவப் பிரிவாக நம்மை அழைத்துப் போனார்.

பேராசிரியர் டாக்டர் வி.டி. பலராமன் தலைமையில் ஐம்பது மருத்துவர்கள் கலந்து கொண்டு சிகிச்சை, உடனடி சோதனை செய்து மருந்து வழங்கிக் கொண்டிருந்தனர். உதாரணத்திற்கு சிறுநீரக நோய் பிரிவில், சென்னையின் பிரபல மருத்துவர் எம்.எஸ். அமரேசன் சிகிச்சை அளித்துக் கொண்டிருந்தார்.

நீரிழிவு, இரத்த அழுத்தம், கண் சிகிச்சை, காதுமூக்கு தொண்டை, ஆஸ்த்துமா - ஒவ்வாமை, காசநோய், வயிற்றுக் கோளாறுகள், குழந்தைகள் நலம், மாரடைப்பு, மன

## கொடுக்காமலே சிவக்கும் கை!

ஆகஸ்ட் மாதம் ஆரம்பமாகிவிட்டாலே, சென்னையில் டெங்கு ஜுர சீசன் ஆரம்பமாகிவிட்டது என்று அர்த்தம். இந்தக் கொடிய காய்ச்சல் பற்றி குழந்தை நல மருத்துவர் டாக்டர் ஜே. விஸ்வநாத் விளக்குகிறார்.

"'ஏடிஸ் எஜிப்டி' என்ற கொசுவால் பரப்பப்





• எஸ். சந்திரசேகர்



• ஸ்ரீ விவிஸ்ரீதர் குருஜி

நலம் மற்றும் மனச்சிதைவு, பல் மருத்துவம், எச்ஐவி மற்றும் பால்வினை நோய் சோதனை, ஆலோசனை, பொது மருத்துவம் மற்றும் கேள்வி-பதில் அரங்கம் என்று இருபத்தைந்துக்கும் அதிகமான பிரிவுகள்.

"இது ஒருநாள் மருத்துவமுகாம் என்றாலும், தொடர்ந்து சிகிச்சை தேவைப்படுபவர்களை எங்களின் நேரடி கண்காணிப்பில் கொண்டு வந்து விடுவோம். சென்னையின் பல பகுதிகளில் இது போன்ற ஒருங்கிணைந்த மருத்துவ முகாம்களை, நடத்த உத்தேசித்திருக்கிறோம்" என்று சொல்லும் சந்திரசேகர், பெரம்பூர் ஸ்ரீ ஐய்யப்பா டிரஸ்ட் மற்றும் பாரத ஸ்டேட் வங்கியின் பெரம்பூர் கிளை ஆகியோரின் உதவியோடுதான் இதை நடத்திக் கொண்டிருக்கிறோம் என்கிறார்.

அந்த ஒருநாள் மருத்துவமனையிலிருந்து திரும்பியபோது, 'புகைபிடித்தலை நிறுத்துவது எப்படி?' என்ற பிரிவில் ஒரு லேட்டஸ்ட் தகவல் கிடைத்தது. 'ஸ்மோகுயிட் எஸ்ஆர்' (SmoQuiteSR) என்ற புதிய மாத்திரையை உட்கொண்டால் புகைப்பிடிப்பதை நிறுத்தி விட முடியுமாம். ஆனால் மருத்துவரின் ஆலோசனை பெற்றே மாத்திரைகளை உட்கொள்ள வேண்டும்.

— ஸ்ரீசக்கரம்

படங்கள்: ராஜன்



• டாக்டர் ஜே. விஸ்வநாதன்



படும் இந்த நோய், சாதாரண ஜுரம் போல ஆரம்பிக்கும். கொசு கடித்த இடங்களும் உள்ளங்கை போன்ற இடங்களும் செக்கச் செவேல் என்று நிறம் மாறும். தூக்கக் கலக்கமும், மயக்க நிலையும் ஏற்படும். கடுமையான உடம்பு வலி இருக்கும். இவை யனைத்துமே உடம்பில் ரத்தத்தில் உள்ள பிளேட்லெட்ஸ் எண்ணிக்கையை வெகுவாகக் குறைத்துவிடும். ஜுரம் வந்ததுமே டாக்டரை அணுகி முறையான சிகிச்சை அளித்துவிட்டால், பிளேட்லெட்ஸ் எண்ணிக்கை அதிகரித்து, ஜுரம் சரியாகி விடும்.

தவறினால், கொப்புளங்கள் வெடிக்கும். ரத்தத்தில், பிளேட்லெட்ஸ் எண்ணிக்கை குறைவாக இருப்பதனால், ஒழுகும் ரத்தம் நிற்காது. இதனால் நிலைமை மோசமாகி விடும். இந்தத் தருணத்தில், பிளேட்லெட்ஸ்களை மட்டும், உடம்பில் செலுத்த வேண்டிய அவசியம் ஏற்படும். ஒரு யூனிட் பிளேட்லெட்ஸ் விலை சுமார் அறுநூறு ரூபாய். ரத்தத்தில் பிளேட்லெட்ஸ் அளவு தேவையான அளவுக்கு வரும் வரை இந்த காஸ்ட்லி சிகிச்சையைத் தொடர வேண்டியதுதான்.

தக்க சிகிச்சை தரத் தவறினால் மரணமும் நேரலாம்.''

— கௌதம்




நில், கவனி, வெற்றிகொள்!

# கல்கி ஸ்ரீ கிருஷ்ணா ஸ்வீட்ஸ்®

இணைந்து வழங்கும்

## இளைஞர் திருவிழா!

சாதா வாழ்க்கையை, சுவாரசியமாக்குவதே 'கலை'தான்! கற்கால மனிதனை, தற்கால மனிதனாக்கியதில் பெரும்பங்கு கலைக்கு உண்டு. நல்ல ரசனைகள் மேம்பட மேம்பட, மனக் கசடுகள் அகன்று, ஜீவிதம் சிறக்கிறது. ''கலையே, என் வாழ்க்கையின் நிலை மாற்றினாய்!'' என்று பேச வருகிறார்கள் முக்கனி கலைஞர்கள்.

| | | |
|---|---|---|
| தலைப்பு | : | **கலை** |
| நாள் | : | 30.9.2001 (ஞாயிறு) |
| நேரம் | : | மாலை 6 மணி |
| இடம் | : | **மைலாப்பூர் ஃபைன் ஆர்ட்ஸ் அரங்கம், ஆலிவர் சாலை, சென்னை-4** |
| தலைமையுரை | : | **மெல்லிசை மன்னர் எம்.எஸ். விஸ்வநாதன்** |
| சிறப்புரை | : | **ஏ. நடராசன் (சென்னை தொலைக்காட்சி முன்னாள் இயக்குனர்)** |
| குயிலுரை | : | **சுதா ரகுநாதன்** |

அனைவரும் வருக, வருக!

அனுமதி இலவசம்!



# நம்ப முடியவில்லை!”

ஆஸ்திரேலியா அடிலெய்டு நகரில் ஸ்கூலில் படித்துக் கொண்டிருந்த அந்த பதினாறு வயது மாணவர் ஸ்கூலுக்கு மட்டம் போட்டுவிட்டு டென்னிஸ் மட்டையோடு அலைந்து கொண்டிருந்தார். ஆனால் ஹோம் ஒர்க்கையும், அசைன்மென்டையும் மட்டும் தவறாமல் செய்து வந்த அவரது போக்கு சில ஆசிரியர்களுக்கு எரிச்சல் தந்தாலும் இப்போது 'அவன் கட் அடிச்சது சரிதான்' என்கின்றனர். ஆமாம், அந்த வாலிபர்தான் யு.எஸ்.ஓபனை வென்றுள்ள லேடன் ஹெவிட்.

பட்டத்தோடு நியூயார்க்கிலிருந்து அடிலெய்டு வந்த ஹெவிட்டுக்கு ஏக வரவேற்பு! 1973ம் ஆண்டு ஆஸி. வீரர் பாட் ராஃபர் யு.எஸ். ஓபனை வென்ற பிறகு இப்போதுதான் ஆஸி. வீரர் ஒருவர் அதை மீண்டும் வென்றிருக்கிறார் என்றால் சும்மாவா?

எல்லோரும் ஹெவிட்டை வாழ்த்தித் தள்ள, ஆஸி.க்கு ஊர் சுற்ற வந்த அமெரிக்க முன்னாள் அதிபர் கிளிண்டனும் தம் பங்குக்குப் புகழ்ந்து தள்ளிவிட்டார் இந்த இருபது வயது இளைஞரை!

**ஹெவிட் என்ன சொல்கிறார்?**

“பதின்மூன்று கிராண்ட் ஸ்லாம் பட்டங்களை வென்ற சாம்ப்ராஸை வெல்வேன் என்று நினைத்துக்கூட பார்க்கவில்லை. மனத்துக்குள் அவ்வப்போது நடுக்கம் இருந்து கொண்டிருந்தது. ஆனால் சாம்ப்ராஸின் தவறுகள் எனக்குச் சாதகமாயின. நம்ப முடியாததாக இருக்கிறது” என்கிறார் ஹெவிட்.

நம்ப முடியாததுதான் அடிக்கடி நடக்கிறது போலிருக்கிறது. இதற்குமுன் விம்பிள்டன் வென்ற இவானிசெவிக்கும் நம்ப முடியாதது என்றுதான் சொன்னார். இப்போது இவரும்!

போட்டியில் தோற்ற சாம்ப்ராஸ் யு.எஸ்.ஓபனில் கடந்த ஆண்டும் இறுதிவரை வந்து கோட்டைவிட்டார். இந்த வருடமும் பரிதாபத்துக்குள்ளானார் மனிதர்!

“இன்னும் என்னால் பட்டம் வெல்ல முடியும். அதுபற்றிச் சந்தேகமில்லை. வயதாகிவிட்டதால் தோற்றுப் போனேன் என்கிறார்கள். முப்பது வயது என்பது சாதிக்கக் கூடிய வயதுதான்” என்று சொல்லும் சாம்ப்ராஸ், “ஹெவிட் ஓர் அற்புதமான ஆட்டக்காரர். அவரிடம் தோற்றது மகிழ்ச்சிதான். அவரது சுறுசுறுப்பும் வேகமும் என்னை நிலைகுலைய வைக்கின்றன. இன்னும் பத்து வருடம் டென்னிஸ் உலகில் கலக்குவார்” என உச்சந்தலையில் தூக்கி வைத்து ஆடுகிறார் ஹெவிட்டை. நல்ல ஆட்டம்தான்!

- ஏக்ஜி

# நடக்குமென்பார் நடக்கும்

**மேஷம் :** குருபார்வை உங்க மேல ரொம்ப பிரியமா இருக்கறதால உங்க முகம் வசீகரமா இருக்கும். செயல் திறமை, அறிவாற்றல் எல்லாம் உயரும். எதிர்பார்த்திட்டிருந்த நல்ல தகவல் வந்து சேரப் போகுது. கலைத் துறையை சேர்ந்தவங்களுக்கு வெற்றி வாய்ப்பு ஜாஸ்தி. சின்ன சின்ன பிரச்னைகள் வரலாம். பொறுமை காக்கவும். பார்ட்டி, பங்ஷன், டூர்னு போக வாய்ப்பிருக்கு. அரசியல்வாதி களுக்கு மதிப்பு செல்வாக்கு மலை மாதிரி உயரப் போகுது. புதிய பதவி தேடி வரும். கனிவா பேசறது நல்லது.

**ரிஷபம் :** குடும்பத்தில் மகிழ்ச்சிக்கும், குதூகலத்துக்கும் பஞ்சமிருக்காது. பணம் பலவழிகள்ல பர்ஸை நிரப்பும். சிலருக்குத் திடீர் அதிர்ஷ்டத்துக்கான சான்ஸ் இருக்கு. கொடுக்கல் வாங்கல்ல நல்ல ஆதாயம் உண்டு. வீட்ல 'கர்புர்' நிகழும்ங்கறதால அடக்கி வாசிக்கறது நல்லது. எட்டில் செவ்வாய் கேதுவுடன் கூட்டணி அமைத்து உலவுவதால் சோதனை காலம். ரொம்ப கவனமா செயல்படுங்க. செலவுகள் அதிக மாகும். வீண் வாக்குவாதம், சண்டை சச்சரவுகளைத் தவிர்க்கறது நல்லது.

**மிதுனம் :** குடும்பத்துல மகிழ்ச்சி, குதூ கலம் நிரம்பி வழியும். விருந்து கேளிக்கை உல்லாசங்கள்ல ஈடுபாடு அதிகரிக்கும். பெண்களுக்கு உற்சாக மான சூழ்நிலை நிலவும். புதுசா ஆடை, நகைகள் வாங்கப் போறீங்க. பத்திரிகை எழுத்து, ஓவியம் போன்ற துறைகளைச் சேர்ந்தவங்க ஆகா ஓஹோன்னு புகழப் பட போறாங்க. வெளியூர் பயணம் இப்ப வேண்டாம். வெளிநாட்டிலிருந்து நல்ல தகவல் வந்து சேரும். ரசாயனம், விஞ்ஞானம் போன்ற துறைகளைச் சேர்ந்தவங்களுக்கு இது சூப்பர் வாரம்.

**கடகம் :** ஒரே படத்துல ஹிர்த்திக் ரோஷன் ஆஹா ஓஹோன்னு புகழப் பட்டது மாதிரி இந்த ஒரே வாரத்துல உங்கள் புகழ், மதிப்பு, அந்தஸ்தெல்லாம் உயரப் போகுது. அரசு விவகாரங்கள்ல நல்ல பலனை எதிர்பார்க்கலாம். ரியல் எஸ்டேட் பிஸினஸ் ஆதாயம் கொண்டு வரும். அரசியல்வாதிகளுக்கும் ஆதாயம் இருக்கு. கள்ளிக் காட்டு இதிகாசத்தால வைரமுத்து அள்ளிக்கொண்ட பாராட்டு மாதிரி சினிமா, பத்திரிகை, எழுத்து துறைகளைச் சேர்ந்தவங் களுக்கு, பாராட்டு கிடைக்கலாம். திடீர் திடீர்னு எதிர்பாராத செலவுகள் வந்து தொந்தரவு பண்ணும். உஷார்!

**சிம்மம் :** இந்த வாரம் முக்கிய பதவி விருதெல்லாம் தேடி வரப்போகுது. நீங்க நினைக்கறதெல்லாம் நடக்கப் போகுது. மத்தவங்க பாராட்டைப் பெற போறீங்க. குடும்பத்துல சுபகாரியம் நடக்க சந்தர்ப் பம் வரும். சிலருக்குத் திடீர் அதிர்ஷ்ட வாய்ப்புகள் வரும். அரசியல்வாதி களுக்கு பாராட்டு மழை பொழியப் போகுது. ஆராய்ச்சியாளர்கள் புதிய கண்டுபிடிப்புகள் மூலம் புகழ் பெறு வாங்க.

**கன்னி :** இதுவரை நிறைவேறுமா, நிறை வேறாதுங்கற குழப்பத்துல இருந்த திட்டமெல்லாம் இப்ப 'கபக்'குனு நிறை வேறப் போகுது. வெளியூர் பயணத்தால நல்ல நிகழ்ச்சி ஒன்று நடக்கப் போகுது. பெண்களுக்கு உற்சாகமானச் சூழ்நிலை நிலவும். மதிப்பு, செல்வாக்கெல்லாம் எக்கச்சக்கமாக உயரப் போகுது. அவ சரம், பதற்றத்தை விட்டுட்டு நிதானத் தைக் கடைபிடிங்க. என்ஜீனியர்கள், ரியல் எஸ்டேட் துறைகளைச் சேர்ந்த வங்களுக்குப் பிரச்னைகள் கூடும். பக்குவமா சமாளிக்கறது நல்லது.



**விருச்சிக ராசிக்காரரான டாக்டருக்கு புகழ், பாராட்டு சேரும் நல்ல நேரம்!**

• மாத்ருபூதம்

# செப்டெம்பர் 19 முதல் 25 வரை

## அக்னிசர்மா பக்கம்

**துலாம்** : உங்களோட திறமை அதிகரிக்கும். ஜாக்பாட் அடிச்சமாதிரியான அதிர்ஷ்ட வாய்ப்புகள் தேடி வரும். தாராளமா புரளப் போகுது. எதிர்ப்புகள் மறையும். எதிரிகள் 'ஆளை விடுப்பா' என்று ஓடி ஒளிவாங்க. விளையாட்டு, போட்டி பந்தயங்கள்ல வெற்றி குவியும். பக்திமார்க்கத்துக்கு மனசு இழுக்கும். மேலதிகாரிகள் பாராட்டு வாங்க. சிலருக்கு டிரான்ஸ்பர், சம்பள உயர்வு கிடைக்கலாம். வெளி நாடு ஆசையில் காத்திருந்தவங்களுக்கு சந்தர்ப்பம் வரும். அம்மா நலன்ல கவனம் அவசியம்.

**விருச்சிகம்** : எந்த காரியத்தையும் தலைகீழாக நின்னாவது செய்து முடிச்சிடுவீங்க. இதுக்காகவே உங்களுக்குப் புகழ், பாராட்டு கூடும். அரசியல்வாதிகள் மதிப்பு, அந்தஸ்து உயரும். வியாபாரிகள் புதிய வியாபாரத்தில் ஈடுபட இது நல்ல நேரம். ஆசிரியர்கள் உத்தியோகஸ்தர்கள் சட்ட வல்லுனர்களுக்கெல்லாம் குறுக்கீடுகள் முளைக்கும். எதிர்பாராத செலவுகள் தொந்தரவு பண்ணும். எதிலயும் பதற்றம், வேகம் வேண்டாம். விவேகம் அவசியம்.

**தனுசு** : பத்தும் செய்யற பணம் உங்களிடம் பரபரப்பா அலையும். எந்த தொழில் செய்தாலும் அதில் வளர்ச்சி நிச்சயம். வேலை இல்லாம ஊர் சுத்திட்டிருந்தவங்களுக்கு வாய்ப்பு வரப் போகுது. சிலருக்குப் பதவி உயர்வு கிடைக்க வாய்ப்பிருக்கு. அரசியல்வாதிகள் உற்சாகமான சூழ்நிலையை அடைவாங்க. கலைத்துறையில் உள்ளவர்கள் பெயர் புகழ் பெறுவாங்க. தான தரும பணிகளில் ஈடுபாடு அதிகரிக்கும். எதிலயும் அவசரம், பதற்றம் கூடாது. நிதானமா சிந்தித்து செயல்படுங்க. அலட்சிய போக்கு வேண்டாம். பெரியவங்க சொல் கேட்டா பிரச்னைகள்ல இருந்து தப்பிக்கலாம்.

**மகரம்** : இந்த வாரம் 'சோதனைமேல் சோதனை'னு பாடத் தோன்றும். தெய்வப் பிரார்த்தனை, கிரஹசாந்தி ஹோமம் போன்றவற்றில் நம்பிக்கையோடு ஈடுபட்டால் சங்கடங்களைத் தவிர்க்கலாம். பொருளாதார நிலை டென்ஷன் ஆக்கும். கொடுக்கல் வாங்கல்ல கவனம் வேணும். மனசுல சின்ன குழப்பம் இருந்துட்டே இருக்கும். செலவு எகிறும். இதனால் பிரச்னைகள் வரலாம். உடல் நலன்ல கவனம் தேவை. வழக்கு விவகாரங்கள் தொல்லை கொடுக்கும். பேச்சுல இனிமை இருக்கட்டும்.

**கும்பம்** : உங்களோட துணிச்சலும், தன்னம்பிக்கையும் அதிகரிக்கப் போகுது. பொறியியல், காவல், இராணுவம் போன்ற துறைகளைச் சேர்ந்தவங்களுக்கு வெற்றி வாய்ப்பு அதிகரிக்கும். மனசுல ஓரமா ஒதுக்கி வச்சிருந்த முக்கியமான திட்டங்கள் எண்ணங்கள் நிறைவேறும். பெண்களுக்கு இது சோதனை காலம். வாயை அடக்குறது நல்லது. விளையாட்டு, கேளிக்கை உல்லாசம் இவற்றைக் குறைக்கிறது நல்லது. வீண் அலைச்சலைத் தவிர்த்துடுங்க. குரு பார்வை இருக்கறதால எதையும் சமாளிப்பீங்க.

**மீனம்** : அரசியல்வாதிகளுக்கு இது மதிப்புமிக்க வாரம். புகழ், பாராட்டுக்குப் பஞ்சமிருக்காது. துணிவும் தன்னம்பிக்கையும் அதிகமாகும். எதிர்ப்புகள் குறையும். இயந்திரப் பணியாளர்கள் இன்ஜினியர்களுக்கெல்லாம் மதிப்பு உயரும். போட்டி, பந்தயங்கள்ல வெற்றி பெற சந்தர்ப்பம் இருக்கு. பண நடமாட்டம் திருப்தியா இருக்கும். குடும்பத்துல சுபகாரியம் நடக்க சந்தர்ப்பம் வரும். அலைச்சல் அதிகமாகும். புதிய பொருள் சேர்க்கை உண்டாகும். ஜமாய்ங்க!

**தெ**ன்வடலாக ஓடும் எட்டையபுர ரோட்டின் மேல்புறம் இருக்கிறது எங்கள் காலனி. நான் குடிபோன போது மொத்த வீடுகள் முப்பது. ஒரு வீட்டில் முஸ்லிம். அவர் பெயர் யாருக்கும் தெரியாது. 'பாய் வீடு' என சின்ன பையனைக் கேட்டாலும் கூட காட்டி விடுவான். கிறிஸ்தவர்கள் பத்து வீடு. ரோமன் கத்தோலிகர், தென்னிந்திய திருச்சபை, தேவசபை, பெந்தே கொஸ்தே என பல பிரிவுகள். மீதி வீடுகளில் இந்துக்கள்.

நகரை விட்டுத் தள்ளியிருப்பதால் அடுத்தவர்களின் உதவி, அவசரத்துக்குத் தேவை என்பதை உணர்ந்து சாதிமத வேற்றுமைகளை மறந்து அனைவரும் அன்யோன்யமாக வாழ்ந்து வந்தோம்.

'வந்தோம்' என்று சொல்கிறேன் எனப் பார்க்கிறீர்களா? அதில்தான் ஐயா கதையே இருக்கிறது!

**வ**ங்கியில் வேலை செய்யும் சுந்தரம் பதவி உயர்வு பெற்று குடும்பத்துடன் பெங்களூருக்குப் போக, அவர் வீட்டைக் காலி செய்து, வெள்ளையடித்து, புரோக்கர் இல்லாமலே வாடகைக்கு வேறு ஆள் பார்த்து, அட்வான்ஸ் பணத்தை அவருக்கு அனுப்பி... எல்லாமே நாங்கள்தான்.

புதிதாகக் குடிவந்த அம்புரோஸ் டெர்மலில் வேலை பார்ப்பது எங்களுக்குத் தெரிந்த செய்தி. 'இயேசு இருக்கிறார்' என்ற சபை வைத்து நடத்துவது நாங்கள் அறியாத செய்தி.

வெகு சப்தமாக ஸ்பீக்கர் கட்டி பிரேயர் செய்தார்கள். அவ்வப்போது முழு இரவு ஜெபம்.

"இத்தனை நாளு நாம இங்கன இருக்கோமே, நமக்குன்னு ஒரு கோயில் கட்டினோமா? பக்கத்துக் காலனிக்குத்தான் போறோம்!

– "நாமளும் ஒரு கோயிலைக் கட்டணும்" கணபதி ஆரம்பித்தான்.

காலனி மக்களின் ஒற்றுமையில் உளியைச் செருகிய புண்ணியவான்! அடுத்து நடந்த நிகழ்ச்சிகள் சம்மட்டியாய் மேலே விழுந்தன.

"பிள்ளையார் ஒண்ணு வெச்சிரலாம்."

பிள்ளையாரை எங்கு வைப்பது? வீதியோரம் வைக்கலாம். ஆனால் யார் வீட்டை ஒட்டி வைப்பது?

எலியின் மீது ஏறி இஷ்டம் போல சுற்றும் பிள்ளையாருக்கு இருப்பிடமே பெரும் பிரச்னையானது.

"**ஏ**வம்ல என் பிளாட்டுக்கு நேரே பிள்ளையாரை வெச்சவன்?"

"டேவிட்சனின் கத்தலில் காலனி அதிர்ந்தது.

"ஒழுங்கா எடுத்துருங்க. இல்ல ஒடச்சிருவேன்" வீதியோரம் இருந்த சின்னத் திண்டின் மீது சிறு பிள்ளையார் உட்கார்ந்திருந்தார். ஒரு முழக் கதம்பத்தில் மாலை. இடுப்பில் சின்ன கதர்த் துண்டு.

ஆத்திரத்துடன் ஓங்கிய டேவிட்சனின் கையை கணபதி தடுத்தான்.

"ரோட்ல பொது எடத்துல தாம்ல இருக்கு. பொறவு எதுக்குல குதிக்க?"

பொது எடம்னா என் வீட்டு வாசல்ல ஏன் வெச்சீங்க? உங்க ஆளுக வீட்டு வாசல்ல வெச்சிக்கிறதுதானே?"

வைத்தது சரி என்றும், தப்பு என்றும் ஆளாளுக்கு விவாதம். 'சரி, போகட்டும்' என்றால் டேவிட்சன் விடுவதாயில்லை. அவன் பின்னால் அவரின் மதத்து குடும்பங்களும் அணி வகுத்து...

விஷயம் கேள்விப்பட்டதும் காலனி

## போட்டிக் கதை - 3

நலச் சங்கத் தலைவர் கந்தன் 'உடம்பு சொகமில்லெ' என்று படுத்துக்கொண்டார். காரியதரிசியான சேர்மராஜ், மகளைக் கல்லூரியில் கொண்டு விடப் போய் விட்டார்.

"நாளைக்கு இந்தச் செல இங்கன இருந்துச்சு, நடக்கறது வேற" உறுமிவிட்டு டேவிட்சன் வீட்டுக்குள் சென்றான்.

மறுநாள், சுப்புவின் வீட்டுக் காம்பவுண்டை ஒட்டி, வீதியோரம் 'வரத விநாயகர்' என்ற பெயரில் ஒரு டஜன் செங்



கல்லை வைத்துக் கட்டிய பீடத்தின் மேல் அமர்ந்து பிள்ளையார் அருள்பாலித்துக் கொண்டிருந்தார்.

அன்று முதல் காலையும் மாலையும் சுப்பு, பூஜை செய்தான். யானைப் பிள்ளையாருக்கு அரிசிப் பொரி நிவேதனம். மாலையில் பெண்கள் அங்கு கூடி குடும்பக் கதையும், ஊர்க்கதையும் பேசிய நேரம் போக, மீதி நேரத்தில் 'பிள்ளையார் பிள்ளையார் பெருமை வாய்ந்த பிள்ளையார்' பாடினார்கள். குழந்தைகளும் சிறிது நேரம் வீட்டுப் பாடத்தை மறந்து விளையாடினார்கள்.

சிவில் காண்ட்ராக்டரான வேலுமணி வேலை செய்த இடத்தில் மிச்சமான கல், மணலை வைத்து பிள்ளையாருக்கு, பத்தடி தள்ளி ஆறுக்கு ஆறு சதுரத்தில் ஒரு சின்னக் கோவில் கட்டிக் கொடுத்தார். பொன்ரவி, ராமையா முதலானோர் நிதி திரட்டி, சுற்றுச் சுவர் பூசி வர்ணமடித்து கதவு செய்து மாட்டினார்கள். நானும் என் பங்காக ஒரு தொகை கொடுத்தேன் - அதில் மூஞ்சூர் வாகனம் வாங்கினார்கள்.

ஒரு நல்ல நாளில் கோவிலுக்குள் புகுந்தார் பிள்ளையார்.

"இதுநாள் வரை இஷ்டம் போல நடந்துக்கிட்டீங்க. இப்ப பிள்ளையாருக்கு சக்தி கொடுத்து பிரதிஷ்டை ஆயாச்சு. சாஸ்

**கே. சுதர்ஷன்**

திரப்படி நடக்கணும்."

போகிற போக்கில் குண்டை வீசி விட்டுப் போனார் குருக்கள்.

"முதல்ல பூசை செய்ய ஒரு அய்யரைப் போடணும்" கணபதி ஆரம்பித்தான்.

"இம்புட்டு தொலைக்கு, ஒத்தக் கோயிலுக்கு, அபிஷேகம் அர்ச்சனைன்னு சைடு வருமானம் வராத கோவிலுக்கு எவன் வருவான்?"

என் கேள்வி நியாயமானதுதானே?

அடுத்த காலனியில இருக்கற பால விநாயகர் கோயில்ல பூசை வெக்கற ஐயரைக் கூப்புடுவோம். பாவம். கஷ்டப்பட்ட ஆளு" சுப்பு ஆளை அடையாளம் காட்ட,

"மாசம் ஐந்நூறு ரூபாய் சம்பளமா குடுத்திடுங்கோ. பூஜை சாமான் எல்லாம் வாங்கிக் கொடுக்கணும். கார்த்தால அபிஷேகம் பண்ணி பூஜை செய்யறேன். சாயரட்சைக்கு வந்து விளக்குப் போட்டு பூஜை பண்றேன். அர்ச்சனை பண்றவாள்ட்ட தனியா தட்சணை வாங்கிப்பேன். அத நீங்க கணக்குல சேர்க்கப்படாது."

அய்யரின் விலைப் புள்ளியில் வாயடைத்துப் போனது காலனி. வீட்டுக்கு ஐம்பது ரூபாய் பிரித்தால் ஆயிரம் ரூபாய் வரும். ஐயருக்கு ஐந்நூறு. பாக்கி ஐந்நூறு மற்ற செலவுக்கு. திட்டம் அருமையானதுதான். ஆனால் வாய் நீண்ட அளவுக்குக் கை நீளவில்லை. பணம் என்றதும் பக்தி, பதுங்கிக் கொண்டது. "அம்பதெல்லாம் அதிகம். ஏதோ ஏண்டதத் தாரோம். வெச்சி நடத்துங்க."



"ஊர்வலத்துல கலந்துக்க தலா நூறு ரூபா குடுத்தும் யாரும் வரலியே... ஏன்?"

"ரெண்டு லட்ச ரூபாய்க்கு 'கலாட்டா இன்சூரன்ஸ் பாலிசி' கேட்கறாங்க தலைவரே!"

– அம்பை தேவா

தங்கள் முடிவைச் சொல்லிவிட்டுக் கலைந்தனர்.

வரவை விட செலவு அதிகமானது. அய்யருக்கு இரண்டு மாத சம்பள பாக்கி. பின்னையாருக்கு அர்ச்சனை பண்ணி விட்டு பலச்ருதியாக கோவில் பொறுப்பாளரான சுப்புவை நாலு வார்த்தை தினமும் கேட்டார் அய்யர்.

பிள்ளையார் சதுர்த்தி வந்தது.

வேலுமணி முன் நின்று நோட்டீஸ் அடித்து வசூல் செய்து பெரிய அளவில் சிறப்பாக நடத்தினான்.

வேலுமணி பொறுப்பெடுத்ததால் கணபதி அன் கோ, கோவில் பக்கம் வரவில்லை.

"வீட்ல சோலியிருக்குல்லா?"

தினப்படி பூசை செய்யும் தன்னை விட்டு விட்டு வேறு ஆளை வைத்து கணபதி ஹோமம் செய்ததால் 'இனிமேல் நான் வரல' என கோபித்துக் கொண்டு போய் விட்டார் அய்யர்.

சதுர்த்திக்கு மறுநாள் சங்கடம் ஆரம்பமானது.

"பேசாம நம்ம எசக்கி அண்ணாச்சிய பூசை பண்ணச் சொல்வோம். சுத்த பத்தமா இருக்கிறவரு."

"அதெப்படி? அய்யரத்தான் கூப்புடணும். அவங்கதான் அதுக்கு உள்ள மந்திரத்தைச் சொல்லிச் செய்வாக."

சுப்பு பிடிவாதமாகச் சொல்ல,

"என்னல பெரிய மந்திரம்? 'கைத் தலை நிறைகனின்னு' சொன்னா பிள்ளையாருக்குக் கேக்காதோ? அவங்கள பாருங்கல. எந்த நாட்டுக்குப் போனாலும் அந்த நாட்டு பாஷையில் பிரேயர் வெக்கான், பைபிளை மொழிபெயர்த்து எல்லாரையும் படிக்கச் சொல்றான். அதான் அவன் வொலகம் பூரா பரவிக் கெடக்கான். நீங்க என்னடான்னா... சாமிக்கு இவன் ஆக மாட்டான், இந்த பாஷை ஆகாதுன்னு கெணத்து தவளையா கெடக்கீங்க" வாலிப பயல்களுக்கு வகுப்பெடுத்துப் பொறுமை நிறைந்த நானே மனம் பொறுக்காமல் கத்தி விட்டேன்.

"அத விடுங்க சார்! வீங்கிக்கிட்டுப் போன அய்யர் இன்னமும் கூடல்ல துட்டு கேப்பார். இங்க ஏது பணம்?"

பலவேசம் பேச்சை திசை திருப்பினான்.

"ம்! பணம் இல்லாவிட்டால் பகவானும் பிணம்தானோ?"

''எசக்கி அண்ணாச்சிய செய்யச் சொல்வோம். நாள் கெழமைன்னா என்னத் தயாவது வீட்ல செஞ்சி கொண்டாந்து கும்புடுவோம்.''

வேலுமணி பேசப் பேச விஸ்வரூப மெடுத்தான் சுப்பு.

''கண்டவுங்க செய்யறதையும் கட வுளுக்கு நைவேத்தியம் பண்ண முடியாது.''

"ஏன்? நாங்க பொங்க வச்சா பக வானுக்கு ஏக்காதோ? நாங்க வீட்ல இதே பிள்ளையாரத்தான கும்புடுறோம்? வீட்ல ஏத்துக்கிறவரு இங்க மட்டும் எப்படி ஏக்காமப் போவாரு?"

இலை பழுப்பதைப் போல விஷ யம் நிறம் மாற,

"சரி, சரி. வேற அய்யரப் பாக்கற வரைக்கும் கோயில மூடி வெச்சிரலாம்'' ராமையா பிரச்னைக்கு முற்றுப்புள்ளி வைக்க முயற்சி செய்தான்.

இதென்ன மடத்தனமான மமதைமிக்க பேச்சு? மனிதர்களிலும் சாதி சாமியிலும் சாதியா?

"ஐயர் செஞ்சாத்தான் பிள்ளையாருக்கு ஆகுமோ? இந்தக் கோவில் கட்ட நான் நாயா அலஞ்சி துட்டு பிரிச்சிரிக்கேன். நான் நாளைக்குப் பூசை பண்றேன். பிள் ளையாரு ஒடஞ்சி போறாரா இல்லை யான்னு பாப்பம்."

ராமையா உக்கிரமானான்.

"சரி, விடுங்க. லே, சுப்பு. சும்மா இருல. வேண்டாததப் பேசி வெனய வெலைக்கு வாங்காத."

நான் இடையில் புகுந்து சமாதானம் செய்தேன்.

ஆனாலும் மறுநாள் என்ன ஆகுமோ என்ற அச்சம் காலனி மக்கள் மனத்தில் பரவிக் கிடந்தது.

நடந்தது வேறுவிதமாக இருந்தது.

எட்டையபுர ரோட்டில் காலனி பேருந்து நிறுத்தத்துக்கு அருகில் ஒரு பிள்ளையார் உட்கார்ந்திருந்தார். சுட்ட மண்ணில் செய்த நீலவண்ணப் பிள்ளை யார். தசரா கொலுவில் சிவன் கோவிலில் வாங்கிய பிள்ளையார். 'அருள்மிகு திரா விடப் பிள்ளையார்' என்ற பெயரில்.

''ஏற்கெனவே ஒரு பிள்ளையாரை வெச்சி படுற கஷ்டம் காணாதா? இப்ப புதுசா இது வேறயா?"




"உங்க மனைவி என்ன டாக்டரா? கமலா – பார்வை நேரம் 1.00 முதல் 2.00'னு போர்டு தொங்குது?"
"ம்ஹூம்... மற்ற நேரமெல்லாம் மெகா சீரியல் பார்ப்பா!"
– கள்ளக்குறிச்சி வே. ஆறுமுகம்

ராமையாவை மெல்ல சமாதானம் செய்ய முயன்றேன்.

''எங்க சாமிக்கு நாங்களே பூசை செய்வோம். எவனையும் கூப்பிட மாட்டோம்.''

– ராமையா பேசப் பேச என்னுள் ஒளி பிடித்தது.

"காசி என்ன ரெண்டு எழுத்துதான; காண எத்தன நாள் ஆகும்ன மாதிரி கோயில்தானன்னு சுளுவா நெனச்சானுக போலிருக்கு. அதுல எவ்வளவு விஷயம் இருக்குன்னு இந்த மூதேவிங்களுக்கு எப்பிடித் தெரியும்?"

– சுப்பு பொருமினான்.

"இங்க இத்தனை வீடுக இருந்தே இந்தக் கோயில சமாளிக்க முடியல. ஆனில்லா ஊர்ல அசுவமேதயாகம் செஞ்ச மாதிரி ரோட்ல, வெம்பரப்புல கொண்டு பிள்ளை யார வெச்சிருக்கானுவளே இது வெளங் கவா?"

முத்துமாலை முத்து உதிர்த்தான்.

கடவுள் திருஉள்ளம் வேறு மாதிரி இருந்தது. அன்று இரவு தனக்கு முன்னால் சென்று கொண்டிருந்த லாரியை முந்த கோவில்பட்டி செல்லும் வண்டி ஓவர்



"லஞ்ச விஷயத்திலே அந்த ஆளு ரொம்ப மோசம்..."

"ஏன் அப்படிச் சொல்றீங்க?"

"அவருக்கு கொடுத்த மெமோவுக்கு விளக்கம் தர்றதுக்கே மேனேஜர்ட்ட லஞ்சம் வாங்கிட்டார்...!"

— கே. சுதர்ஷன்

டேக் செய்கையில் பீடத்தில் இடித்து, பீடமும் பிள்ளையாரும் நொறுங்கிப் போயினர்.

ராமையாவும் வேலுமணியும் அதைக் கண்டுகொள்ளவில்லை. "இவனுகளுக்குக் கோயில வச்சி நடத்தவா தெரியும்? அதான் புள்ளையாரே காணாமப் போயிட்டார்."
– சுப்பு தனக்குள் சொல்லிக் கொண்டான்.

எல்லோரும் கேட்டுக் கொண்டதால் ஐயர் மீண்டும் வந்தார் - அதிகப்படியாக மாதம் கிடைக்கும் ஐந்நூறு ரூபாயை விட மனமில்லாமல். வழக்கம் போல பூசைகள் நடைபெற்றன.

ஒருநாள் இரவு கோவில் பல்பு பியூசாகிப் போக, வேகமாக தன் வீட்டிலிருந்து பல்பை எடுத்து வந்து உள்ளே போய் மாட்டினான் பொன்ரவி.

"பல்ப அய்யரு கைல குடுத்துருக்கணும். நீ ஏன் உள்ள போன?"

சுப்புவின் கேள்வியால் ஆத்திரமடைந்த பொன்ரவி, மனைவியை அழைத்துக் கொண்டு வீட்டிற்குப் போய் விட்டான்.

இந்தக் காட்டம், தண்ணீர்ப் பிடிப்பதில் வெளிவர குடும்பச் சண்டை மூண்டது.

ஒருவர் விலகினாலும் அவரது சாதியினர் கூடவே ஒதுங்கினர். இருபது வீடுகளில் ஆறு வீடுகள்தான் தேறின. கட்டாயத் தேர்தல் வசூல் போல கடுப்புடன் பணத்தைக் கொடுத்து விட்டுச் சிலர் கோவில் பக்கமே வருவதில்லை.

வேலுமணி 'சாமியாவது பூதமாவது' என சொல்லித் திரிய, பொன்ரவி மனவளக் கலை மன்றத்தில் இணைய, ராமையா பிரம்மகுமாரிகள் சமாஜத்தில் நுழைய...

தாயாய், பிள்ளையாய்ப் பழகியவர்கள் கோவில் வந்த பின்பு யாரோ என முகத்தைத் திருப்பிக் கொண்டு போவதைப் பார்த்தபடி நடக்கும் அனைத்துக் கூத்துக்கும் மௌன சாட்சியாக உட்கார்ந்து இருந்தார் பிள்ளையார். ○



நண்பர்களுடன் பாரதியார் ஒரு கிராமத்தில் நடந்த தெருக்கூத்தைப் பார்க்கச்சென்றார்.

"வெத்திலை வச்சான் பாக்கு வச்சான்
புகையிலை வச்சான், ஒண்ணு வைக்க
மறந்திட்டான், சுண்ணாம்பில்லே...
சுண்ணாம்பில்லே..."

என்று கூத்தில் ஒருவன் பாடிக் கொண்டிருந்ததைக் கேட்ட பாரதியார் நம்ம நாடும் இந்த நிலையில்தான் இன்று இருக்கிறது என்று கூறி அதை விளக்க கீழ்க்கண்டவாறு பாடினார்.

"நீரு வச்சான் நிலமும் வச்சான்
நிகரில்லாத பலமும் வச்சான்
ஒண்ணு வைக்க மறந்திட்டான்
புத்தியில்லே... புத்தியில்லே!"

நிலை ஒன்றும் மாறிவிடவில்லே. இன்றும் அப்படியேதான்!

– சூளைமேடு வேதாந்தம்



# "ஊரையே தரலாம்!"

"தண்ணியில்லாத சென்னைக்குத் தாகத்தோடு வந்தவர்களே!" வைரமுத்துவின் 'கள்ளி காட்டு இதிகாசம்' நூல் வெளியீட்டு விழா நிகழ்ச்சியைத் தொகுத்தளித்த பொன்மணி இவ்வாறு ஆரம்பிக்கவும் காதைப் பிளந்தது கைதட்டல்! வெற்றி தமிழர் பேரவையின் உறுப்பினர்கள் தஞ்சை, வடுகபட்டி உள்ளிட்ட ஊர்களிலிருந்து பஸ், வேன்களில் வந்து அரங்கத்தைக் கொத்தாய் ஆக்கிரமித்துக் கொள்ள, அழைப்பிதழோடு வந்த பலர் ஸ்டாண்டிங்!

கம்பம் செல்வேந்திரன், பேரா. கு. ஞானசம்பந்தனுக்குப் பிறகு தமது ஏற்ற இறக்க வசனம் மற்றும் நடிப்புடன் உணர்ச்சி வசப் பட்டுப் பேசினார் பாரதிராஜா:

"நான் புழுதியை மட்டுமே படித்தவன். அவன் (வைரமுத்து) புத்தகம் படித்தவன். நீ எப்படி மாறி இந்த இதிகாசத்தைக் கொடுத்தாய் என்று அதிசயித்திருக்கிறேன். என் பூமியைத் தாயாக ஏற்று நீ மறுபடியும் பிறந்திருக்கிறாய்" என்று பிழம்பான இயக்குனர், "இவன் எனக்கு மகன் முறை. கொஞ்சம் எக்குத் தப்பா பிறந்திருந்தான்னா எனக்கு வாக்கப்பட்டிருப்பான்" என்றதும் சிரிப்பலை!

"எனது மனத்தின் வலி, கண்ணீர், இரத்தம் ஆகியவற்றை நாற்பத்திரண்டு ஆண்டுகள் தூக்கிச் சுமந்த சுமையை எழுதினேன். அதுதான் இந்த இதிகாசம். இந்தப் படைப்பில் நான் ஒரு மாணவன். இன்னும் பேயத் தேவர்கள் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். நதிகள் தேசிய மயமாக்கப்படுவதும், போர் இல்லாத ஆண்டாக இந்த நூற்றாண்டை அறிவிப்பதும்தான் பேயத் தேவரின் கனவு நனவாக வழிகள்" என்று முடித்தார் வைரமுத்து.

"இங்கே தமிழ் மழை பொழிகிறது. இந்த மழையாவது பொழிகிறதே என்று ஆறுதல் அடைந்தேன்" என்று கலக்கலாக தொடங்கிய கலைஞர் நாவல் பற்றி பேசிவிட்டு, "இவ்வளவு பேரும் புகழும் பெற்ற தம்பிக்குக் களங்கத்தை ஏற்படுத்த வேண்டும் என்பதற்காக ஒரு செய்தி வந்திருக்கிறது.

தி.மு.க. ஆட்சியில் அவருக்கு ஒன்னே கால் கிரவுண்ட் நிலத்தைக் குறைந்த விலைக்குக் கொடுத்துவிட்டார்கள் என்றெல்லாம் சொல்கிறார்கள். நான்கு கோடி ரூபாய் டான்ஸி நிலத்தை ஒன்னே கால் கோடிக்கு வாங்கியவர்கள் இப்படிச் சொல்கிறார்கள். வீட்டு வசதி வாரியம் நிர்ணயித்த விலைக்கு, எந்த நீதி மன்றத்திற்குச் சென்றாலும் தவறு என்று சொல்ல முடியாத அளவுக்குத் தரப்பட்டுள்ள நிலம் அது. தம்பி வைரமுத்து, உன் ஆற்றலுக்கு, உன் திறமைக்கு ஒரு கிரவுண்ட் என்ன? ஒரு ஊரையே பரிசாகத் தரலாம்" என்று முடித்ததும் வைரமுத்து உட்பட எல்லாரும் நெகிழ்ந்துதான் போனார்கள்.

- ஏக்நாத்

அந்த மனிதருக்குக் காயம் எதுவுமில்லை. பயங்கர விபத்திலிருந்து தப்பி ஓடி வந்தவருமில்லை. அவருடைய உடைமை எதுவும் பறி போகவுமில்லை.

ஆனாலும் நடுத்தெருவில் நின்று கொண்டு, புகையையும் நெருப்பையும் அள்ளி வீசிக்குக் கொண்டு சரிந்தவாறு இருக்கும் உலக வர்த்தக மையக் கட்டடத்தைக் கையைக் காட்டி, கண்ணீர் கொட்டி அழுதார். 'ஐயோ! என்ன அற்புதக் கட்டடம்! இப்படி நாசம் பண்ணி விட்டார்களே!' என்று.

நடுங்கி ஓடுகிறவர்களையும், ஆம்புலன்ஸ்களையும், பைத்தியம் பிடித்த மாதிரி அலறுகிறவர்களையும் டீவியில் மணிக்கணக்கில் பார்த்துப் பரிதவித்த போதிலும் இந்த ஒரு மனிதரின் அழுகைதான் உள்ளத்தைப் பிளந்தது. கையகலச் சிற்பமானாலும் சரி, வானளாவிய கட்டடமானாலும் சரி, அழகு அழியும்போது யாருக்குத் தான் அழுகை வராது?

அந்தப் பயங்கர நேரங்களில் ஸ்டார் நியூஸ் புத்திசாலித்தனமாக ஒரு பணி புரிந்தது. தொலை தொடர்புகள் முற்றிலும் தொலைந்து போனதால், நியூயார்க்கில் எந்த உறவினர், எந்தச் சிநேகிதர் என்ன ஆனாரோ என்று இங்குள்ளவர்கள் தவித்துக்கொண்டிருந்த சமயம், செய்திகளின் கீழே 'முகுந்தன் பத்திரமாயிருக்கிறார், கேசவ் பத்திரமாயிருக்கிறார், ஜோசப் பத்திரமாக இருக்கிறார்' என்று பெயர்களை ரிப்பனாகக் காட்டிக் கொண்டேயிருந்தது. இங்குள்ளவர்கள் அடையாளம் தெரிந்து கொள்வதற்காக அவர்களுடைய ஈ மெயில் குறிப்பையும் கூடவே தந்தார்கள். Many Know what to do, but few actually do what they know என்று ஒரு மூதுரை கூறுகிறது. அந்தச் சிலரில் ஒருவரான ஸ்டார் நியூஸ் வாழ்க!

இது நிற்க. ஆயுதத் தாக்குதலில் ஈடுபடுகிறவர்களைத் 'தீவிரவாதிகள்' என்றே பத்திரிகைகளிலும் டீவிக்களிலும் குறிப்பிடுகிறார்கள். இது சரியல்ல. தீவிரவாதிகள் என்போர் பேச்சளவில் நிற்பவர்கள். பயங்கரச் செயலில் இறங்கும் கீழ்மக்களை 'பயங்கரவாதிகள்' என்றல்லவா குறிப்பிட வேண்டும்?


• விருதுடன் மீராநாயர்

# அழகு சரிந்த அநியாயமே!

விஷ்ணோத்

அரசியல் சாசனம் மேலானதா, மக்களின் வாக்கு மேலானதா என்று 'We, the People' நிகழ்ச்சியில் அலசினார்கள். (புரிந்திருக்குமே? உச்ச நீதிமன்றம் விசாரித்து வரும் ஜெயலலிதாவின் வழக்கைப் பற்றித்தான்.)

அவையினரில் பெரும் பகுதியினர், பேப்பர் ஞானம் மட்டுமே உள்ள வட இந்தியர்கள். இங்குள்ள ground reality தெரியாமலே கருத்து வீசினார்கள். அவர்களாவது பரவாயில்லை. ஒரு தமிழ்ப் பெண்மணி, 'கிராமவாசிகள் தங்கள் கிராமத் தலைவன் என்ன சொன்னானோ அதன்படி வோட்டுப் போட்டார்கள். ஜெயலலிதா என்றால் யாரென்றே அவர்

களுக்குத் தெரியாது!' என்று சொன்னதுதான் மகா ஆச்சரியம்.

'எங்கள் அம்மா ஒரு தெய்வம்! எந்த நெருக்கடியின்போதும் ஜொலிப்பார்!' என்று அதிமுக எம்.பி மலைச்சாமி சிறப்புத் திரையில் உணர்ச்சி வசப்பட்டுப் பேசியது மிகையாக இருக்க லாம். ஆனால் கூட்டத்தினர் கடகட வென்று சிரித்தது நாகரிகமாக இல்லை.

அறிவு முதிர்ச்சியும் அனுபவ ஞானமும் கொண்டிருந்த ஒரு சீக்கியப் பெரியவர் அருமையாக முத்தாய்ப்பு வைத்தார். 'இங்கு கூடியுள்ள நாமெல்லாம் படித்தவர்கள். அதனால் படிப்பறிவில்லாத கிராமவாசி களுக்கு ஒன்றும் தெரியாது என்றும், பணம் வாங்கிக்கொண்டு வோட்டுப் போடுகிறார் கள் என்றும் நினைக்கிறோம். இது ஒரு மேட்டுக்குடித் திமிர்!' என்றார்.

'Learning sleeps and snores in libraries, but wisdom is wide awake everywhere' என்றார் ஜாஷ் பில்லிங்ஸ்.

'கோடீஸ்வரி'க்கான முன்னோடி விளம்பரங்களில் (ஜெயா) இந்த உடம்பை வைத்துக் கொண்டு என்ன குதி குதிக்கிறார் குஷ்பு! குதூகலக் குஷ்பு! அவருக்கு மேலே குதிக் கிறார்கள், பரிசு பெற்ற பெண்கள். ஏற்கெனவே பதின்மூன்று எபிஸோடுகள் எடுக்கப்பட்டு விட்டன என்றும், அவர் களில் இரண்டு பேர் லட்சாதிபதியாகி விட்டார்கள் என்றும் ஹிந்துவில் செய்தி வந்துள்ளது. ('லட்சாதி பத்தினிகள்' என்பதுதான் சரியான சொல்லாக இருக் குமோ!)

தொடர்ந்து நான்கு வெற்றி பெற் றதற்காக விஜய்க்குப் பாராட்டு நடத்த மேடையிலும் தோன்றினார் குஷ்பு. ரசிகர்களால் கோவில் கட்டப்பட்ட நட் சத்திரம் என்று நிகழ்ச்சித் தொகுப்பாளர் சொன்னதைக் குறிப்பிட்டு, 'எனக் குக் கோவில் கட்டியது இருக்கட்டும். நம்ம இளைய தளபதிக்கு எப்போ கோவில் கட்டப் போறீங்க?' என்று சொல்லிக் கைதட்டலை அள்ளிக் கொண் டார். He is truly happy who makes others happy.



ஈரானில் பெண்கள் பிரமாதமாக முன்னேறிக் கொண்டிருந்தது அந்த நாட் டின் அதிபர் ஹஷீமிக்குப் பொறுக்க வில்லை. Women have smaller brain than men என்று கேலி செய்தார். ஆனால் அவர் கூற்றைப் பொய்யாக்கிக் கொண்டு வருகிறார்கள் பெண்கள். லேட்டஸ்ட் உதாரணம்: மீரா நாயர்.

என்றைக்கு 'ஸலாம் பாம்பே' எடுத்தாரோ அன்றைக்கே பிரபலமாகி விட்டவர், வெனிஸ் திரைப்பட விழாவில் 'monsoon wedding' படத்திற்குப் பரிசு பெற்ற முதல் இந்தியர், முதல் பெண் என்ற பெருமையையும் பெற்றுவிட்டார். துண்டுக் காட்சிகளைப் பார்த்தால் வேடிக்கையாக ஆடிப்பாடும் ஒரு திருமண விழாதான் தெரிகிறது. அத னுள்ளே என்னென்ன பொதிந்து வைத்திருக்கிறாரோ!

வெட்டிய கூந்தலும் ஒட்டிய கரிதாருமாகக் காணப்பட்ட புஷ்டியான மீரா நாயர், 'விருது கிடைத்தது எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது' என்றார். நமக்கும்தான்.

சில இடங்களில் தேவதைகள் பிரார்த்தனை பண்ண, அப்படியே பிரத்யக்ஷமாக வந்துவிடுவான் பகவான். அந்த இடங்களிலே அவனுக்கு தெய்வம் என்று பெயர்.

மஹரிஷிகளெல்லாம் தபஸ் பண்ணுகிறார்கள். மார்க்கண்டேயர் தபஸ் பண்ணினால், அவருக்காகப் பிரத்யக்ஷமாகி அங்கேயே இருக்கிறான். சாலிஹோத்ர மஹரிஷிக் காக அங்கேயே இருக்கிறான். இப்படிப் பட்ட இடங்களுக்கு ஆருஷம் என்று பெயர். ரிஷிகளால் பிரதிஷ்டை பண்ணப்பட்ட இடம்.

மானவம் - மனிதர்களான நம்மால் ஆகம சாஸ்திர ரீதியாகப் பிரதிஷ்டையாவது. அது எந்த ஆகமமானாலும் சரி... சைவ ஆகமமோ, வைகானஸ ஆகமமோ, பாஞ்சராத்ர ஆகமமோ எதுவாயினும் சரி... அதிலே சொல்லப்பட்ட ரீதியிலே விக்ரஹத்தை வைத்து, விசேஷமாக ஆராதனைகள், ஹோமங்கள் பண்ணி, நேத்திரத்தைத் திறந்து, விசேஷமாக பிரதிஷ்டை நடக்கும்.

மனிதர்கள் பிரதிஷ்டை பண்ணும்படியான விக்ரஹத்திலேயும் பரமாத்மா நித்ய சான்னித்யமாய் இருக்கிறேன் என்கிறான்.

இப்படிப் பண்ணப்பட்ட விக்ரஹத்திலே பரமாத்மா இல்லையென்றால், நாம் அதை சேவிப்பதிலே பிரயோஜனம் உண்டா...?

இவ்வாறு உயர்ந்த கோலத்திலே பகவான் காட்சி அளிக்கிறான். அதனால்தான் அந்த திவ்ய திருமேனி விக்ரஹத்தைக் கண்களை அகல விரித்து, நன்றாக சேவிக்க வேண்டும்.

இங்கேயிருந்து போன பக்தருக்கு ஏகமாக பக்தி வந்து விட்டது. என்ன பண்ணினார்-

கற்பூரத்தைத் தூக்கிக் காண்பிக்கிறபோது கண்ணை இறுக்கி மூடிக் கொண்டு விட்டார்! கண்ணை மூடிக் கொண்டு ஏகமாக தியானம்!

அப்புறம் திரும்பி வந்தவரைக் கேட்டால்... 'திருக்கோவலூர் போனீரே; அங்கு என்ன பார்த்தீர்?' என்று கேட்டால்,

'என்ன... பெருமாளைப் பார்த்தேன்!' என்கிறார்!

'பெருமாளிடத்திலே விசேஷமென்ன...? இன்னின்ன மாதிரி இருக்கிறதாமே...?'

'அப்படியா? தெரியவே தெரியாதே!'

'நீர் என்ன பண்ணினீர்...?'

'கண்ணை மூடிக் கொண்டிருந்தேன்!'

- அதனால்தான் ஆசார்யர்கள் எழுதுகிறார்கள். திவ்ய தேசத்துக்குப் போகிறாயா...? பகவானைச் சேவிக்கிறாயா? நன்றாகக் கண்ணைத் திறந்து கொண்டு சேவி!

கண்ணை மூடிக் கொள்ள வேண்டுமானால் திரும்பி வந்து மூடிக்கொள். இங்கே வந்து மூடிக் கொண்டு 'திருக்கோவலூர்' என்று மனத்திலே நினைக்க வேண்டும். நினைத்த உடனேயே கர்ப்பகிருஹம், பிராகாரம் எல்லாம் மனத்திரையிலே ஓட வேண்டும். இங்கே வந்து, பார்த்ததையெல்லாம் அசைபோட வேண்டும்.

'மேய்ச்சல் தரையிலே அசைபோடுவார் உண்டோ?'- கேட்கிறார் பெரியவாச்சான் பிள்ளை!

மேய்கிற இடத்திலே நிறைய புல்

# குறையொன்றுமில்லை

யாத்திரையாகப் போகிறார்கள் பாருங்கள்... அவர்கள் ஒன்றைத் தெரிந்து கொள்ள வேண்டும்- திருக்கோவலூர் போகிறார் என்று வைத்துக் கொள்ளுங்கள்... 'பகவான் இடது கையிலே சக்கரத்தை வைத்துக் கொண்டிருக்கிறான்...' என்று அர்ச்சகர் காண்பித்துக் கொடுப்பார். 'இதோ பாருங்கள்' என்று தீபத் தட்டைத் தூக்கிக் காண்பிப்பார்.

இருக்கிறது. அதை மேய்வதை விட்டுவிட்டு, அங்கே நின்று கொண்டு அசைபோட்டுக் கொண்டிருந்தால் எப்படி மேய்வது...?

அந்த மாதிரி தான் பகவானை நன்றாக சேவிக்க வேண்டிய நேரத்திலே சேவிக்காமல் விடலாமா!

சுவாமி தேசிகன் பாருங்கள்- ரங்கநாதரை நன்றாக சேவிக்கிறார்.

அந்த ரங்கநாதரை சேவிக்கிற எல்லோ

ரும் அவர் சேவிப்பதைக் கவனிக்க வேண்டும். ஏற்கெனவே சேவித்தவர்கள், மறுபடியும் மறுபடியும் சேவிக்கிறவர்கள், இனிமேல் சேவிக்கப் போகிறவர்கள் எல்லோரும் கவனிக்க வேண்டும். அந்த ஹஸ்தத்தைப் பாருங்கள்! ரங்கநாதருடைய ஹஸ்தத்தை...

ரங்கநாதருடைய அபய ஹஸ்தம் இருக்கிறதே அதற்கு தான முத்திரை என்று பெயர். திருவேங்கடமுடையான் தான முத்திரை வைத்துக் கொண்டிருக்கிறான்.




முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

30

எல்லாவற்றையும் கொடுக்கிறேன் என்கிறான்!

'அஞ்சலென கைவைத்து ரங்கநாதர் இருக்கிறாரே... நன்றாக அந்தக் கையைப் பாருங்கள்' என்கிறார் சுவாமி தேசிகன். திருக்கரம் கொஞ்சம் திரும்பியிருக்கிறது. ஏன் அப்படித் திரும்பியிருக்கிறது என்று கேட்டால், அவனிடத்திலே சரணாகதி பண்ணுகிறார்கள் அல்லவா... அவர்களைப் பார்த்துப் 'போதும் போதும்' என்கிறானாம் ரங்கநாதன்.

சரணாகதியை ஒரு தடவைதான் பண்ண முடியும். அசக்ருத்தான காரியம் இல்லை அது; சக்ருத்தான காரியம்.

அசக்ருத்தான காரியம் என்றால் பல தடவை பண்ணக் கூடியது. சக்ருத் என்பது ஒரே ஒரு தடவை மட்டுமே பண்ணக் கூடியது.

அதைப் பல தடவை பண்ணினால் அவனிடத்திலே விச்வாசம் இல்லை என்றுதான் அர்த்தம்!

'அந்த அபய முத்திரை நம்மைக் காப்பாற்றட்டும்' என்கிறார் சுவாமி தேசிகன். இலையிலே பரிமாறுகிற பதார்த்தங்களையெல்லாம் நாம் கையால் ஜாடை செய்து போதும் போதும் என்கிறோமே அப்படி ரங்கநாதரும் 'போதும்' என்று காட்டுகிறார்.

சுவாமி தேசிகன் இந்தத் திருக்கரத்தை இவ்வளவு வர்ணிக்க வேண்டுமானால், எவ்வளவு தூரம் அந்த விக்ரஹத்திலே ஈடுபட்டிருப்பார்!

ஈடுபட்டதால்தானே இதைச் சொல்ல முடியும்!

ஆகையினாலே, அர்ச்சாவதார சௌலப்யம் என்பது மிகவும் அழகான விஷயம். எம்பெருமான் நமக்காகவே கோவில்களிலே எழுந்தருளியிருக்கிறான். அகிஞ்சனர்களான நமக்கெல்லாம் அவனை சதா ஹ்ருதயத்திலே தாங்கி நிற்கக் கூடிய சக்தி கிடையாது. ஆகையால் அங்கங்கே திவ்ய தேசங்களிலே கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கிறானே, அந்த திவ்ய மங்கள விக்ரஹத்தை கண்களாற சேவிக்க வேண்டும். அதிலிருக்கிற பெருமையை உணர வேண்டும்.

பார்த்தசாரதி பெருமாளின் திருமுகம் மொத்தமும் புள்ளி புள்ளியாக இருக்கிறது.

ஏன் இவனுக்கு இவ்வளவு புள்ளிகள்? என்று கேட்டார்.

கோபஸ்த்ரீகளுக்கு நடுவிலே அவன் ராஸக் கிரீடை பண்ணினான். ஒரு கோபஸ்த்ரீக்கும் இன்னொரு கோபஸ்த்ரீக்கும் நடுவிலே ஒரு கிருஷ்ணன். இப்படியே பல கிருஷ்ணன்கள் இருந்து வர, கோபஸ்த்ரீகள் நாட்டியமாடி நாட்டியமாடி களைத்துப் போய் கிருஷ்ணனுடைய தோளில் சாய்ந்து கொண்டு அந்த கிருஷ்ணனுடைய திருமுக மண்டலத்திலே முத்தம் கொடுத்தார்களாம். அந்த முத்தத்தை இன்றைக்கும் பார்த்தசாரதி காட்டிக் கொண்டிருக்கிறான். துவாபர யுகத்திலே அவர்கள் கொடுத்த முத்தத்தை இன்று திருமுக மண்டலம் முழுவதிலும் காட்டுகிறான். அப்படியானால் அந்த எம்பெருமானுக்கே திவ்யமான விக்ரஹ ரூபத்தில் எவ்வளவு ஈடுபாடு பாருங்கள்!

அப்படிப்பட்ட அர்ச்சா மூர்த்தியிடம் ஈடுபட, அவன் அந்த மூர்த்தி வழியாகவே நமக்கு அருள் பாலிக்கிறான்.

இந்தளூர் என்று ஓர் ஊர். அந்த ஊருக்குப் போனார் திருமங்கையாழ்வார். எம்பெருமான் அவருக்குக் காட்சி கொடுக்கவில்லை. 'எனக்குக் காட்சி கொடுக்காத நீர் இருந்தால் என்ன? இல்லாவிட்டால் என்ன...' என்று கோபித்துக் கொண்டு புறப்பட்டுப் போய்விட்டார் ஆழ்வார்! அங்கிருந்து திருக்கண்ணமங்கை என்ற ஊருக்குப் போனார். தேவதைகளெல்லாம் தேனிக்களாயிருந்து கர்பகிருஹத்திலே கூடுகட்டி, அந்தத் தேனை நித்யம் விசேஷமாய் எம்பெருமானுக்கு நிவேதனம் பண்ணிய ஊர் அது. அப்படிப்

## அருள்வாக்கு

**ம**நு முதலான மஹா பெரியவர்கள் ஸகல மக்களுக்கும் அஹிம்ஸை, ஸத்யம், திருடாமை, தூய்மை, புலனடக்கம் என்ற ஐந்து உயர்ந்த பண்புகள் இருக்க வேண்டுமென்று சொல்லியிருக்கிறார்கள். இந்த ஐந்தையும் நாசம் பண்ணுவதாக ஆசை என்பது இருக்கிறது.

ஹிம்ஸை ஏன் செய்கிறோம்? மாம்ஸத்தில் உள்ள ஆசையினால். இன்னொருத்தனிடமுள்ள ஒரு பொருளில் நமக்கு ஏற்படும் ஆசையால் அவனை ஹிம்ஸித்தாவது அதைப் பெறப்பார்க்கிறோம்.

ஸத்யத்தை ஏன் விடுகிறோம்?

ஆசை வைத்த எதையும்
ஸத்யமான முறையில் போய்
அடைய முடியாது என்பதால்
தான் இப்படிச் செய்கிறோம்.
நம்மைக் காப்பாற்றிக்
கொள்ள வேண்டும்;
நம்முடைய ஸொத்து,
நம்முடைய அந்தஸ்து, மானம் போன்ற
எதுவோ ஒன்றைக் காப்பாற்றிக்
கொள்ள வேண்டும் என்ற
ஆசைக்காகத்தான் பேசுகிற
பொய்யெல்லாம்; பண்ணுகிற
மோசடியெல்லாம்.

பொருளிடத்திலுள்ள
ஆசையால்தான் திருடுவது என்பதை
விளக்க வேண்டிய அவச்யமில்லை.

ஆசார சுத்தியைவிட்டு விடுவது,



'மனஸ் போனபடி
ஸௌகர்யங்களை
அனுபவிக்க வேண்டும்'
என்ற ஆசையினால் தான்.

புலனடக்கம் போவது
ஆசையால்தான் என்பதைச்
சொல்லவே வேண்டாம்.

அதாவது மநு சொன்ன
ஐந்து பெரிய தர்மங்களையும் மீறப்
பண்ணுவது ஆசைதான்.

அறுபகைக்கு மூலம், ஐந்து
தர்மங்களையும் நிர்மூலம் செய்வதற்கும்
காரணம் – என்றிப்படி ஸகல
தோஷங்களுக்கும் பிறப்பிடமாக
இருப்பது ஆசைதான்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய ஸ்வாமிகள்

பட்ட விசேஷமான திருக்கண்ணபுரத்துக்குப் போனார் ஆழ்வார்.

பகவான் பார்த்தான்... இந்தவூரிலே காட்சி கொடுக்காதவன், திருக்கண்ணமங்கையிலே காட்சி கொடுத்தான் ஆழ்வாருக்கு. 'கண்ணமங்கையில் கண்டுகொண்டேன்' என்றார் அவர். அந்தத் திருமங்கையாழ்வாருடைய திருமுக மண்டலத்திலே என்ன பொலிவு! அந்த பகவானுடைய திருமுக மண்டலத்திலேதான் என்ன பொலிவு! அர்ச்சாவதாரத்தையே ஆட்டிப் படைத்த பெருமை திருமங்கையாழ்வாருக்கு; ஆட்டுவிக்கப்பட்டு மகிழ்ந்தான் பரமாத்மா!

திருக்குடந்தையிலே பாருங்கள் – கும்பகோணத்திலே – அங்கே. என்னவென்றால் படுத்துக் கிடந்த எம்பெருமான் எழுந்தான்.

நடந்த கால்கள் நொந்தவோ? நடுங்கு
ஞாலம் ஏனமாய்
இடந்த மெய் குலுங்கவோ? இலங்கு மால்
வரைச் சுரம்
கடந்த கால் பரந்த காவிரிக் கரைக்
குடந்தையுள்
கிடந்தவாறு எழுந்திருந்து பேசு; வாழி
கேசனே!

'என்ன சௌலப்யம்! நான் எழுந்திரு என்று சொன்னதும் நீ எழுந்துவிட்டாயே! இப்படியே நீ இரு – வாழி!' என்று பாடினார் ஆழ்வார். அதனால் திருக்குடந்தையிலே பார்த்தால், கிடந்த கோலத்திலேயும் கொஞ்சம் தலையைத் தூக்கியவாறு இருப்பான் எம்பெருமான். அந்த ஆழ்வார் எப்படிக் கண்டாரோ, அப்படியே காட்சி!

இப்படியே ஒவ்வொரு திவ்ய தேசத்திலும் நாம் பார்த்துக் கொண்டே போனோமேயானால் எவ்வளவு அதிசயங்கள்!

ஆகையினாலே, அர்ச்சாவதாரமும் அவதாரம்தான். ராமாவதாரம், கிருஷ்ணாவதாரம் மாதிரிதான் அவையும்.

அடுத்தது பாருங்கள்... எல்லோருக்குள்ளேயும் அந்தர்யாமியாக இருக்கிறான் பரமாத்மா. ஆகையால் அதுவும் பகவானுடைய ஒரு ஸ்தானம்.

இப்படி ஐந்து இடங்களிலே அவன் இருக்கிறான்:

ஹ்ருதய குகையிலே, விக்ரஹத்திலே, அவதார காலத்திலே, திருப்பாற்கடலிலே, பரம் என்கிற வைகுண்டத்திலே! அந்தர்யாமியாக அவன் எல்லோருக்குள்ளேயும் இருக்கிறான் என்பதைத்தான் 'விச்வம் விஷ்ணுர் வஷட்காரோ' என்று ஆரம்பித்து சஹஸ்ரநாமம் சொல்கிறது.

விச்வம் – சர்வ வியாபி – எங்கும் பரவியிருக்கிறான்.

பிரதானமாய் எங்கே இருக்கிறான் என்றால் வைகுண்டம் என்ற திவ்ய ஸ்தானத்தில். இதையே 'விச்வம் பரம்' என்று வேதம் இன்னொரு இடத்தில் சொல்கிறது. பர-வாசுதேவனைக் குறிக்கும்படியான சொல் விச்வம்.

(வளரும்)


• பொன்னையன்


• ஜெகத்ரட்சகன்

## காதில் விழுந்தவை

# 'ஜெ' ஹோட்டல் ரெடி!

தமிழக அமைச்சர்களின் செயல்பாடுகள் எப்படியிருக்கின்றன? கோட்டையில் அரை நாள் செலவழித்து நமது தொடர்புகளைத் தட்டிப் பார்த்தோம்.

காலை ஒன்பது மணிக்கு கோட்டைக்கு வந்தால் இரவு பத்து மணிவரை இருப்பவர் பொன்னையன்தான். ஜெயலலிதா தமது வழக்குகள் தொடர்பாக பிஸியாக இருக்கும் நிலையில், பெரும்பாலான அமைச்சர்கள் பலாப் பழத்தை ஈக்கள் மொய்ப்பது போல் பொன்னையனைச் சுற்றி வருகிறார்கள். ஒரே நாளில் பல முறை பொன்னையன் அறையில் அமைச்சர் குழுக்களின் கூட்டம் நடக்கிறது. பொன்னையன் 'நிதி'யைக் கையாள்வதும் அதற்கு ஒரு காரணம். மான்ய கோரிக்கைகள் மீது பேசும் அமைச்சர்களின் உரையைச் சரி பார்த்துக் கொடுப்பவர் அவர்தானாம்.

"ஜெயலலிதா பதவி விலகும் பட்சத்தில் பொன்னையனே முதல்வர்'' என்று உறுதியாகச் சொல்கிறார்கள் அவருக்கு நெருங்கியிருப்பவர்கள். ஸீனியரான தம்பித்துரை கொஞ்சம் 'சிடுசிடு'டைப் என்பதால், அரசின் மூத்த செயலாளர்கள் கொஞ்சம் ஃப்ரீயாக பேசுவதும் பொன்னையனிடம்தான்.

புதிதாக வந்திருக்கும் அமைச்சர்களில் நைனார் ராசேந்திரன், பாண்டுரங்கன் (அம்மாவைப் பார்த்தால் கன்னத்தில் போட்டுக் கொள்பவர்) ஆகியோர் அறைகளில் தொண்டர்கள் கூட்டம் நெருக்கியடிக்கிறது. "மக்கள் (அ.தி.மு.க. தொண்டர்கள்) பிரச்னைகளைக் கவனிக்கவே நேரம் சரியா இருக்கு. கோப்புகளை எங்கே பார்ப்பது?" என்று நிருபர்களிடம் சொல்கிறார் பாண்டுரங்கன். சென்னையைச் சேர்ந்த அமைச்சர் ஜெயகுமாரின் அறையில் அப்படியொரு கூட்டம். 'அண்ணே, காசிமேடு ஸ்டேஷன் அண்ணே...' என்ற லோக்கல் பிரச்னையில் துவங்கி, த்ரீஃபேஸ் கனெக்ஷனுக்குச் சிபாரிசு வரையில் அமைச்சரைப் 'பிலு பிலு'வென பிடித்துக் கொள்கிறார்கள்.

ஆர்.எஸ்.எஸ். அமைப்பிலிருந்து சண்முகநாதன் என்பவர் பா.ஜ.க. வேலைகளை கவனிக்க அனுப்பி வைக்கப்பட்டிருப்பதால் இல. கணேசனின் செல்வாக்கு கொஞ்சம் சரிந்திருக்கிறது. லட்சுமணன், ராஜா போன்றவர்களிடம் அம்மா பாசம் பொங்கி வழிவதும், தலைவர் கிருபாநிதி தனி ஆவர்த்தனம்வாசிப்பதும், இதற்கிடையில் மத்திய அமைச்சர் பொன். ராதாகிருஷ்ணன், கட்சி விவகாரங்களில் ஆதிக்கம் செலுத்துவதும் ஒரே பதற்றமாக இருக்கிறது. இந்த நிலையில் உள்ளாட்சித் தேர்தல் வந்து விட்டதால் 'போட்டி, பொறாமைகளை மூட்டை கட்டி வைத்து. தி.மு.க.வுடன் போராடி நிறைய இடங்களை வாங்குங்கள்' என்று மேலிடம் அறிவுறுத்தியிருக்கிறது. குறிப்பாக கோவை, திருச்சி மாநகராட்சிகளை, பா.ஜ.க. வாங்க வேண்டும் என்று முனைந்திருக்கிறார்கள் கட்சிப் பிரமுகர்கள்.

சென்னை ஜி.என். செட்டி சாலையில் 'ஜெ. ஹோட்டல்' வேலைகள் மும்முரமாக நடந்து வருகின்றன. உரிமையாளர் நீங்கள் நினைப்பவர் அல்ல. எம்.ஜி.ஆர். கழகம் பொதுச் செயலாளர் ஜெகத்ரட்சகன்.

— சஞ்சயன்

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 275/-; Overseas : Rs. 2000/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 140/-; Overseas : Rs. 1000/- (Air Mail)